# சங்ககால மன்னர்களின் காலநிலை

தொகுதி - 1


ஆசிரியர்கள்

டாக்டர் பத்மஜா ரமேஷ்

வி.பி. புருஷோத்தமன்





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை

# சங்ககால
# மன்னர்களின் காலநிலை
## [தொகுதி ஒன்று]


ஆசிரியர்கள்

*டாக்டர் பத்மஜா ரமேஷ்*

*வி.பி. புருஷோத்தமன்*






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி

சென்னை 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Sanghakāla Maṉṉarkaḷin Kāla Nilai [Volume - I] |
| Authors | : | Dr. Padmaja Ramesh<br>V. P. Purushothaman |
| Copyright | : | Authors |
| Publisher | : | International Institute of Tamil Studies |
| First Edition | : | 2000 |
| Publication No. | : | 361 |
| Language | : | Tamil |
| Paper used | : | TNPL 17 kg. Creamwove |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 11 points |
| No. of pages | : | viii + 248 |
| Price | : | Rs. 56/- |
| No. copies | : | 1000 |
| Typeset & Printed by | : | **Shri Vignesh Prints**<br>158/5, Lake View Road,<br>West Mambalam, Chennai-33.<br>Ph: 4748486 |
| Subject | : | Chronology of the Kings and Chieftains of the Sangham Age |

Printed at : United Bind Graphics
101-D, Royapettah High Road
Luz, Mylapore, Chennai - 4
Ph. : 4984693, 4661807

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113.

## அணிந்துரை

'இந்திய மக்களின் வரலாறும் பண்பாடும்' என்ற நூலில்,கி.மு. 600 முதல் கி.பி. 320 வரையிலான கால நிலையின் வரலாற்றைக் கூறும் இரண்டாம் தொகுதியில், சங்க கால வரலாறு ஏன் எழுதாமல் விடப்பட்டது என்பது குறித்து வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் ஆர்.சி.மசூம்தார் பின்வருமாறு விளக்குகிறார்:

"தமிழ் இலக்கியத்தின் புகழ்பெற்ற சங்ககாலம் இந்தக் காலநிலைக்குள் (கி.மு.600 - கி.பி. 320) அடங்குகிறது என்றபோதிலும்,சங்க இலக்கியத்திலிருந்து ஒருவருக்கொருவர் தொடர்பில்லாத சில மன்னர்களின் பெயர்களையும் அவர்களது வீரச்செயல்களையும் அரைகுறையாக அறிய முடிகிறதேயன்றி அவர்களை இணைக்கும் பிணைப்பு இல்லை.(சங்க) இலக்கியமும் பிற ஆதாரங்களும் மக்களின் சமூக,பொருளியல் சமயநிலையைக் குறிப்பாக மேலைநாடுகளோடு நடந்த பரந்த வாணிகத்தைப் பற்றியும் நமக்குத் தெரிவிக்கின்றன, என்றாலும் அரசியல் வரலாறு என்ற கட்டமைப்பு இல்லாத குறையை நாம் உணர்கிறோம்'*

---

'*(And though the brilliant Sangam age of Tamil literature falls within this period (600 B.C. - A.D.320),even if it is not wholly covered by it, we can glean from it only the names of a few isolated kings and their heroic achievements without any connecting link while the literature and other sources give us glimpses of social,economic and religious conditions of the people,and particularly of their extensive maritime trade with the West,we miss the framework of political history against which alone they can be studied in their true perspective``

The History and Culture of the Indian People -Volume II- preface by Dr.R.C.Majumdar, page xliii- Bharatiya vidya Bhavan (1951, 6th edition 1990)

'சங்ககால மன்னர்களின் காலநிலை' என்ற இந்த நூல் சங்க கால *வரலாற்று மூலங்களினின்று* கட்டமைப்பாக அரசியல் வரலாற்றை அறிய இயலவில்லை என்று மசூம்தார் சுட்டிய குறையை நீக்கத் துணை புரியும். இவ்வாறு சுட்டுவதால் இதற்கு முன் சங்ககால வரலாறே எழுதப்படவில்லை என்பது கருத்தன்று. வி.கனகசபையின் *'1800* ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர்',புலவர் கோவிந்தனின் 'சங்ககால அரசர் வரிசை',சி.இ.இராமச்சந்திரனின் 'சங்க கால வரலாறு',பிடி. சீனிவாச அய்யங்காரின் 'தமிழர் வரலாறு',கே.ஜி. சேசஅய்யரும், அ.சிதம்பரனாரும்,ஔவை துரைசாமியும், சீனி.வேங்கடசாமியும், மு.இராகவையங்காரும் எழுதிய சேரர் வரலாறுகள், சதாசிவ பண்டாரத்தாரும்,கே.வி.இராமனும்,எஸ்.கனகராச அய்யரும் எழுதிய பாண்டியர் வரலாறுகள், கே.ஏ. நீலகண்ட சாத்திரியும், மா.இராசமாணிக்கனாரும் எழுதிய சோழர் வரலாறுகள் முதலியவை சங்ககால வரலாற்றைக் கூறும் நூல்களே ஆகும். கால ஆராய்ச்சி குறித்த நூல்களுள் எல்.டி சாமிக்கண்ணு பிள்ளையின் 'Indian Ephemeris' என்ற நூலும் குறிப்பிடத்தக்கது.

ஆயினும் சில நூல்கள் மனுநீதிச் சோழனையும்,மகாபாரதச் சேரனையும், முசுகுந்தனையும், முருகக் கடவுளின் அவதாரமான உக்கிரகுமார பாண்டியனையும்,பொற்கைப் பாண்டியனையும் பிற புராணத் தலைவர்களையும் சங்க காலத் தலைவர்களாகக் காட்டுகின்றன.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, ஆகிய சங்க இலக்கியத்தில் காணப்படும் தலைவர்களின் காலநிலையை அறிவியல் அடிப்படையில் கணித்து அவ்வாறு கணிக்கப்பட்ட கால நிலையின் அடிப்படையில் தலைவர்களின் வரலாற்றை மேற்சுட்டிய நூல்களில் காண இயலவில்லை. அறிவியல் நெறியின் அடிப்படையில் சங்க இலக்கியத்தில் காணப்படும் தலைவர்களின் கால நிலையை அறியும் அரிய முயற்சியில் முதன்முதலாக ஈடுபட்டு உழைத்தவர் அறிஞர் கே.என். சிவராச பிள்ளை ஆவார். அவர் *1932*-இல் எழுதி வெளிவந்த *முற்காலத் தமிழர்* காலநிலை Chronology of the early Tamils எனும் நூல் இத்துறையில் வெளிவந்த முதல் நூலாகும். அறிஞர் சிவராசபிள்ளை தன்னுடைய நூலில் உத்தேசமாக *100* தலைவர்களின் காலநிலைகளைக் கணித்து அவர்கள் பத்துத் தலைமுறைகளில் -கிமு. *50* முதல் கிபி. *200* வரையிலான கால எல்லையில் *வாழ்ந்தவர்களாக எழுதியுள்ளார். இவரைப்பின்பற்றி டாக்டர் பத்மஜா ரமேஷ்* அவர்கள் விபிபுருசோத்தமன் உதவியுடன் 'சங்ககால மன்னர்களின் காலநிலை' என்ற இந்த நூலை எழுதியிருக்கிறார்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் எல்லாத் தலைவர்களும் இந்நூலில் இடம் பெற்றிருக்கிறார்கள்.

புராணக் கதைகளையும் புனைந்துரைகளையும்,ஒதுக்கிவிட்டுச் சங்கப் பாடல்களையும், தமிழ்-பிராமி கல்வெட்டுகளையும்,சங்கால மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களையும், மௌரியர்,சாதவாகனர், சிங்களவர்,கம்போடியர் முதலிய அயலவரின் வரலாறுகளையும், அடிப்படையாகக் கொண்டு சங்க காலத் தலைவர்களின் காலநிலை என்ற இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

ஆராய்ச்சியில் கருத்து வேறுபாடுகளுக்கு இடமுண்டு.இதுதான் முடிந்த முடிவு என்று எந்த ஆராய்ச்சியாளரும் சொல்லிவிட முடியாது. சங்க இலக்கியம் எவை என்பதிலும் ,சங்க காலம் எது என்பதிலும் பல மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. இந்நிலையில்,சங்க காலத் தலைவர்களின் அறுதிக் காலநிலை(Absolute chronology)கி.மு. *350* முதல் கி.மு. *25* வரை என்று இந்த நூல் கூறுவதை ஆய்வாளர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்வார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால் ஒருதலைமுறையைச் சார்ந்த தலைவர்களின் சார்பு காலநிலையில்(Relative Chronology)மாற்றம் செய்வதற்கு அதிக வாய்ப்பில்லை. எனவே சங்க காலம் எது என்பதில் மாறுபட்ட கருத்துக்கள் கொண்டவர்களுக்கும் சங்க கால அரசியல் வரலாற்றைக் கோவையாக எழுதுவதற்கு இந்நூல் துணைபுரியும். இந்நூலை நிறுவனம் இரு தொகுதிகளாக வெளியிடுகின்றது.

நூல் ஆசிரியர்கள் இருவரில் முன்னவர் மருத்துவர், பின்னவர் வழக்கறிஞர்.இவர்கள் இந்நூல் எழுதுவதைத் தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு,பல்லாண்டுகள் உழைத்து இந்நூலை எழுதி முடித்திருக்கிறார்கள். இவ்விருவர் முயற்சியையும், ஆர்வத்தையும் பாராட்டி மகிழ்கிறேன்.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டிவருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு.சு.இராமகிருட்டிணன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்க்கும் நன்றி.-

இயக்குநர்

# முகவுரை

இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.
(தமிழ் விடுதூது)

இன்று நமக்குக் கிடைக்கும் **2381** சங்கப் பாடல்களில் ஏறத்தாழ இருநூறு தலைவர்கள் பாடப்படுகிறார்கள். இவர்கள் **அனைவருடைய** காலநிலையையும் சங்கப் பாடல்கள், தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள், நாணயங்கள் ஆகியவற்றின் துணைகொண்டு சங்ககால மன்னர்களின் கால நிலை இந் நூல் ஆராய்கிறது.

எங்களுக்குத் தெரிந்தவரை சங்ககாலத் தலைவர் **எல்லோருடைய** காலநிலையையும் அறுதியிட்டுக் கூறும் முதல் நூல் இதுவேயாகும்.

கே.என். சிவராசபிள்ளை எழுதிய (Chronology of the early Tamils, 1932) 'முற்காலத் தமிழர் காலநிலை' நூலில் சங்ககாலத் தலைவர் பலருடைய காலநிலையைச் சுருக்கமாக ஆராய்ந்துள்ளார். வி.பி.புருஷோத்தமன் எழுதிய 'சங்ககால மன்னர் காலநிலை வரலாறு - தொகுதி I' *(1989)* என்ற நூலில் சங்ககாலச் சேரர் காலநிலை மட்டுமே கணிக்கப்பட்டுள்ளது. இவ்விரு நூல்களையும் முன்னோடிகளாகக் கொண்டே இந்த நூலை எழுதியிருக்கிறோம்.

மற்றும், இந்த நூலை உருவாக்கப் பத்தாண்டுகள் மிகக் கடினமாக உழைக்க வேண்டி இருந்தது, நூற்றுக் கணக்கான நூல்களை ஆராய வேண்டி நேர்ந்தது.

இந்த நூல் இரு தொகுதிகளாக வெளியிடப் படுகிறது. முதல் தொகுதியில் சங்க இலக்கியம், சங்க காலம் பற்றிய அடிப்படைச் செய்திகளும், கால நிலைக் கணிப்பிற்கு மேற்கொள்ளப்பட்ட கோட்பாடுகளும் கூறப்பட்டுள்ளன. மேலும், சங்ககாலச் சேர, சோழ, பாண்டியரின் காலநிலை

ஆராயப்பட்டு நிர்ணயிக்கப்படுகிறது. இந்தக் கால நிலையின் அடிப்படையில் சங்ககால மூவேந்தர் வரலாற்றைக் கூறியிருக்கிறோம்.

நூலின் இரண்டாம் தொகுதியில் சங்கத்தலைவர் அனைவரும் இடம் பெறுகிறார்கள். ஏறத்தாழ இருநூறு தலைவர்களைப் பதின்மூன்று தலைமுறைகளில் பிரித்திருக் கிறோம்.

இரண்டாம் தொகுதியின் இறுதியில் இணைக்கப்பட்ட 'சங்ககாலத் தலைவர் அகராதி' நூலின் சுருக்கமாக அமைந்துள்ளது.

சங்ககால வரலாற்றைக் கோவையாக எழுதுவதற்கு இந்த நூல் துணைபுரியும் என்று நம்புகிறோம்.

சென்னை
16.11.1999

டாக்டர் பத்மஜா ரமேஷ்
வி.பி. புருஷோத்தமன்

# நன்றியுரை

1. இந்நூலை எழுதலாமா வேண்டாமா என்று தயங்கிய போது, நூலை எழுதும்படி உற்சாகப்படுத்தி, நூலை எழுதியபிறகு அதை வெளியிடுவதற்கு வழியும் காட்டியவர் சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தர் முனைவர் பொன். கோதண்டராமன் (பொற்கோ) ஆவார். இந்தக் காலத்திலும் வல்லவரான சில நல்லவர்கள் இருக்கிறார்கள் என்பதற்கு அவரே சான்று. அவருக்கு நாங்கள் எப்படி நன்றி சொல்லப் போகிறோம்? 'மாரிமாட்டு, என் ஆற்றும் கொல்லோ உலகு'?

2. இந்நூலை வெளியிட முன்வந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குனர் முனைவர் இராமர் இளங்கோ எங்கள் ஆழ்ந்த நன்றிக்கு உரியவராவார்.

3. இந்நூலில் இருந்த எழுத்து, சொற்பிழைகளைக் களைந்து செம்மையாக்கியவர் கல்விக்கடல் தி.வே. கோபாலையரின் இளவல் தி.வே. சீனிவாசன் ஆவார். பாரதி ஆராய்ச்சியாளர் சீனி. விசுவநாதன் இந்நூலை மெய்ப்புத்திருத்தி எங்களைப் பெருந்துன்பத்திலிருந்து காப்பாற்றினார். இவர்கள் கடனை நாங்கள் எவ்வாறு தீர்க்கப் போகிறோம்?

4. பல அட்டவணைகளும், நூற்றுக்கணக்கான அடிக்குறிப்பு களும், நீண்ட அகராதியும் கொண்ட இந்நூலைப் பிழையற ஒளி அச்சு செய்த விக்னேசு கணிப்பொறி நிலையத்தின் உரிமையாளர்கள் திரு. ரவி, திரு. கார்த்திக் அவர்களுக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தின் உரிமையாளர்களுக்கும் எங்கள் பாராட்டும் நன்றியும் உரியதாகும்.

# பொருளடக்கம்

# சங்க இலக்கியம்
# சில அடிப்படைச் செய்திகள்

காலநிலையின் அடிப்படையில் எழுதப்படாத வரலாறு முதுகெலும்பு இல்லாத மனிதனுக்குச் சமமாகும். சங்ககாலத்தைப் பொறுத்த வரை, அதன் வரலாறு இன்னும் எழுதப்படவில்லை என்றே சொல்ல வேண்டும். சங்ககாலத்தில் வாழ்ந்த இருநூறு தலைவர்களைப் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன என்றபோதிலும் இத் தலைவர்கள் அனைவருடைய காலமும் இதுவரை கணிக்கப் படவில்லை. மூவேந்தரை மட்டும் எடுத்துக் கொண்டால் 20 சேரர்களையும், 18 சோழர்களையும், 14 பாண்டியர்களையும் சங்கப் பாடல்களில் காண்கிறோம். மேலும் குறுநிலத் தலைவர்கள், படைத்தலைவர்கள் என்று ஏறத்தாழ 150 பேர்களின் வரலாறு சங்கப் பாடல்களில் பொதிந்து கிடக்கிறது. ஆனால் இவர்கள் எப்போது வாழ்ந்தார்கள்? இவர்களுள் முன்னால் வாழ்ந்தவர் யார்? பின்னால் வாழ்ந்தவர் யார்? இவர்களிடையே இருந்த உறவு முறை என்ன? என்பவற்றைச் சங்கப் பாடல்களின் துணை கொண்டு அறிவியல் பூர்வமாக முழுமையாக ஆராய்ந்தவர்கள் இல்லை என்றே சொல்லலாம். எத்தனையோ சங்ககால வரலாறுகள் இதுவரை வெளி வந்துள்ளன என்பது உண்மை. இந்நூல்களில் சங்க காலத் தலைவர்களின் காலநிலை அறிவியல் முறைப்படி ஆராயப் படவில்லை என்றே சொல்ல வேண்டும்.

சங்ககாலத்தில் வாழ்ந்த தலைவர்களின் கால நிலையைக் கணிப்பதற்குத் தடயங்கள் எங்கே உள்ளன? என்று சிலர்

கேட்கலாம். தடயங்கள் அனைத்தும் சங்கப் பாடல்களிலேயே புதைந்து கிடக்கின்றன. ஓர் எடுத்துக்காட்டு கீழே தரப்படுகிறது.

சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்ற சேரமன்னனைப் பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சிறையிலிட்டான் என்று புறநானூறு 17ஆம் பாடலின் அடிக்குறிப்புக் கூறுகிறது. இந்த நெடுஞ்செழியனின் படைத்தலைவன் பழையன் மாறன் என்று மதுரைக் காஞ்சியால் (அடி. 772) அறிகிறோம். கூடலின் மேல் படையெடுத்துவந்த கிள்ளி வளவனைப் பழையன் மாறன் தோற்கடித்தான் என்றும், அதைக் கேள்விப்பட்ட கோதை மார்பன் பேருவகை அடைந்தான் என்றும் அகநானூறு 346ஆம் பாடல் கூறுகிறது. இந்த மூன்று பாடல்களையும் இணைத்துப் பார்த்தால் சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையும், பாண்டியன் நெடுஞ்செழியனும், சோழன் கிள்ளிவளவனும் சமகாலத்தில் வாழ்ந்த மூவேந்தர்கள் என்பதை அறிகிறோம். இந்த மூவேந்தர்களும் எந்தக் காலநிலையில் வாழ்ந்தார்கள் என்று எப்படி அறிவது? மாங்குளம் தமிழ் - பிராமிக் கல்வெட்டு ஒன்றில் நெடுஞ்செழியன் பணவனான (அதிகாரியான) கடலன் என்பவன் ஒரு சமணத்துறவிக்குக் கல்படுக்கை அமைத்துத் தந்தான் என்று கூறப்படுகிறது. இந்தக் கல்வெட்டின் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று ஐராவதம் மகாதேவன் கணிக்கிறார்.

ஆலம்பேரி சாத்தனார் என்ற புலவர் நெடுஞ்செழியன் ஆலங்கானப் போரில் வெற்றி பெற்றதை அகநானூறு 175ஆம் பாடலிலும், விளங்கில் என்ற ஊரின் தலைவன் கடலன் என்பதை அகநானூறு 81ஆம் பாடலிலும் குறிப்பிடுகிறார். இப்பாடல்களால் நெடுஞ்செழியனும் கடலனும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்பதை அறிகிறோம். மாங்குளம் கல்வெட்டில் குறிப்பிடப்படும் தலைவர்கள் இவர்களே. இக்கல்வெட்டுக் குறிப்பிடும் நெடுஞ்செழியன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனே. இக் கல்வெட்டின் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியாதலால், நெடுஞ்செழியன் காலநிலையும் அதுவேயாகும். நெடுஞ் செழியன் இளைஞனாக இருந்த போதே அரியணை ஏறினான் என்று புறநானூற்றுப் பாடல்கள் (72, 77) தெரிவிப்பதால்,

அவன் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அரியணை ஏறிப் பிற்பகுதிவரை வாழ்ந்திருந்தான் என்று கருதலாம். ஒரு தலைமுறைக்கு 25 ஆண்டுகள் ஒதுக்கலாம் என்ற கொள்கையின் அடிப்படையில் நெடுஞ்செழியன் காலநிலை கி.மு. 175-150 என்று கணிக்கலாம்.

சங்க காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்றும், நெடுஞ்செழியன் காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு என்றும் அறிஞர்கள் இதுவரை கூறிவந்தது பொருந்தாது என்பதை இப்போது அறிகிறோம். சுருங்கக்கூறினால், சேரமான் மாந்தரஞ்சேரலும், சோழன் கிள்ளிவளவனும், பாண்டியன் நெடுஞ்செழியனும் கி.மு. 175-150 என்ற காலநிலையில் வாழ்ந்த மூவேந்தர்கள் என்பதைச் சங்கப்பாடல்களும், மாங்குளம் கல்வெட்டும் தெரிவிக்கின்றன. இந்தக் காலநிலையை உறுதிசெய்யும் வேறு தடயங்களும் சங்கப் பாடல்களில் உள்ளன. இவற்றை நூலுள் காணலாம்.

காதலையும் வீரத்தையும் புகழ்ந்து பாடும் சங்கப் பாடல்களின் அடிப்படையில் காலநிலையைக் கணிப்பதும் சங்க கால வரலாற்றை எழுதுவதும் மிகையல்லவா? என்று சிலர் ஐயுறலாம். மகாவம்சம், தீப வம்சம் என்ற பௌத்த மத நூல்களின் அடிப்படையில் இலங்கையின் பழைய வரலாறு எழுதப்படுகிறது. புராணங்கள் தரும் கால நிலையின் அடிப்படையில் மௌரியர், சாதவாகனர் வரலாறு எழுதப்படுகிறது. அவ்வாறிருக்க, சங்ககாலத்தில் வாழ்ந்த தலைவர்களைப் புறப்பாடல்களில் நேர்முகமாகவும், காதல் பாடல்களில் உவமை வாயிலாகவும் இடம் பெறும் செய்திகளின் அடிப்படையில் சங்ககால வரலாற்றை எழுதுவது தவறாகாது. மேலும் இப்பாடல்கள் உண்மை நிலையில் நின்று எழுதப்பட்டவை. நம்ப முடியாத கதைகளும், பொய்யான புனைந்துரைகளும், இல்லாததைச் சொல்லிப் புகழ்வதும் இப்பாடல்களில் இல்லை. எனவே, இவற்றின் அடிப்படையில் சங்ககால வரலாற்றை எழுதுவது சாலச் சிறந்ததாகும்.

கி.மு. ஆறாம் நூற்றாண்டிலிருந்து கி.மு. முதல் நூற்றாண்டு வரையிலான காலநிலையில் தமிழகத்தில் வாழ்ந்த ஆயிரக்கணக்கான புலவர்கள் எழுதிய நூறாயிரக்கணக்கான

பாடல்களில் 2381 பாடல்களே இன்று நமக்குக் கிடைத்துள்ளன. இவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற ஒன்பது நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பாட்டும் தொகையும் என்று இத்தொகை நூல்களைக் குறிப்பிடுவார்கள். சான்றோர் செய்யுள் என்றும் சங்க இலக்கியத்தைக் கூறுவார்கள்.)

## பத்துப்பாட்டு

நூறு அடிக்கு மேற்பட்ட நீளமுடைய பத்துப் பாடல்களின் தொகுப்புப் பத்துப் பாட்டு எனப்பட்டது. இவற்றின் பெயர்களைப் பின்வரும் வெண்பா தெரிவிக்கிறது.

> [1]முருகு, [2]பொருநாறு, [3,4]பாண் இரண்டு, [5]முல்லை,
> [6]பெருகு வள மதுரைக் காஞ்சி-மருவினிய,
> [7]கோல நெடுநல்வாடை, [8]கோல்குறிஞ்சி, [9]பட்டினப்
> பாலை, [10]கடாத்தொடும் பத்து.

## திருமுருகாற்றுப்படை

இவற்றுள், திருமுருகாற்றுப்படை முருகக்கடவுள் மேல் பாடப்பட்டதாகும். மதுரையில் வாழ்ந்த முருகபக்தனான புலவன் ஒருவன். மற்றொரு புலவனுக்கு முருகக்கடவுள் வாழும் தலங்களுக்குச் சென்று வழிபடுமாறு வழிகாட்டுவது போல (ஆற்றுப்படுத்துவது போல) இப்பாட்டு அமைந்துள்ளது. அதனால் இப்பாட்டு புலவர் ஆற்றுப்படை என்ற பெயர் பெற்றது. இப்போது திருமுருகு ஆற்றுப்படை என்று அழைக்கப்படுகிறது.

திருமுருகு ஆற்றுப்ப்டையை நக்கீரர் எழுதினார் என்று கூறப்படுகிறது. ஆனால் இவர் நெடுஞ்செழியனை நெடுநல்வாடையில் பாடிய சங்ககாலப் புலவரான நக்கீரர் அல்லர். பிற்காலப் புலவரான நக்கீரர் ஒருவர் இப்பாட்டை எழுதியுள்ளார். இவரை இரண்டாம் நக்கீரர் என்று அழைப்போம்.

## பொருநர் ஆற்றுப்படை

சோழன் கரிகால் பெருவளத்தானைப் பாடும் இப்பாட்டு பொருநன் (சங்ககாலத்து நடிகன்) ஒருவன். மற்றொரு பொருநனைப் பார்த்து, 'நீ கரிகால் வளவனிடம் சென்றால்

நல்ல உணவும் மிக்க பொருளும் பெறுவாய்' என்று ஆற்றுப்படுத்துவதாக (வழிகாட்டுவதாக) அமைந்துள்ளது. இதில், கரிகால் வளவன் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியின் மகன் என்றும், தாய் வயிற்றில் இருந்தபோதே தந்தை இறந்துபோனதால் இளம் வயதிலேயே அரச உரிமையைப் பெற்றான் என்றும், வெண்ணிப் போர்க்களத்தில் இரு பெருவேந்தரை வென்றான் என்றும் கூறப்படுகிறது.

### சிறுபாண் ஆற்றுப்படை

சிறிய யாழை மீட்டி வாசிப்பவன் சிறுபாணன் என்று அழைக்கப்பட்டான். சிறுபாணன் ஒருவன் மற்றொரு சிறுபாணனைப் பார்த்து, 'நல்லியக் கோடனை நாடிச் சென்றால் நல்ல உணவும் பரிசுப் பொருளும் பெறுவாய்' என்று ஆற்றுப்படுத்துவதாக (வழிகாட்டுவதாக) இப்பாட்டு அமைந்துள்ளது.

நல்லியக் கோடன் என்பவன் திண்டிவனப்பகுதியில் மாவிலங்கையை ஆட்சி புரிந்த குறுநிலத் தலைவன் ஆவான். எயில்பட்டினம், வேலூர், ஆமூர் என்ற ஊர்கள் இவன் ஆட்சிக்குட்பட்டிருந்தன. 'சேரனின் வஞ்சியும், சோழனின் உறையூரும், பாண்டியனின் மதுரையும் வறுமையுற்றன. பேகன், பாரி, காரி, ஓரி, ஆய், நள்ளி, அதியமான் என்ற ஏழு வள்ளல்களும் மாய்ந்துவிட்டார்கள்' என்று சிறு பாணாற்றுப்படை கூறுவதை நோக்கும்போது, அது எழுதப்பட்ட கால நிலையில் சங்ககால மூவேந்தர் நலிவுற்றுப் போயினர் என்று அறிகிறோம். சிறுபாணாற்றுப்படை சங்ககால இறுதியில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

### பெரும்பாண் ஆற்றுப்படை

பெரிய யாழை மீட்டி வாசித்தவன் பெரும்பாணன் என்றழைக்கப்பட்டான். பெரும்பாணன் ஒருவன் மற்றொரு பெரும்பாணனைப் பார்த்து, 'தொண்டைமான் இளந்திரையனிடம் சென்றால் பரிசு பெறுவாய்' என்று ஆற்றுப்படுத்துவதாக (வழிகாட்டுவதாக) இப்பாட்டு அமைந்துள்ளது.

காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான். இன்றைய

மகாபலிபுரம் இளந்திரையன் ஆட்சிக்குட்பட்டிருந்தது. 'கடல் மல்லை' என்று நீரின் பெயரைப் பெற்றிருந்ததால் அது 'நீர்ப்பெயற்று' என்று பாட்டில் குறிப்பிடப்படுகிறது. நீர்ப் பெயற்று (கடல் மல்லை - மகாபலிபுரம்) அக்காலத்தில் துறைமுகப்பட்டினமாக இருந்தது என்றும், அங்கு ஒரு கலங்கரை விளக்கம் இருந்தது என்றும் பெரும்பாண் ஆற்றுப்படை கூறுகிறது.

கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் தொண்டையர் என்போர் கடல்வழியாகக் கூடூர்ப்பகுதியில் புகுந்து, வேங்கடத்தின் ஒரு பகுதியைக் கைப்பற்றி, பிறகு மெல்ல மெல்லக் காஞ்சிபுரத்தை அடைந்து, அங்கிருந்து ஆட்சி புரிந்தனர் என்று சங்கப் பாடல்களால் அறிகிறோம். இவர்கள் திருமால் அடியவர்கள், காஞ்சிபுரத்து திருவெஃகாவில் திருமால் கோயிலை இவர்கள் கட்டியிருக்கலாம். இவர்கள் பழந்தெலுங்கு மொழியை (Proto - Telugu) பேசியவர்களாக இருக்கலாம். மிளகு கறி என்ற பெயராலும் மிளகு என்ற பெயராலும் சங்கப் பாடல்களில் வழங்குகிறது. ஆனால் பெரும்பாண் ஆற்றுப்படை ஒன்றில் மட்டும் 'மிரியல்' (அடி 78) என்று அழைக்கப்படுகிறது. மிளகைத் தெலுங்கில் 'மிரியலு' என்று இப்போது அழைக்கிறார்கள். மிளகை மிரியல் என்றழைத்த தொண்டையர் பழந்தெலுங்கர்களாக இருக்கலாம்.

சங்க காலத்தில் தமிழகத்தின் வடக்கே இருந்தவர்கள் சாதவாகனர் ஆவர். இவர்களை ஆரியர் என்று சங்கப்பாடல்கள் கூறுகின்றன. இவர்கள் பிராகிருத மொழியைப் பேசியவர்கள். சமண, பௌத்த மதத்தை மேற்கொண்டவர்கள். இவர்களோ இவர்களில் ஒரு பிரிவினரோ தொண்டையராக இருப்பதற்கு வாய்ப்பில்லை. பிற்காலத்தில் காஞ்சிபுரத்திலிருந்து ஆட்சிபுரிந்த பல்லவர்களும் முதன்முதலில் பிராகிருத மொழியைப் பேசியவர்கள் ஆதலாலும், சமண மதத்தை மேற்கொண் டவர்கள் ஆதலாலும் அவர்களைத் தொண்டையர் வழி வந்தவர்கள் என்று சொல்வதற்கில்லை.

சோழனுக்கும் பீலிவளை என்ற நாக கன்னிகைக்கும் பிறந்தவன் தொண்டைமான் இளந்திரையன் என்றும் அவன் கடல் வழியாகத் தமிழகம் வந்தான் என்றும் மணிமேகலை கூறுகிறது.

தொண்டையர் ஆட்சி புரிந்த தமிழ்நாட்டின் வடபகுதி தொண்டை நாடு என்ற பெயரைப் பெற்றது.

பெரும்பாண் ஆற்றுப்படையைப் பாடியவர் பெயர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்று காணப்படுகிறது. சோழன் கரிகால் வளவன் மேல் பட்டினப்பாலையைப் பாடியவர் பெயரும் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்று காணப்படுவதால், இரண்டு பாட்டுகளையும் எழுதியவர் ஒரு புலவரே என்று கொண்டு, கரிகால் வளவனும் தொண்டைமான் இளந்திரையனும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்று வரலாறுகள் எழுதப்பட்டன. கரிகால் வளவன் காலநிலை கி.மு. 225-200 ஆகும். இளந்திரையன் காலம் கி.மு. 100-75. இரு தலைவர்களுக்குமிடையே 125 ஆண்டு இடைவெளி இருப்பதால், இவர்களைப் பாடிய புலவர்கள் வெவ்வேறு காலத்தில் வாழ்ந்தவர்கள் ஆவர். பட்டினப்பாலையைப் பாடிய முதலாம் கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் பேரனின் பேரனாகப் பொருநர் ஆற்றுப்படையைப் பாடிய இரண்டாம் கடியலூர் உருத்திரங்கண்ணனார் இருக்கலாம்.

## முல்லைப் பாட்டு

முல்லைப் பாட்டு ஒரு காதல் பாட்டாகும், அரசன் போருக்குச் சென்று பாசறையில் தங்கிப் போர் செய்வதற்கான முயற்சிகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறான். அவனைப் பிரிந்த அரசியோ அரண்மனையில் பிரிவுத் துயரால் வாடுகிறாள். அரசியின் தோழிமார், 'விரிச்சி (சகுனம்) பார்த்த பெருமுது பெண்டிர் நல்ல சொல்லைக் கேட்டார்கள். அதனால் அரசர் விரைவில் திரும்பி வருவார்' என்று தேற்றுகிறார்கள். ஆனால் அரசியோ ஆறுதல் அடையாமல் துன்புறுகிறாள். இந்நிலையில் அரசன் பகைவர்களை வென்று அரண்மனை திரும்புகிறான். அவன் தேர்க்குதிரைகள் அரசியின் காது குளிரும்படி கனைக்கின்றன.

இதுவே முல்லைப்பாட்டின் கருத்து. இப்பாட்டில் போர்ப்பாசறை மிக அழகாக வருணிக்கப்படுகிறது. பாசறையில் வீரர்கள் தங்குவதற்கென கூடாரங்கள் அமைக்கப் படுகின்றன. கூடாரங்களின் நடுவில் யவனர் புலிச்சங்கிலியால் அரசனின் இருப்பிடத்தை அழகாக அமைக்கிறார்கள்.

திரைபோட்ட, இரண்டு அறைகள் கொண்ட படுக்கையறையில் அரசன் உறங்காமல் போரில் புண்பட்ட யானைகளையும், குதிரைகளையும் இறந்துபோன வீரர்களையும் பற்றிச் சிந்தித்த வண்ணம் படுத்திருக்கிறான். அரசனின் படுக்கையறையைச் சுற்றி ஊமை மிலேச்சர்கள் அரசனுக்குப் பாதுகாவலாக நிற்கிறார்கள்.

பாசறைக் கூடாரங்களுக்கு இடையே தெருக்கள் அமைந்துள்ளன. அத்தெருக்களை மெய்க்காப்பாளர் சுற்றி வந்து காவல் புரிகிறார்கள். நாலு தெருக்கள் கூடும் இடங்களில் யானைகள் காவலாக நிறுத்தப்பட்டுள்ளன. யானைப்பாகர் வடமொழியில் பேசி யானைகளை உண்ணும்படி சொல்கிறார்கள்.

வாளைக் கச்சிலே பூண்ட மங்கையர் எண்ணெய்க் குழாய் ஏந்தி விளக்குகளுக்கு எண்ணெய் ஊற்றி வருகிறார்கள். நாழிகைக் கணக்கர் கன்னல் எனப்படும். நீர்க்கடிகாரத்தைப் பார்த்து மணி என்ன என்று தெரிவிக்கிறார்கள்.

முல்லைப்பாட்டு ஒரு காதல் பாட்டே ஆனாலும், போரில் வெற்றி பெற்றுத் திரும்பிய ஓர் அரசன் முன்பு பாடப்பட்டதே யாகும். அந்த அரசன் பாண்டியன் நெடுஞ்செழியனாக இருக்கலாம் என்று மறைமலை யடிகள் கருதுகிறார். சோழன் கரிகால் வளவனாக இருக்கலாம் என்பது சிவராச பிள்ளையின் கருத்து. முல்லைப்பாட்டின் கருத்தைத் தழுவி நெடுஞ் செழியனைப் பாடும் நெடுநெல்வாடை அமைந்துள்ளது. கரிகால் வளவனைப் பாடும் பட்டினப் பாலையைப் போலவே, நெடுஞ்செழியனைப் பாடும் மதுரைக்காஞ்சி தலைநகர் வருணனையாக அமைந்துள்ளது. கரிகால் வளவன் மேல் பாடப்பட்ட நீண்ட பாடல்களைப் போலவே தன்மேல் பாடப்படும் பாடல்களும் அமையவேண்டும் என்று நெடுஞ்செழியன் விரும்பியதை இது காட்டுகிறது. அதனால் நெடுநல்வாடைக்கு முன் மாதிரியாக அமைந்த முல்லைப் பாட்டுச் சோழன் கரிகால் வளவன் மேல் பாடப்பட்டதாகக் கருதுவது பொருத்தமாகும்.

பத்துப்பாட்டில் அடியளவில் சிறியது முல்லைப் பாட்டே யாகும். அது 103 அடிகள் நீளமுடையது.

**மதுரைக் காஞ்சி**

பத்துப் பாட்டில் மிக நீளமானது மதுரைக்காஞ்சியே. அது *782* அடிகள் கொண்டது. இதில் *462* அடிகள் *(238 - 699)* மதுரை நகரைப் பலவாறாக வருணிக்கின்றன. எஞ்சிய அடிகள் நெடுஞ்செழியன் முன்னோர் பெருமையையும், நெடுஞ்செழியன் பெற்ற வெற்றிகளையும், அவன் கொடைத் திறனையும், அவன் அரசவையில் வீற்றிருப்பதையும் புகழ்கின்றன.

'உலகத்தை ஆண்டு மறைந்து போன மன்னர்கள் கடல் அலைகள் கரையில் சேர்த்த மணலைவிடப் பலராவர். அதனால் நிலையில்லா இவ்வுலகில் உன் புகழை நிலைநிறுத்தி மகிழ்ந்து இனிது வாழ்வாயாக!' என்று இந்தப் பாட்டு நிலையாமையை (காஞ்சித் திணையை) மதுரையில் வாழ்ந்த நெடுஞ்செழியனு க்கு மென்மையாக எடுத்துரைத்ததால் மதுரைக் காஞ்சி என்று பெயர் பெற்றது.

**நெடுநல்வாடை**

முல்லைப்பாட்டை அடியொற்றி எழுதப்பட்ட நெடுநல்வாடை ஒரு காதல் பாட்டாகும்.

குளிர்காலம். வாடைக்காற்று மக்களை வருத்துகிறது. போருக்குச் சென்ற அரசனைப் பிரிந்த அரசி அரண்மனையில் கட்டில் மேல் மலர்ப்படுக்கையில் படுத்து வருந்துகிறாள்.

தோழியர் அவளைத் தேற்றுகிறார்கள்.

பகலில் போர் செய்த அரசன் இரவில் பாசறையைச் சுற்றி வருகிறான். வேப்பமாலை சூடிய வேலை ஏந்திய ஒருவன் அரசனின் முன்னால் சென்று புண்பட்ட வீரர்களை அரசனுக்கு அறிமுகப்படுத்துகிறான். பாண்டில் விளக்கின் சுடர் வாடைக்காற்று வீசுவதால் தெற்கு நோக்கி வளைகிறது. அரசன் புண்பட்ட வீரர்களைப் பாராட்டுகிறான். யானைகளையும் குதிரைகளையும் தட்டிக் கொடுக்கிறான். இவ்வாறு நள்ளிரவிலும் படுக்கச் செல்லாமல் சில வீரர்களோடு பாசறையைச் சுற்றிவரும் வேந்தன் பல பகைவர்களோடு செய்யும் போர்த்தொழில் விரைவில் வெற்றியோடு முடிவடைவதாக! துன்பத்தோடு அரண்மனையில் வசிக்கும்

எங்கள் அரசியின் துன்பம் தீர்வதாக! என்று அரசியின் தோழிமார் வேண்டிக் கொள்கிறார்கள்.

அரசனைப் பிரிந்துவாழும் அரசிக்கு வாடைக்காலம் நீண்டதாகத் தோன்றுவதால் அது நெடுவாடை ஆயிற்று. பகைவரை எளிதில் வெல்வதற்கு ஏற்ற காலமாகையால் அரசனுக்கு அது நல்வாடை ஆயிற்று. அதனால் இப்பாட்டு நெடுநல்வாடை எனப்பட்டது.

நெடுநல்வாடை காதல் பாட்டே ஆனாலும் வேப்பமாலை சூடிய வேல் கூறப்படுவதால், பாசறையைச் சுற்றி வரும் வேந்தன் பாண்டியன் என்பதை அறிகிறேம். பாட்டின் அடிக்குறிப்பால் அது பாண்டியன் நெடுஞ்செழியன் மேல் பாடப்பட்டது என்று தெரிகிறது.

## குறிஞ்சிப் பாட்டு

குறிஞ்சிப்பாட்டு ஒரு காதல் பாட்டாகும். காதல் இலக்கியம் தமிழில் அகப்பொருள் எனப்படும். அகப்பொருளுக்குத் 'தமிழ்' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. சங்க காலத் தமிழகத்தின் வடக்கே வாழ்ந்த சாதவாகன அரசிளங் குமரர்களுக்குத் தமிழ் அகப்பொருளைக் கற்க வேண்டுமென்ற அவா இருந்தது. பிரமதத்தன் என்ற ஒருவன் அகப்பொருள் கற்று, யாழ் வாசிக்கவும் கற்றுக்கொண்டு, தமிழில் பாடல் எழுதவும் வல்லவனான். அவன் எழுதிய 'அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை' என்ற பாட்டு குறுந்தொகையில் 184 ஆம் பாடலாகத் தொகுக்கப் பட்டுள்ளது. இவன் பெயர் ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன் என்று குறுந்தொகையில் காணப்படுகிறது.

பிரகத்தன் என்ற ஆரிய அரசன் அகப்பொருளைக் கற்பதற்காகக் கபிலரிடம் வந்தான். அகப்பொருள் ஐந்திணைகளுள் ஒன்றான குறிஞ்சித் திணைக்கு இலக்கியமாகக் கபிலர் குறிஞ்சிப்பாட்டை எழுதிப் பிரகத்தனுக்குக் கற்பித்தார்.

இவ்வாறு சங்ககாலத் தமிழ்ப்புலவர்களிடம் தமிழ் கற்ற சாதன வாகன மன்னர்கள் சங்கப் பாடல்களைப் பின்பற்றிப் பிராகிருத மொழியில் பாடல்கள் எழுதலாயினர். சங்கப் பாடல்கள் சிலவற்றைப் பிராகிருதத்தில் மொழிபெயர்த்தனர்.

இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்ட பாடல்களுள் ஒன்று 'நாடா கொன்றோ காடா கொன்றோ' என்று தொடங்கும் ஔவை யாரின் பாடலாகும் (புறநானூறு - 187). குறுந்தொகைப் பாடல்களைப் போன்ற எழுநூறு பிராகிருத காதல் பாடல்கள் தொகுக்கப்பட்டு 'காதா சப்தகதி' என்ற பெயரால் வெளியிடப்பட்டன.

இனி, கபிலர் எழுதிய குறிஞ்சிப்பாட்டின் கருத்தைக் காண்போம்.

தலைவி தினப்புனம் காப்பதற்குத் தோழியுடன் செல்கிறாள். சுனையில் நீராடுகிறாள். 99 வகைப் பூக்களைப் பறித்துப் பாறையில் குவித்து இடையில் அணியும் தழையுடையும் மார்பில் அணியும் மாலையுமாகக் கட்டிச் சூடிக்கொண்டு அசோக மர நிழலில் அமர்ந்திருக்கிறாள். அப்போது தலைவன் வேட்டை நாயுடன் அங்கு வருகிறான். வேட்டை நாய் குரைப்புக்கு அஞ்சித் தலைவி நடுங்குகிறாள். தலைவன் வேட்டை நாயின் குரைப்பை அடக்கி, 'நான் வேட்டையாடிய விலங்கு ஒன்று இந்தப் பக்கம் வந்ததைக் கண்டீரோ?' என்று கேட்கிறான். தலைவி மறுமொழி கூறாமல் நிற்கிறாள். அப்போது யானை ஒன்று கோபத்தோடு தலைவியை நோக்கி வருகிறது. தலைவி நடுங்கி தலைவன் பக்கம் நின்று கொள்கிறாள். தலைவன் அம்பை எய்து யானையைத் துரத்துகிறான். தலைவிக்குத் தலைவன் மேல் காதல் ஏற்படுகிறது. இருவரும் பகல் எல்லாம் காதல் நுகர்ச்சியில் ஈடுபடுகிறார்கள். மாலை வருகிறது. தலைவன் காதலியை அவள் வீட்டருகில் விட்டுச் செல்கிறான். அன்று தொடங்கி, இரவில் வந்து தலைவன் தலைவியை அவள் வீட்டருகில் சந்திக்கிறான். தலைவன் வரும் வழி ஆபத்து நிறைந்தது ஆதலால் தலைவி கலங்குகிறாள். உடல் மெலிகிறாள். தலைவியின் உடல் மெலிவையும் மனச்சோர்வையும் கண்ட தாய், 'இது தெய்வ குற்றமோ?' என்று நினைத்து, தெய்வங்களுக்குச் சாந்தி செய்கிறாள். இந்நிலையில் தோழி நடந்த உண்மையைக் கூறி, தலைவனுக்குத் தலைவியை மணஞ் செய்து வைக்குமாறு வேண்டுகிறாள். (அறத்தொடு நிற்கிறாள்)

## பட்டினப்பாலை

சோழன் கரிகால் பெருவளத்தானின் துறைமுகப் பட்டினமான காவிரிப்பூம்பட்டினத்தைப் பலவாறாகப் பட்டினப்பாலை வருணிக்கிறது. சோழன் பகைவரை வென்று நாட்டை வளம்படுத்தி உறையூருக்குத் தன் தலைநகரை மாற்றிக் கொண்ட செய்திகளும் இப்பாட்டில் கூறப்படுகின்றன.

"காவிரிப் பூம்பட்டினத்தையே பெறுவதாக இருந்தாலும், நான் என் மனைவியைப் பிரிந்து பொருள் தேடச் செல்லமாட்டேன். ஏனென்றால், நான் செல்லவேண்டிய கானம் (பாலை வழி) திருமாவளவன் பகைவர்மேல் வீசிய வேலினும் கொடியதாகும். ஆனால் நான் தழுவும் என் மனைவியின் தோளோ அவன் செங்கோலைவிடக் குளிர்ச்சியானது'' என்று தன் நெஞ்சிற்கு ஒருவன் சொல்வதாகப் பட்டினப்பாலை அமைந்துள்ளது. இப்பாட்டை எழுதியவர் முதலாம் கடியலூர் உருத்திரங்கண்ணனார் ஆவர்.

## மலைபடுகடாம்

இது கூத்தர் ஆற்றுப்படை என்று வழங்கும். ஒரு கூத்தன் மற்றொரு கூத்தனைப் பார்த்து நன்னனிடம் சென்றால் பரிசு பெறுவாய் என்று ஆற்றுப்படுத்துவாக இப்பாட்டு அமைந்துள்ளது. மலையில் தோன்றும் இருபது வகையான ஓசைகளைக் குறிப்பிட்டு, இவ்வோசைகள் திசை யெங்கும் எதிரொலித்தன என்று கூறும்.

'மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப' என்ற 348 ஆம் அடியில் வரும் 'மலைபடுகடாம்' என்ற தொடரால் இப்பாட்டு இப்போது அழைக்கப்படுகிறது.

திருவண்ணாமலையை அடுத்த செங்கம் மலைப் பகுதியை ஆண்ட நன்னன் மேல் மலைபடுகடாம் பாடப் பட்டுள்ளது. இவன் கொண்கானத்தில் ஏழில் மலைப் பகுதியை ஆண்ட நன்னனின் வழியில் வந்தவன் என்று தெரிவிக்க நன்னன் சேய் நன்னன் என்று குறிப்பிடப்படுகிறான்.

வடஆற்காடு மாவட்டத்தில் உள்ள மலைப்பகுதிகளின் அழகான வருணனையை மலைபடுகடாத்தில் காணலாம்.

இனி, பத்துப்பாட்டின் தலைவர், புலவர், அடிகள் ஆகிய விவரங்களைக் கீழே உள்ள அட்டவணையில் காணலாம்:

| எண். | பாட்டு | அடி அளவு | பாடப்பட்ட தலைவர்/பொருள் | பாடிய புலவர் |
|---|---|---|---|---|
| 1. | திருமுருகு ஆற்றுப்படை | 317 | குமரவேள் | நக்கீரர் - II |
| 2. | பொருநர் ஆற்றுப்படை | 248 | சோழன் கரிகால் பெருவளத்தான் | முடத்தாமக் கண்ணியார் |
| 3. | சிறுபாண் ஆற்றுப்படை | 269 | ஒய்மான் நாட்டு நல்லியக் கோடன் | இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் |
| 4. | பெரும்பாண் ஆற்றுப்படை | 500 | தொண்டைமான் இளந்திரையன் | கடியலூர் உருத்திரங்-கண்ணனார் II |
| 5. | முல்லைப்பாட்டு | 103 | முல்லைத்திணைக் காதல் பாட்டு | காவிரிப்பூம்-பட்டினத்துப் பொன் வாணிக னார் மகனார் நப்பூதனார் |
| 6. | மதுரைக்காஞ்சி | 782 | தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் | மாங்குடி மருதனார் |
| 7. | நெடுநல்வாடை | 188 | பாண்டியன் நெடுஞ்செழியன் | நக்கீரர்- I |
| 8. | குறிஞ்சிப்பாட்டு | 261 | குறிஞ்சித் திணைக் காதல் பாட்டு | ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவித்தற்குக் கபிலர் பாடியது. |
| 9. | பட்டினப்பாலை | 301 | சோழன் கரிகால் பெருவளத்தான் | கடியலூர் உருத்திரங் கண்ணனார் I |
| 10. | மலைபடுகடாம் | 583 | பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்-மாத்துவேள் நன்னன் சேய் நன்னன் | இரணிய முட்டத்துப் பெருங் குன்றூர்ப் பெருங் கௌசிகனார் |

## எட்டுத்தொகை நூல்கள்

| எண் | தொகை நூல் | பாடல் | அடி அளவு | பாடிய புலவர் | பாடப் பட்ட தலைவர் | தொகுத் தவர் | தொகுப்பித் தவர் | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | நற்றிணை | கடவுள் வாழ்த்து +400 | 9-12 | 192 | 44 | ? | பன்னாடு தந்த, பாண்டியன் மாறன் வழுதி | பாடல் 234 காணப்படவில்லை |
| 2. | குறுந் தொகை | க.வா. +401 | 4-8 | 205 | 27 | பூரிக் கோ | ? | 307, 391 பாடல்கள் 9 அடிகள் கொண் டுள்ளன. |
| 3. | ஐங்குறு நூறு | க.வா. +500 | 3-6 | 5 என்பர் | 8 | புலத் துறை முற்றிய கூடலூர் கிழார் | யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையார் | 129, 300 பாடல்கள் காணப் படவில்லை |
| 4. | பதிற்றுப் பத்து | 100 | 5-57 | 8 என்பர் | 12 | ? | ? | 01-10, 91-100 பாடல்கள் காணப் படவில்லை. |
| 5. | பரிபாடல் | 70 | 32-140 | 13 | - | ? | ? | 22 பாடல் களே உள்ளன. |
| 6. | கலித் தொகை | 150 | 11-80 | 5 என்பர் | — | நல்லந் துவனார் | ? | |
| 7. | அகநானூறு | க.வா +400 | 13-31 | 142 (145 என்பர், | 116 | மதுரை உப்பூரி குடி கிழார் மகனார் உருத்திர சன்மர் | பாண்டியன் உக்கிரப் பெருவழுதி | |
| 8. | புறநானூறு | 400 | 4-40 | 151 | 124 | ? | ? | 267, 268 பாடல்கள் இல்லை. |

எட்டுத் தொகை நூல்கள் எவை என்பதைப் பின்வரும் வெண்பா கூறுகிறது!

நற்றிணை[1], நல்ல குறுந்தொகை[2], ஐங்குறுநூறு[3],
ஒத்த பதிற்றுப்பத்து[4], ஓங்கு பரிபாடல்[5],
கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு[6], அகம்[7], புறம்[8] என்று
இத்திறத்த எட்டுத் தொகை.

எட்டுத் தொகை நூல்களுள் ஐங்குறு நூறு, குறுந்தொகை, நற்றினை, அகநானூறு, கலித்தொகை என்ற ஐந்தும் காதல் பாடல்களின் தொகுப்பாகும். பரிபாடல் கோயில்களிலும், விழாக் காலங்களிலும் இசை அமைத்துப் பாடப்பட்ட இசைப்பாடல்களின் தொகுப்பாகும். திருமால், செவ்வேள், வையை பற்றிய பாடல்கள் இதில் காணப்படுகின்றன. பதிற்றுப்பத்தில் இரு குடும்பத்தைச் சேர்ந்த எட்டு சேர மன்னர்கள் நேர்முகமாகப் பாடப்படுகின்றனர். புறநானூற்றில் நூற்றுக்கு மேற்பட்ட தலைவர்களை அவர்கள் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் நேர்முகமாகப் பாடுகிறார்கள்.

இனி, எட்டுத்தொகை நூல்களைப் பற்றிச் சற்று விரிவாகக் காண்போம்.

## ஐங்குறுநூறு

அடியளவில் குறுகிய ஐந்நூறு பாடல்களைக் கொண்ட நூல் ஐங்குறுநூறு எனப்பட்டது. இந்நூலில் உள்ள பாடல்கள் 3 அடி முதல் 6 அடி வரை நீளமுடையவை. மருதம், நெய்தல், குறிஞ்சி, ·பாலை, முல்லை என்ற அகத்திணை ஒவ்வொன்றுக்கும் நூறு நூறு பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துப் பாடல்கள் கொண்ட பத்துப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, மருதத்திணையைப் பாடும் நூறு பாடல்கள் வேட்கைப் பத்து, வேழப்பத்து, களவன்பத்து, தோழிக்கு உரைத்த பத்து, புலவிப்பத்து, தோழி கூற்றுப்பத்து, கிழத்தி கூற்றுப்பத்து, புனலாட்டுப் பத்து, புலவி விராய பத்து, எருமைப்பத்து என்று பத்துப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பத்திலும் பத்துப் பாடல்கள் உள்ளன.

இந்நூலைச் சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை கூடலூர் கிழாரைக் கொண்டு தொகுப்பித்தார். ஒவ்வொரு நூறும் ஒவ்வொரு புலவரால் பாடப்பட்டது என்று ஒரு வெண்பா கூறுகிறது.

மருதம் ஓரம் போகி; நெய்தல் அம்மூவன்;
கருதும் குறிஞ்சி கபிலன் - கருதிய
பாலை ஓதலாந்தை; பனி முல்லை பேயனே -
நூலை ஓது ஐங்குறுநூறு

ஆனால் நூலின் நடையை நோக்கும்போது, ஐந்நூறு பாடல்களையும் கூடலூர் கிழாரே பாடியிருக்கலாம் என்று தோன்றுகிறது. அவ்வாறு பாடியதால் அவருக்குப் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்ற அடைமொழி தரப்பட்டிருக்கலாம்.

ஐங்குறு நூற்றில் ஒரு பாடலைக் காண்போம்:

அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! நம் படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய - அவர்நாட்டு
உவலைக் கூவற்கீழ
மான் உண்டு எஞ்சிய கலிழிநீரே (ஐங்குறுநூறு 203)

தலைவனோடு சென்ற தலைவி மீண்டும் தாய் வீடு திரும்பினாள். 'அந்த ஊரில் குடிநீர் நன்றாக இருக்காதே! எப்படி அருந்தினாய்?' என்று தாய் கேட்டாள். தலைவி சொல்கிறாள்: 'அன்னையே! நான் சொல்வதைக் கேட்க வேண்டும். அவர் நாட்டில் தழை மூடிய கிணற்றின் கீழே உள்ள, மிருகங்கள் உண்டு எஞ்சிய கலங்கல் நீர், நம் தோட்டத்துத் தேனிலே கலந்த பாலைவிட இனிமையாக இருந்தது.'

காதலுக்குக் கண்ணில்லை என்பார்கள். சுவையும் தெரியாது என்று இப்பாடலால் அறிகிறோம்.

**குறுந்தொகை**

4 அடி முதல் 8 அடி வரை குறுகிய நீளமுடைய நானூறு பாடல்களின் தொகுப்பு குறுந்தொகை எனப்பட்டது. இப்பாடல்களை 205 புலவர்கள் பாடியுள்ளனர். சங்க காலத்தில் வாழ்ந்த 27 தலைவர்களைப் பற்றிய குறிப்புக் குறுந்தொகையில் உள்ளது.

ஒரு பாடலைக் காண்போம்.

யாயும் ஞாயும் யார் ஆகியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே. (குறுந்தொகை 40)

காதல் மணம் புரிந்து கொண்ட காதலியைப் பார்த்துக் காதலன் கூறுகிறான்:

'என் தாயும் உன் தாயும் ஒருவர்க்கொருவர் அறிமுகமில்லாதவர்கள். என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையிலும் உறவினர் அல்லர். நானும் நீயும் ஒருவரை ஒருவர் அறிந்தவர் அல்லர். அவ்வாறிருக்க நம் அன்பு உள்ளங்கள் தம்முள் கலந்துவிட்டன. செம்மண் நிலத்திலே பெய்த மழை நீரைப் போல, நம் அன்புடை நெஞ்சங்கள் இரண்டறக் கலந்துவிட்டன.'

இந்தப் பாடலை எழுதிய புலவரின் இயற்பெயர் மறைந்துபோக, இப்பாடலில் வரும் 'செம்புலப் பெயல்நீர்' என்ற தொடரால் அவர் 'செம்புலப் பெயல்நீரார்' என்று அழைக்கப்படுகிறார்.

**நற்றிணை**

நல்ல அகத்திணைப் பாடல்கள் கொண்ட தொகுப்பு நூல் நற்றிணை (நல் + திணை) எனப்பட்டது. இதிலுள்ள பாடல்கள் 9 அடி முதல் 12 அடி வரை நீளமுள்ளவை. குறுந்தொகை போல மிகக் குறுகியும், நெடுந்தொகை (அகநானூறு) போல மிக நீண்டும் இல்லாமல், அளவான அடிகளை உடையதால், இது நற்றிணை எனப்பட்டது என்றும் கருதலாம்.

சங்க காலத்தில் வாழ்ந்த 44 தலைவர்களைப் பற்றிய குறிப்பை நற்றிணையில் காணலாம்.

ஒரு பாடலைக் காண்போம்:

அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்,
பொன்நேர்மேனி மணியின் தாழ்ந்த
நல்நெடுங்கூந்தல் நரையொடு முடிப்பினும்,
நீத்தல் ஓம்புமதி - பூக்கேழ் ஊர!

இன்கடுங்கள்ளின் இழை அணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்,
வெண்கோட்டு யானைப் போ ஒர் கிழவோன்
பழையன் வேல் வாய்த்தன்ன நின்
பிழையா நல்மொழி தேறிய இவட்கே. (நற்றிணை 10)

பெற்றோருக்குத் தெரியாமல் காதலனுடன் செல்லக் காதலி தீர்மானித்துவிட்டாள். 'நான் என்றும் உன்னைப் பிரியமாட்டேன்' என்று காதலன் சொன்னதை அவள் நம்பி இந்த முடிவுக்கு வந்தாள். க்ாதலரை அனுப்பிவைக்கும் தோழி காதலனிடம் பின்வருமாறு கூறுகிறாள்:

'இப்போது மேல்நோக்கிக் குத்திட்டு நிற்கும் இவளது அழகிய மார்பகங்கள் தளர்ந்து சாய்ந்து போனாலும், பொன்போன்ற இவள் மேனியில் நீலமணிபோல் கருமையாகத் தொங்கும் இவளது நீண்ட நல்ல கூந்தல் நரைத்துப் போய் முடிக்கப்பட்டாலும், இவளைப் பிரியாமல் இன்று போலவே இருப்பாயாக! சோழர்கள் கொங்கர்களைப் பணிவிக்க உதவி செய்த போஒர் என்ற ஊரின் தலைவனான பழையனின் வேல் எவ்வாறு குறிதவறாதோ, அவ்வாறே நீ சொல் தவறமாட்டாய் என்று உன் சொல்லை நம்பி உன்னோடு புறப்பட்டு விட்ட இவளை என்றும் பிரியாமல் இருப்பாயாக!'

**அகநானூறு**

**13** அடி முதல் **31** அடிவரை நீளமுடைய நானூறு காதல் பாடல்களின் தொகுப்பு நெடுந்தொகை நானூறு என்று அழைக்கப்பட்டது. இப்போது அகநானூறு என்று அழைக்கப்படுகிறது.

காதல் பாடல்களே ஆனபோதிலும், இப்பாடல்களில் வரலாற்றுக் குறிப்புகள் நிரம்பியுள்ளன. தலைவர்களை நேர்முகமாகப் பாடும் புறநானூற்றினால் அறியமுடியாத பல செய்திகளை, அகநானூற்றில் வரும் உவமைகளால் அறிந்து கொள்ள முடிகிறது. சங்க காலத்தில் வாழ்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட தலைவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் அகநானூற்றில் உள்ளன.

அகநானூறு மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் 120 பாடல்கள் களிற்றியானை நிரை (ஆண்யானைகளின்

வரிசை) எனப்படும். அடுத்த 180 பாடல்கள் (121 - 300) மணிமிடை பவளம் (இரத்தினம் கலந்த பவழ மாலை) எனப்படும். இறுதி நூறு பாடல்கள் (301 - 400) நித்திலக் கோவை (முத்து மாலை) எனப்படும்.

அகநானூற்றில் ஒற்றைப்படை எண்ணுள்ள (அதாவது, 1, 3, 5, 7, 9....) பாடல்கள் காதலர்ப் பிரிவைக் கூறும் பாலைத் திணையைப் பாடுவனவாகும். இரண்டும் எட்டுமாக (2, 8, 12, 18....) வரும் எண்ணுள்ள பாடல்கள் காதலர்கள் கலவியைக் கூறும் குறிஞ்சித் திணையைச் சேர்ந்தவை. நான்காம் எண்ணுள்ள பாடல்கள் (4, 14, 24...) தலைவன் பிரிவைப் பொறுத்துக் கொண்டு வீட்டில் இருக்கும் தலைவியைப் பாடும் முல்லைத் திணைப் பாடல்களாகும். ஆறாவது எண்ணாக உள்ளவை (6, 16, 26.....) காதலர்கள் ஊடலைக் கூறும் மருதத் திணைப்பாடல்களாகும். பத்து பத்தான எண்கள் கொண்டவை (10, 20, 30......) தலைவன் பிரிவைத் தாங்கமுடியாமல் செய்வதறியாமல் தலைவி கலங்குவதைக் கூறும் நெய்தல் திணைப் பாடல்களாகும். இந்த அமைப்பு முறையைப் பின்வரும் வெண்பாவால் அறியலாம்.

பாலை வியம் எல்லாம்; பத்தாம் பனி நெய்தல்;
நாலு நனி முல்லை; நாடுங்கால் - மேலையோர்
தேரும் இரண்டு, எட்டு இவை குறிஞ்சி; செந்தமிழின்
ஆறு மருதம் - அகம்.

(வியம் - ஒற்றைப்படை எண்கள்)

இனி, அகநானூற்றில் ஒரு பாடலைக் காண்போம்:

இரும் பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்
விழவு இன்றாயினும் துஞ்சாது ஆகும்;
மல்லல் ஆவண மறுகு உடன் மடியின்,
வல் உரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்;
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின், 5

துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்;
இலங்குவேல் இளையர்துஞ்சின், வைஎயிற்று
வலம் சுரித் தோகை ஞாளி மகிழும்;
அரவாய் ஞமலி மகிழாது மடியின்,
பகல் உரு உறழ நிலவுக் கான்று விசும்பின் 10

அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே;
திங்கள் கல்சேர்பு கனை இருள் மடியின்,
இல்எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும்;
வளைக்கண் சேவல் வாளாது மடியின், 15
மனைச் செறி கோழி மாண்குரல் இயம்பும்;
எல்லாம் மடிந்த காலை, ஒருநாள்
நில்லா நெஞ்சத்து அவர் வாரலரே; அதனால்,
அரிபெய் புட்டில் ஆர்ப்பப்பரி சிறந்து,
ஆதி போகிய பாய்பரிநன்மா 20
நொச்சிவேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட்டு அன்ன
பல்முட்டின்றால் - தோழி! - நம் களவே.

(அகநானூறு 122 - பரணர் பாடல்)

காதல் பாதை கரடு முரடானது என்பார்கள். பெற்றோருக்குத் தெரியாமல் களவிலே காதல் செய்வதில் எத்தனை தடைகள்! எத்தனை இடர்ப்பாடுகள்! காதலனை இரவிலே சந்திக்கத் தான் படும் பாட்டைக் காதலி தோழிக்குக் கூறுவதாக இந்தப் பாடல் அமைந்துள்ளது. சோழ அரசை உறையூரில் நிறுவிய தித்தன் அவ்வூரைச் சுற்றிப் பலத்த காவல்காட்டை அமைத்தான். தித்தனின் காவல் காட்டைக் கடப்பது எவ்வளவு கடினமோ, அவ்வளவு கடினம் இரவிலே காதலனைச் சந்திப்பது என்று காதலி தன் தோழிக்குக் கூறுகிறாள்.

**பாடல் கருத்து வருமாறு:**

''நிறைய மது அருந்திய மக்கள் இரவில் திரிவதால் ஆரவாரம் மிகுந்த இந்நகரம், விழா இல்லாத காலத்திலும், உறங்காது. வளம் மிகுந்த கடைத்தெருவும் மற்ற தெருக்களும் ஒலி அடங்கி உறங்கினாலும், கடுஞ்சொல்லால் உரக்கத் திட்டும் தாய் உறங்கமாட்டாள். சிறையில் அடைத்து வைப்பது போல என்னை வெளியில் விடாமல் காக்கும் தாய் உறங்கினாலும், உறங்காத கண்ணுடைய ஊர்க்காவலர் விரைந்து ஊரைச் சுற்றி வருவார்கள். வேலேந்தித் திரியும் அக் காவலர் உறங்கினால், கூரிய பல்லும் சுருண்ட வாலும் உடைய நாய் குரைக்கும். நாய் குரைக்காமல் உறங்கினால், பகல் போல ஒளியைப் பரப்பி

வானிலே நிலா உலா வரும். நிலா மறைந்து இருள்நிறைந்தால் வீட்டு எலியை உண்ணும் கோட்டான் பேய் நடமாடும் நடு இரவில் நெஞ்சு அழியும்படி கூவும். மரப்பொந்தில் வாழும் அந்தக் கோட்டான் கூவாது இருந்தால், வீட்டுக் கோழி பெருங்குரல் எடுத்துக் கொக்கரிக்கும். என்றாவது ஒரு நாள் இத்தகைய தடைகள் எல்லாம் இல்லையென்றாலும், நிலையில்லாத நெஞ்சுடைய என் காதலர் என்னைச் சந்திக்க வரமாட்டார்.

கழுத்திலே கட்டிய சலங்கை ஒலிக்கப் பாய்ந்தோடும் குதிரைகளை யுடைய தித்தன், உறையூரைச் சுற்றி மதிலை வேலியாக எழுப்பினான். பாறைகள் நிறைந்த காவல்காட்டை அமைத்தான். தித்தனின் காவல் காட்டைப் போல, என் களவுக்காதல் பல தடைகளை உடையது."

இவ்வாறு தித்தன் போன்ற தலைவர்கள் வரலாற்றை உவமை வாயிலாக அகநானூற்றுப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

## கலித்தொகை

ஓசை நயம் மிகுந்த 150 கலிப்பாடல்களின் தொகுப்பு கலித்தொகையாகும். இந் நூல் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது.

| | கலி | பாடல் | | பாடிய புலவர்(?) |
|---|---|---|---|---|
| | கடவுள் வாழ்த்து | 1 | 1 | நல்லந்துவனார் |
| 1. | பாலைக்கலி | 35 | 2-36 | பாலைபாடிய பெருங்கடுங்கோ |
| 2. | குறிஞ்சிக்கலி | 29 | 37-65 | கபிலர் |
| 3. | மருதக்கலி | 35 | 66-100 | மருதன் இளநாகனார் |
| 4. | முல்லைக்கலி | 17 | 101-117 | சோழன் நல்லுருத்திரன் |
| 5. | நெய்தற்கலி | 33 | 118-150 | நல்லந்துவனார் |

கலித்தொகையின் ஐந்து பகுதிகளை ஐந்து புலவர்கள் எழுதினார்கள் என்று கூறப்பட்டாலும், அது நல்லந்துவனார் ஒருவராலேயே எழுதப்பட்டிருக்கலாம். ஏனெனில், கபிலர், பெருங்கடுங்கோ, மருதன் இளநாகனார் போன்ற சங்கப் புலவர்கள் நடைக்கும், கலித்தொகைப் பாடல் நடைக்கும்

பெருத்த வேறுபாடு உள்ளது. அல்லாக்கால் (*124 : 8*), காட்டா யேல் (*144: 43*), ஆனால் (*139: 3*) போன்ற பிற்காலச் சொல் முடிபுகளும், இராவணன் கயிலை மலையைத் தூக்க முயன்ற உத்தர காண்ட ராமாயணக் கதை (*39*) போன்ற புராணக் கதைகளும் கலித்தொகையில் காணப்படுகின்றன. மேலும், கபிலர் போன்ற சங்கப் புலவர் வாழ்ந்த காலத்தில் கலிப்பா, பரிபாடல் போன்ற யாப்பு வகைகள் தோன்றவில்லை. எனவே, கலித்தொகையைப் 'பிற்சங்க நூல்' என்று கூறலாம் என்று வையாபுரிப் பிள்ளை கருதுகிறார்.

கலித்தொகை மதுரை, வையை, பாண்டியன் ஆகியோரைப் பொதுப்படையாகப் புகழ்ந்தாலும் ஒரு பாண்டியன் பெயராவது, வேறு தலைவர் பெயராவது அதில் குறிப்பிடப்படவில்லை. கலித்தொகைப்பாடல்களில் சில 80 அடி நீளமுடையவை. இவ்வளவு நீளமான பாடல்களிலும் கூட ஒரு தலைவன் பெயரோ அவன் வரலாறோ உவமை வாயிலாகக்கூட கூறப்படவில்லை. மொத்தம் 4309 அடிகள் கொண்ட கலித்தொகையில் அரசியல் வரலாற்றைக் கூறும் ஒரு குறிப்பும் இல்லை.

**பரிபாடல்**

இசை அமைத்துப் பாடப்படும் பாடல் பரிபாடல் ஆகும். பரிபாடல் தொகுப்பில் 70 பாடல்கள் இருந்தன. ஆனால் இன்று நமக்கு 24 முழுப்பாடல்களே கிடைத்துள்ளன. இவற்றுள் ஏழு திருமாலையும் (*1, 2, 3, 4, 13, 15, திரட்டு 1*), எட்டு செவ்வேளையும் (*5, 8, 9, 14, 17, 18, 19, 21*), ஒன்பது வையை ஆற்றையும் (*6, 7, 10, 11, 12, 16, 20, 22, திரட்டு 2*) புகழ்ந்து பாடுகின்றன.

கவிதை (*6*), அமிர்தபானம் (*8*), மிதுனம், மல்லிகாமாலை (*11*) போன்ற பிற்காலச் சொற்களும்; அகலிகை வரலாறு (*19*), பிரகலாதன் கதை (*4*) போன்ற புராணக்கதைகளும் வருவதால், பரிபாடலைப் 'பிற்சங்க நூல்' என்று வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுவார்.

நமக்குக் கிடைக்கும் பரிபாடல்கள் 32 முதல் 140 அடிவரை நீளமுள்ளவை. இவ்வளவு நீண்ட பாடல்கள் ஒன்றில்கூட ஒரு தலைவனின் பெயரும் குறிப்பிடப்படவில்லை. பாண்டியன்

ஒருவன் மனைவியரோடும் பரிவாரங்களோடும் திருப்பரங் குன்ற மலைமேல் ஏறி முருகன் கோயிலை வலம் வந்தான் என்று 19 ஆம் பரிபாடல் கூறுகிறது. 105 அடி நீளமுள்ள இப் பாடலில் பாண்டியன் பெயரும் வரலாறும் குறிப்பிடப்படாதது கவனிக்கத்தக்கதாகும். நமக்குக் கிடைக்கும் பரிபாடலின் 2050 அடிகளில் அரசியல் வரலாற்றுக் குறிப்பு ஒன்றும் இல்லை.

### பதிற்றுப்பத்து

சங்க காலச் சேர மன்னர்களின் வரலாற்றையும் கால நிலையையும் அறிவதற்குப் பதிற்றுப்பத்தின் பாடல்களும் பதிகங்களும் இன்றியமையாதவை யாகும்.

ஒவ்வொரு சேரன் மேல் பத்துப் பத்துப்பாடலாக, பத்துச் சேரர்கள் மேல் பாடப்பட்ட நூறு பாடல்கள் கொண்டது பதிற்றுப்பத்தாகும். (பத்து X பத்து → பதிற்றுப் பத்து) முதல் பத்தும், பத்தாம் பத்தும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. எஞ்சிய எட்டுப் பத்துகளின் விவரம் கீழே தரப்பட்டுள்ளது.

| பத்து | பாடல் | பாடப்பட்ட சேரர் | பாடிய புலவர் |
|---|---|---|---|
| 2 | 11-20 | இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் | குமட்டூர்க் கண்ணனார் |
| 3 | 21-30 | பல்யானைச் செல்கெழு குட்டுவன் | பாலைக் கௌதமனார் |
| 4 | 31-40 | களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 5 | 41-50 | கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன் | பரணர் |
| 6 | 51-60 | ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 7 | 61-70 | செல்வக் கடுங்கோ வாழியாதன் | கபிலர் |
| 8 | 71-80 | தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை | அரிசில் கிழார் |
| 9 | 81-90 | குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை | பெருங்குன்றூர் கிழார் |

காணாமல் போன முதல் பத்து சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் மேலும், பத்தாம் பத்து சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை மேலும் பாடப்பட்டவையாக இருக்கலாம்.

ஒவ்வொரு பத்துக்கும் பிற்சேர்க்கையாக ஒரு பதிகம் வைக்கப்பட்டுள்ளது. பாடல்களில் குறிப்பிடப்படாத பல வரலாற்றுச் செய்திகள் பதிகங்களில் காணப்படுகின்றன. பாடல்களில் பாடப்பட்ட சேரர்களின் உறவு முறையைப் பதிகங்களால் அறிகிறோம்.

## புறநானூறு

சங்ககால வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் துணைபுரிவது புறநானூறு ஆகும். சங்க காலத்தில் வாழ்ந்த தலைவர்களைப் புலவர்கள் நேர்முகமாகப் பாடிய பாடல்கள் இதில் உள்ளன.

4 அடி முதல் 40 அடி வரை நீளமுள்ள 400 புறப் பாடல்களின் தொகுப்பு புறநானூறு எனப்பட்டது. 400 பாடல்களில் இரண்டு பாடல்கள் (267, 268) இப்போது கிடைக்கவில்லை. 14 பாடல்களை இயற்றிய புலவர்கள் பெயர் தெரியவில்லை. எஞ்சிய 384 பாடல்களை 150 புலவர்கள் பாடியுள்ளார்கள். நூற்றுக்கு மேற்பட்ட தலைவர்கள் புறநானூற்றில் பாடப்படுகிறார்கள்.

புறநானூற்றில் உள்ள பாடல்களைப் பின்வருமாறு பிரிக்கலாம்:

| பகுதி | பாடல் எண்கள் | பொருள் |
|---|---|---|
| 1 | 1 | கடவுள் வாழ்த்து |
| 2 | 2-86 | மூவேந்தர் பாடல்கள் |
| 3 | 87-165 | வள்ளல்கள் பாடல்கள் |
| 4 | 166-181 | படைத்தலைவர்கள் பாடல்கள் |
| 5 | 182-195 | அறிவுரைப் பாடல்கள் |
| 6 | 196-256 | துன்பியல் பாடல்கள் |
| 7 | 257-400 | புறத்திணைப் பாடல்கள்<br>(i) வெட்சித்திணை (257 - 270)<br>(ii) வஞ்சித்திணை<br>(iii) உழிஞைத்திணை (271 - 272)<br>(iv) தும்பைத்திணை (273 - 310)<br>(v) வாகைத்திணை (311 - 335)<br>(vi) காஞ்சித்திணை (336 - 366)<br>(vii) பாடாண்திணை (367 - 400) |

2 முதல் 86 வரை உள்ள 85 பாடல்களில் சங்க காலத்தில் வாழ்ந்த சேர சோழ பாண்டியர் சிலருடைய வீரமும் கொடையும் புகழப்படுகின்றன. 87 முதல் 165 வரையுள்ள 79 பாடல்களில் வந்தவர்களுக்கு எல்லாம் வரையாமல் வழங்கிய வள்ளல்கள் பன்னிருவர் பாடப்படுகிறார்கள். அதியமான் நெடுமான் அஞ்சி, வேள்பாரி, மலையமான் திருமுடிக்காரி, ஆய் அண்டிரன், பேகன், நள்ளி, வல்வில் ஓரி, குமணன் முதலிய வள்ளல்களை இப்பகுதியில் காணலாம். 166 முதல் 181 வரை உள்ள 16 பாடல்களில் சேர சோழ பாண்டியர்களுக்குப் போர்க்காலத்தில் படைத் துணை புரிந்த பன்னிருவர் பாடப்படுகிறார்கள். இவர்களுள் பிட்டங்கொற்றன் சேரன் படைத்தலைவன் ஆவான். ஏனாதி திருக்கிள்ளி, மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன், சிறுகுடி கிழான் பண்ணன் என்பவர்கள் சோழன் படைத்தலைவர்கள் ஆவார்கள். கீரஞ்சாத்தனும், நாலை கிழவன் நாகனும் பாண்டியன் படைத்தலைவர்கள் ஆவர்.

அடுத்துவரும் 14 பாடல்கள் (182 - 195) அறிவுரைப் பாடல்களாகும். தனக்கென வாழாமல் பிறருக்காக உழைக்க வேண்டும் (182) என்றும், கல்வியைக் கற்பது சிறந்தது என்றும் (183), குழந்தைச் செல்வம் இல்லாவிட்டால் எந்தச் செல்வமும் பயனற்றது என்றும் (188), மக்களைத் துன்புறுத்தாமல் நெறி அறிந்து அளவான வரி வசூலிக்க வேண்டும் என்றும் (184), நாடானாலும் காடானாலும் நல்லவர் வாழும் இடமே நல்ல இடம் என்றும் (187), செல்வத்தின் பயன் ஈதலே என்றும் (189), மனைவி மக்கள் வேலையாட்கள் அரசன் ஊரார் நல்லவர்களாக அமைந்தால் கவலையும் இருக்காது; தலையும் நரைக்காது என்றும் (191), யாதும் ஊரே! யாவரும் கேளிர்! எல்லாம் விதி வழியே நடக்கும். அதனால், பெரியோரை வியப்பதும் சிறியோரை இகழ்வதும் கூடா என்றும் (192), நல்லதைச் செய்ய முடியாவிட்டாலும் தீமையைச் செய்யாம லாவது இருக்கவேண்டும் என்றும் (195) இப்பாடல்கள் அறிவுறுத்துகின்றன.

196 முதல் 256 வரை உள்ள 61 பாடல்கள் துன்ப நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டவை.

தலைவர்களிடம் சென்று அவர்களைப் பாடிய புலவர்கள் பரிசு பெறாமல் ஏமாற்றத்தோடு திரும்புவதைச் சில பாடல்கள் கூறுகின்றன. (196 - 211). தலைவர்கள் இறந்தபோது புலவர்கள் பாடிய இரங்கல் பாடல்கள் அடுத்தபடி வைக்கப்பட்டுள்ளன (212 - 242), இளமை நிலையாமையை ஒரு முதியவர் தன் அனுபவத்திலிருந்து தெரிவிக்கிறார் (243). கணவனை இழந்த மனைவி உடன்கட்டை ஏறுவதும், அவ்வாறு ஏறாதவர்கள் விதவைக் கோலம் பூண்டு துன்புறுவதும், மனைவியை இழந்த ஆடவர் துறவறம் மேற்கொள்வதும் சில பாடல்களில் சித்தரிக்கப்படுகின்றன.

புறநானூற்றின் இறுதிப் பகுதியில் (257 - 400) தொல்காப்பியர் தம் புறத்திணை இயலில் கூறும் புறத்திணை இலக்கணப்படி பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன என்ற போதிலும், இப்பாடல்களில் இருந்தும் பல தலைவர்களின் வரலாற்றை அறியமுடிகிறது.

இனி, புறநானூற்றின் முதலில் வைக்கப்பட்டுள்ள மூவேந்தர் பாடல்களின் அமைப்பு முறையை ஆராய்வோம்.

## மூவேந்தர் பாடல்களின் அமைப்பு

புறநானூறு 2 முதல் 86 வரை உள்ள 85 பாடல்களில் சேர சோழ பாண்டியராகிய மூவேந்தர்களின் வீரமும், கொடையும், புகழும் சிறப்பித்துப் பாடப்படுகின்றன.

இப்பாடல்கள் சேரர் - பாண்டியர் - சோழர் என்ற முறையில் அமைக்கப்பட்டுள்ளன. இரண்டாம் பாடல் சேரனைப் பாடினால், மூன்றாம் பாடல் பாண்டியனையும், நான்காம் பாடல் சோழனையும் பாடுகின்றன. மீண்டும் ஐந்தாம் பாடல் சேரனையும், ஆறாம் பாடல் பாண்டியனையும், ஏழாம் பாடல் சோழனையும் பாடுகின்றன.

இந்த வைப்பு முறை பிற்பகுதியில் சற்று மாறி வருகிறது. ஒத்த கருத்துடைய பாடல்கள் கிடைக்காத காரணத்தால், இவ்வாறு மாறி வருகிறது என்று கருதலாம்.

இந்தப் பாடல்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ள முறையை நோக்கினால், சொல்லிலும் பொருளிலும் ஒற்றுமையுடைய பாடல்கள் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ளமை தெரியவரும். பின்வரும் அட்டவணை இதை விளக்கும்.

| சேரர் | பாண்டியர் | சோழர் |
|---|---|---|
| 2. பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் | 3. கருங்கை ஒள்வாள் பெரும்பெயர்வழுதி | 4. உருவப் பல்தேர் இளஞ்சேட்சென்னி |
| 5. கருவூர்ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை | 6. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி | 7. கரிகால் பெருவளத்தான் |
| 8. கடுங்கோ வாழியாதன் | 9. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி | 10. நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி |
| 11. பாலை பாடிய பெருங்கடுங்கோ | 12. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி | 13. சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி (+அந்துவஞ்சேரல் இரும்பொறை) |
| 14. செல்வக்கடுங்கோ வாழியாதன் | 15. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி | 16. இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி |
| 17. யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை | 18-19. நெடுஞ்செழியன் | — |
| 20. யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை | 21. கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெவழுதி | — |
| 22. யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை | 23-26. தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் | 27-33. நலங்கிள்ளி<br>34-42. குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளி வளவன் |
| — | — | 43. நலங்கிள்ளிதம்பி மாவளத்தான் |
| — | — | 44. நெடுங்கிள்ளி |
| — | — | 45. நலங்கிள்ளி நெடுங்கிள்ளி |
| — | — | 46. குளமுளற்றத்துத் துஞ்சியகிள்ளி வளவன் |
| — | — | 47. நெடுங்கிள்ளி |
| 48-49. கோக்கோதை மார்பன் | — | |

| சேரர் | பாண்டியர் | சோழர் |
|---|---|---|
| 50. தகடூர்எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை | 51-52. கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி | — |
| 53. மாந்தரஞ்சேரல் இரும்பொறை | 55-57. இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் | 58. குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன் |
| — | (58) (வெள்ளி அம் பலத்துஞ்சிய பெருவழுதி) | — |
| — | 59. சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் | 60. குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன் |
| — | — | 61. இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி |
| 62-63. குடக்கோ நெடுஞ்சேரலாதன் + (வேல்பல்தடக்கைப் பெருவிறல்கிள்ளி) | 64. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி | (65) (கரிகால் பெருவள்த்தாள்) |
| 65. சேரமான் பெருஞ்சேரலாதன் | — | 66. கரிகால் பெருவளத்தாள் |
| — | — | 67. கோப்பெருஞ்சோழன் |
| — | — | 68. நலங்கிள்ளி |
| — | — | 69-70. குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் |
| — | 71. ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் | — |
| — | 72. த.செ. நெடுஞ் செழியன் | 73. நலங்கிள்ளி |
| 74. கணைக்கால் இரும்பொறை | — | 75. நலங்கிள்ளி |
| | 76-79. த.செ. நெடுஞ் செழியன் | 80-86. போர்வைக் கோப் பெருநற்கிள்ளி |

2 ஆம் பாடலில், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் பகைவரோடு போர் செய்யும் முறை கூறப்

படுகிறது. 3 ஆம் பாடலில், பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி யானையின் பெரிய கழுத்தில் (இரும்பிடர்த் தலை) அமர்ந்து பகைவர் கோட்டை மதிலை அழிப்பது கூறப்படுகிறது. 4 ஆம் பாடலில், சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி நால்வகைப் படைகளால் போர் செய்வதால், பகைவர் நாடு தாயில்லாத குழந்தை பாலின்றி அழுவது போல அழும் என்று கூறப்படுகிறது. 5 ஆம் பாடலில், குழந்தையைப் பாலூட்டி வளர்ப்பவர்போல, நாட்டைப் பாதுகாக்க வேண்டும் என்று சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறைக்கு அறிவுரை கூறப்படுகிறது. இவ்வாறு பல பாடல்கள் மூவேந்தர்கள் போர் செய்து, பகைவர் நாட்டை அழித்ததைக் கூறுகின்றன.

44, 45 ஆம் பாடல்களில் சோழர் குடியைச் சேர்ந்த நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் போர் செய்த போது, கோவூர்கிழார் என்ற புலவர் இருவரையும் சமாதானம் செய்து வைக்க முயன்றது கூறப்படுகிறது. 46 ஆம் பாடலில், கிள்ளிவளவன் என்ற சோழன் தன் பகைவனான மலையமானின் சிறுவர்களை யானையை ஏவிக் கொல்ல முயன்றபோது கோவூர்கிழார் அவனைத்தடுத்து, சிறுவர்களைக் காப்பாற்றியது கூறப்படுகிறது. 47 ஆம் பாடலில், நெடுங்கிள்ளி இளந்தத்தன் என்ற புலவனை ஒற்றன் என்று தவறாக நினைத்துக் கொல்ல முயன்றபோது, கோவூர்கிழார் தடுத்து இளந்தத்தனைக் காப்பாற்றியது கூறப்படுகிறது. சோழநாட்டுப் புலவரான காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் தம் அரசன் மேல் பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன் படையெடுத்து வந்தபோது, ''உன் பகைவனின் காவல் மரத்தை வெட்டிவிடாதே' என்று வேண்டிக் கொள்கிறார். ''சோழனைத் தோற்கடிக்காதே. அவனோடு உடன்பாடு செய்துகொள்'' என்பதை நயமாகப் புலவர் இவ்வாறு கூறுகிறார். இது 57 ஆம் பாடலாக அமைந்துள்ளது. 58 ஆம் பாடலில் சோழனும் பாண்டியனும் உடன்படிக்கை செய்துகொண்டு ஒன்றாக வீற்றிருந்ததை இதே புலவர் பாடுகிறார். இவ்வாறு அரசர்களிடையே பகைமையைத் தீர்த்து வைக்கச் சில புலவர்கள் பாடுபட்டார்கள் என்று அறிகிறோம்.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேல்பல் தடக்கைப் பெருவிறல் கிள்ளியும் போர் செய்தபோது, இரு தரப்புப் படைகளில் ஒருவரும் எஞ்சாமல் இறந்து போயினர். இரு வேந்தர்களும் போர்க்களத்திலேயே

மாய்ந்து போனார்கள். மயானமாக மாறிவிட்ட போர்க் களத்தைச் சென்றுகண்ட கழாத்தலையார், பரணர் என்ற இரு புலவர்கள் நெஞ்சம் குமுறிப் பாடியவை 62, 63 ஆம் பாடல்களாக அமைந்துள்ளன. சேரமான் பெருஞ்சேரலாதனும், சோழன் கரிகால் பெருவளத்தானும் வெண்ணிப் போர்க் களத்தில் போர் செய்தனர். சேரன் மார்பை நோக்கிச் சோழன் வேலை எறிந்தான். சேரன் அஞ்சித் திரும்பினான். வேல் சேரன் முதுகில் பாய்ந்தது. கோழைத்தனத்தால் முதுகில் புண் பெற்றதற்குச் சேரன் நாணமடைந்து, போர்க்களத்திலேயே உண்ணா நோன்பிருந்து உயிரை விட்டான். அவன் உண்ணா நோன்பு இருந்தபோது, அவனைச் சென்று கண்ட கழாத் தலையார் மனமுருகிப் பாடிய பாடல் 65 ஆம் பாடலாக வைக்கப்பட்டுள்ளது. 66 ஆம் பாடலில் வென்ற சோழனைப் பாடும் வெண்ணிக்குயத்தியார் "கரிகால் வளவனே! புறப்புண்ணுக்கு நாணிப் போர்க்களத்தில் வடக்கிருந்த சேரன் உலகில் பெரும் புகழ் பெற்றுவிட்டான். வென்ற உன்னை விட, தோற்றுப்போன சேரனே நல்லவன்' என்று பாடுகிறார்.

சில பாடல்கள் வேந்தர்களின் கொடைச்சிறப்பைக் கவிதை நயத்தோடு பாடுகின்றன. பாண்டிய நாட்டிலே வாழும் பிசிராந்தையார், உறையூரை ஆளும் கோப்பெருஞ் சோழனிடம் அன்னத்தைத் தூது விடுவதுபோல, 67 ஆம் பாடல் அமைந்துள்ளது. "அன்னச் சேவலே! நீ கோப்பெருஞ் சோழனிடம் சென்று, 'நான் பிசிராந்தையாரின் அடியவன்' என்று சொல்வாயானால், உன் பேடை (பெண் அன்னம்) அணிவதற்கு, நல்ல ஆபரணங்களைப் பரிசாக வழங்குவான்" என்று பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழனை இப்பாடலில் புகழ்கிறார். அடுத்து வரும் மூன்று பாடல்கள் (68-70) பாண் ஆற்றுப்படை என்ற இலக்கியத்துறையைச் சார்ந்தவையாகும். சோழன் நலங்கிள்ளியிடம் பரிசு பெற்றுத் திரும்பும் பாணன் ஒருவன், பசியோடு தன்முன் வரும் மற்றொரு பாணனைப் பார்த்து, "நலங்கிள்ளி உறையூரில் இருக்கிறான். அவனிடம் செல்வாயானால், வேறொருவரிடம் சென்று கையேந்த வேண்டாதபடி நிறையப் பரிசு தருவான்" என்று கூறுவது போல 68 ஆம் பாடல் அமைந்துள்ளது. 69, 70 ஆம் பாடல்கள் கிள்ளிவளவனிடம் சென்று பரிசு பெறுமாறு ஒரு பாணன் மற்றொரு பாணனுக்கு வழிகாட்டுவதுபோல அமைந்துள்ளன.

அடுத்து வரும் ஐந்து பாடல்கள் வேந்தர்களின் வீர உணர்ச்சியை வெளிப்படுத்துகின்றன. 71ஆம் பாடல்

ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் பாடியதாகும். பூதப் பாண்டியன் நாட்டின் மேல் பகைவர் பலர் திரண்டு படை யெடுத்து வந்தார்கள். "பகைவர்களைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்யாவிட்டால், நான் என் மனைவியைப் பிரிவேனாக! ஆருயிர் நண்பர்களோடு கலந்து மகிழும் வாழ்வை இழப்பேனாக! நீதிமன்றத்தில் திறமையில்லாத ஒருவனை நீதிபதியாக நியமித்துக் கொடுங்கோல் செய்தேன் ஆகுக! பாண்டிய நாட்டின் வேந்தனாகப் பிறக்காமல், காட்டைக் காக்கும் காவலனாக மாறிப் பிறப்பேன் ஆகுக!" என்று வஞ்சினம் கூறுகிறான். இவ்வாறு வஞ்சினம் கூறுவதை 'வஞ்சினக் காஞ்சி' என்று தொல்காப்பியம் கூறும்.

> **'இன்னது பிழைப்பின் இது ஆகியர்' என**
> **துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும்**
> **(புறத்திணை இயல் 19:8-9)**

என்பது தொல்காப்பியர் கூற்றாகும்.

72ஆம் பாடலில் பாண்டியன் நெடுஞ்செழியன் பின் வருமாறு வீர சபதம் செய்கிறான்: 'என்னை இளையவன் என்று இகழ்ந்த பகை வேந்தர்களைச் சிதறடித்துச் சிறைபிடிக்க வில்லை யென்றால், "எங்கள் அரசன் கொடியவன்" என்று என் குடிமக்கள் பழி தூற்றும் கொடுங்கோலன் ஆவேனாக! மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட புலவர்கள் எனது நாட்டைப் பாடாது நீங்குவார்களாக! இரப்பவர்க்கு எதுவும் தரமுடியாத வறுமையை நான் அடைவேனாக!'

73ஆம் பாடலில் சோழன் நலங்கிள்ளி, 'பகைவனை அழிக்கவில்லையென்றால் விலைமகளிரோடு கூடியவன் ஆவேனாக!' என்று சபதம் செய்கிறான்.

74ஆம் பாடல் சேரமான் கணைக்கால் இரும்பொறை இறக்குந்தருவாயில் பாடிய பாடலாகும். சோழன் செங்கணான், சேரனைத் தோற்கடித்துச் சிறையில் வைத்திருந்தான். சேரன் சிறைக்காவலரை, 'நீர் கொண்டு வருக!' என்று கேட்டான். சிறைக்காவலர் நேரந் தாழ்த்து நீரைக் கொண்டுவந்து அலட்சியமாக நீட்டினர். அதைப் பொறுக்க முடியாத சேரன், 'நாயைப் போலக் கட்டி இழுத்துவந்து சிறையில் அடைத்த பின்பும், பசி பொறுக்கும் வலிமை இன்றி, தண்ணீரை இரந்துண்ணும் அளவுக்கு இழிந்து விட்டவனையா சேரர் மரபு பெற்றுள்ளது?' என்று தன்னைத் தானே நொந்துகொண்டு தண்ணீரை அருந்தாமல் உயிர் விட்டான்.

'முதாதையர் விட்டுச் சென்ற அரச உரிமை ஊக்கமில்லாத சிறியவனுக்கு மிகப் பெரியதாகத் தோன்றலாம். போரிலே சிறந்த பெரியோனுக்கோ அது லேசான தக்கை போலச் சிறியதாகும்' என்று 75ஆம் பாடலில் நலங்கிள்ளி கூறுகிறான். நலங்கிள்ளி மேலும் மேலும் போர் செய்து சோழநாட்டை விரிவுபடுத்தியவன் என்பதை நாம் இங்கு நினைவுகூர வேண்டும்.

71 முதல் 75 வரை உள்ள ஐந்து பாடல்கள் வேந்தர் களாலேயே பாடப்பட்டவையாகும். வேந்தர்களின் வீர உணர்ச்சியை அவர்கள் வாய் மூலமாகவே இவை எடுத்துக் காட்டுகின்றன.

அடுத்து வரும் நான்கு பாடல்கள் (76-79) நெடுஞ் செழியன் இளையவனாக இருந்தபோதும் ஏழு பகைவர்களைத் தலையாலங்கானத்துப் போரில் வென்றதைச் சற்று உயர்வு நவிற்சியோடு கூறுகின்றன.

இப்பகுதியின் இறுதியில் உள்ள ஏழு பாடல்கள் (80-86) சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியைப் பாடுகின்றன. இவன், உறையூரிலிருந்து ஆட்சி செய்த சோழர்களில் பழமையானவன்.

வேந்தர்கள் தமிழ்ப் புலவர்கள் மேல் கொண்ட பெருமதிப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது 50ஆம் பாடலாகும். சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறையைப் புகழ்ந்து மோசிகீரனார் இப்பாடலைப் பாடினார். சேரனின் போர்முரசு கழுவப்படுவதற்கு எடுத்துச் செல்லப் பட்டதால் முரசு கட்டில் காலியாக இருந்தது. சேரனைக் காண்பதற்காக அங்கு வந்த மோசிகீரனார் வழிநடைக் களைப்பால் முரசு கட்டில் மேல் படுத்து உறங்கிவிட்டார். முரசு கட்டில் அரசு கட்டிலைப் போல் புனிதமானது. அதைக் கறைப்படுத்துவோர் மரண தண்டனைக்கு உள்ளாவர். கழுவப்பட்ட போர்முரசுடன் திரும்பிய பெருஞ்சேரல் இரும்பொறை, முரசு கட்டிலில் படுத்து அதைக் கறைப்படுத்தியவனைக் கொல்ல வாளை உருவினான். அருகில் சென்று பார்த்தபோது மோசிகீரனார் ஆழ்ந்து உறங்குவது தெரிந்தது. இரும்பொறையின் கோபம் இரக்கமாக

மாறியது. உருவிய வாளை உறையிலிட்டான். புலவர் உறக்கத்திலிருந்து எழுந்திருக்கும்வரைதானே அவருக்குக் கவரி வீசினான். உறங்கி எழுந்த மோசிகீரனார் சேரன் செயலுக்கு வியந்து, 'இவ்வுலகில் புகழ் உடையோர்க்கு அன்றி அவ்வுலகில் (சொர்க்கத்தில்) வாழ்வில்லை என்று கேள்விப் பட்டதால் இவ்வாறு செய்தாயோ?' என்று கேட்டார். புலவர் கூறியதுபோல, பெருஞ்சேரல் செய்த செயல் இன்றுவரை இவ்வுலகில் அவன் புகழை நிலவச் செய்துள்ளது.

தலைவர்களிடம் பரிசு பெறும் ஆசையுடன் அவர்களைப் புகழ்ந்து பாடி, பரிசு பெறாமல் வெறுங்கையுடன் மீளும் புலவர்கள், தலைவர்களைத் தாக்கிப் பாடும் பாடல்களைப் புறநானூற்றில் காண்கிறோம். இந்தத் தாக்குதலுக்கு மூவேந்தர்களும் விதிவிலக்கல்லர். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பல புலவர்களைப் பரிசு தாராமல் ஏமாற்றினான் என்று தோன்றுகிறது. அவர்களில் இருவர் அவனை இகழ்வதைப் புறம் 196, 198 ஆம் பாடல்களில் காணலாம். சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனை உணர்ச்சி இல்லாதவன் என்று ஒரு புலவர் புறம் 197இல் சாடுகிறார். பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர் தன் நா வருந்தும் அளவுக்குச் சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறையைப் புகழ்ந்து பல பாடல்கள் பாடினார். ஆனால் அவனோ பரிசு தருவதாகக் காணோம். "நான் பாடப்பாட எனது பாட்டின் புகழைக் கொண்டவனே! முதல்நாள் பரிசு கையில் உள்ளதுபோல் கட்டி என்னை ஏமாற்றினாய். அடுத்த நாள், என் பின்னால் பொய் வருத்தத்தோடு நின்று, 'பரிசுதர என் கையில் எதுவுமில்லை' என்று கூறினாய். பாலில்லாத தாய் முலையைச் சுவைத்துப் பால் பெறாத புதல்வனோடு பட்டினியால் சிறுகச் சிறுகச் செத்துக் கொண்டிருக்கும் என் மனைவியை நினைத்துக் கொண்டு, நான் வீடு திரும்புகிறேன்' என்று புலவர் பாடுவதைப் புறம் 210, 211 ஆம் பாடல்களில் காணலாம்.

தலைவர்கள் இறந்தபோது புலவர்கள் பாடிய இரங்கல் பாடல்களையும் புறநானூற்றில் காண்கிறோம். கோப்பெருஞ் சோழன் அடங்காத பிள்ளைகளின் செயலால் வெறுப் படைந்து, வடக்கிருந்து, உண்ணாவிரதம் இருந்து உயிர்

விட்டதையும், அவனோடு சான்றோர் சிலரும் உயிர் நீத்ததையும் புறநானூற்றில் பன்னிரண்டு பாடல்கள் (212-223) உருக்கமாக நமக்குத் தெரிவிக்கின்றன. சோழன் கரிகால் பெருவளத்தான் இறந்தபோது அவன் செயல்கள் பலவற்றை நினைவுகூர்ந்து கருங்குழலாதனார் என்ற புலவர் ஓர் இரங்கல் பாடல் பாடியுள்ளார். (புறம் 224) பெரும்படை நடத்திச் சென்று பகைவர்களை வென்ற சோழன் நலங்கிள்ளியின் ஆற்றல் இப்போது இடுகாட்டில் மாய்ந்துவிட்டதே! என்று நலங்கிள்ளி மேல் ஆலத்தூர் கிழார் பாடிய இரங்கல் பாடலைப் புறம் 225 இல் காணலாம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தபோது மூன்று புலவர்கள் பாடிய இரங்கல் பாடல்கள் நமக்குக் கிடைத்துள்ளன (புறம் 226-228). "கூற்றம் (எமன்) கிள்ளிவளவன் உயிரை வருத்திக்கொண்டு போயிருக்க முடியாது. பாடுவோரைப் போலக் கைதொழுது, புகழ்ந்து, இரந்து எமன் அவன் உயிரைக் கொண்டு சென்றிருக்க வேண்டும்" என்று ஒரு புலவர் பாடுகிறார் (புறம்.226). மற்றொரு புலவர் எமனைப் பார்த்து, "அறிவில்லாத பேதையே! விதையைச் சமைத்து உண்ட உழவனைப்போல நீ கிள்ளி வளவனை விழுங்கி விட்டாயே! அவன் உயிரோடு இருந்த போது போர்க்களத்தில் ஆயிரம் உயிர்களை உனக்கு அருந்தக் கொடுத்தானே! இனி யார் உன் பசியைத் தீர்க்கப் போகிறார்கள்?" என்று கேட்கிறார் (புறம். 227). இறந்த அரசர்கள் உடலைத் தாழியில் வைத்து அடக்கம் செய்வது அக்காலத்து வழக்கம். கிள்ளிவளவன் உடலை அடக்கம் செய்வதற்காகத் தாழி செய்யும் குயவனை நோக்கி ஒரு புலவர் கூறுகிறார். "கிள்ளிவளவன் புகழ் உடம்பு நிலவுலகெல்லாம் பரந்து வானளாவ உயர்ந்துவிட்டது. அவன் தேவர் உலகம் சென்றுவிட்டான். குயவனே! அவனை இந்தத் தாழியால் எப்படி மூடமுடியும்? இந்த நிலவுலகையே சக்கரமாகக் கொண்டு, பெரிய மலையை மண்ணாகப் பிசைந்துவைத்து, பெரிய தாழி ஒன்றை உன்னால் செய்ய முடியுமா? அவ்வாறு செய்தால்தான் கிள்ளிவளவனின் புகழ் உடம்பை மூடமுடியும்" (புறம்.228).

சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சிலகாலம் நோய்வாய்ப்பட்டிருந்தான். ஒருநாள் வானில் ஒரு மீன் (எரிநட்சத்திரம்) பேரொளி பரப்பி, காற்றில்

பிதிர்ந்து பொங்கி விழுந்தது. அதைக் கண்ட கூடலூர்கிழார் என்ற புலவர் 'நம் அரசனுக்கு எதுவும் நேராமல் இருக்க வேண்டுமே!' என்று அஞ்சினார். அவர் அஞ்சியபடி மீன் விழுந்த ஏழாம் நாள் சேரன் இறந்து போனான். கூடலூர் கிழார் மனமுருகிப் பின்வருமாறு பாடினார்:

"பங்குனி மாதம் முதல் பதினைந்தில் ஒருநாள் நள்ளிரவு. வானத்தில் மேஷராசியில் கார்த்திகையின் முதல் பாதம் இருந்தது. உச்சியில் உத்தரம் இருக்க, மூலம் உதிக்க, மிருக சீரிடம் அத்தமிக்க ஆரம்பித்த நேரம். வானத்திலிருந்து ஒரு மீன் பேரொளி பரப்பி, காற்றில் பிதிர்ந்து பொங்கி, கிழக்கிலும் வடக்கிலும் செல்லாமல் அனுடத்திலிருந்து தொடங்கி, புனர்பூசத்தின் கடைசிவரை சென்று பிறகு வானத்திலிருந்து விழுந்தது.

அதைக் கண்ட நானும், என்னைப் போன்ற பல்வேறு இரவலர்களும், 'இந்நாட்டின் தலைவன் நோயில்லாதவனாக குணமடைந்துவிட்டால் நன்றாக இருக்குமே!' என்று நெஞ்சழிந்து வருந்தினோம். மீன் விழுந்து இன்று ஏழாவது நாள் அரசன் மேலோர் உலகம் சென்றுவிட்டான்" (புறம்.229).

[இந்தப் பாடலில் பழந்தமிழர் வானநூல் அறிவைக் காண்கிறோம், மேலும், நட்சத்திரங்களின் பெயர்கள் தூய, எளிய தமிழ்ச் சொற்களால் வழங்கப்படுவதையும், அச்சொற்கள் பாடலில் இயல்பாகப் பயின்று வருவதையும் காண்கிறோம். மேஷராசி, 'ஆடு' என்றும், கார்த்திகை நட்சத்திரம் 'அழல்' என்றும், அனுஷ நட்சத்திரம் 'முடப்பனை' என்றும், புனர்பூச நட்சத்திரம் 'குளத்துக்கயம்' என்றும், உத்தர நட்சத்திரம் 'தலைநாள் மீன்' என்றும், மூலநட்சத்திரம் 'நிலைநாள் மீன்' என்றும், மிருகசீரிடம் 'தொலைநாள் மீன்' என்றும் வழங்கப்படுகின்றன. பூர்வபட்சம் (மாதத்தின் முதல் பதினைந்து நாள்) 'உயர் அழுவம்' எனப்படுகிறது. நட்சத்திரத்தின் முதல் பாதம் (கால்) 'குட்டம்' எனப்படுகிறது. கிழக்குத் திசையும் வடக்குத் திசையும் முறையே 'பாசி', 'ஊசி' எனப்படுகின்றன.

வானத்திலிருந்து எரிநட்சத்திரம் விழுவதை வருணிக்கும் புறம்.229 ஆம் பாடல் பகுதி வருமாறு:

ஆடு இயல் அழல் குட்டத்து
ஆர் இருள் அரை இரவில்,
முடப்பனையத்து வேர் முதலாக்
கடைக் குளத்துக் கயம் காய,
பங்குனி உயர் அழுவத்து.
தலைநாள் மீன் நிலைதிரிய,
நிலைநாள் மீன் அதன் எதிர் ஏர்தர,
தொலைநாள் மீன் துறைபடிய,
பாசிச் செல்லாது, ஊசி துன்னாது,
அளக்கர்த்திணை விளக்காகக்
கனைஎரி பரப்ப, கால் எதிர்பு பொங்கி,
ஒருமீன் வீழ்ந்தன்றால் விசும்பினானே. (புறம்.229; 1-12)

கணவனை இழந்த மனைவியும், மனைவியை இழந்த கணவனும் தம் வாழ்க்கைத் துணையை எண்ணிக் கலங்கும் பாடல்களும் புறநானூற்றிலே உள்ளன (புறம் 244-256). சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, தன் அரசி இறந்தபோது, பெருஞ் சோகத்தில் ஆழ்ந்தான். ஆனால் அந்தச் சோகத்திற்கு அவன் உயிரைப் போக்கும் ஆற்றல் இல்லை. உண்மையில் அது சோகம்தானா? அல்லது வெளிவேஷமா? என்று அவன் ஐயுறுகிறான். சேரமான் கூறுகிறான்:

"என்னதான் மிகுதியாக இருந்தாலும் என் சோகத்தின் அளவு எவ்வளவு? என் உயிரைப் போக்கும் ஆற்றல் அந்த சோகத்திற்கு இல்லையே! கள்ளி வளர்ந்த சுடுகாட்டிலே, விறகுப் படுக்கையின் மேல் அவளைக் கிடத்தி, நெருப்பை மூட்டிவிட்டார்களே! என்னை விட்டுவிட்டு என் மடந்தை முன்னே மாய்ந்து போனாளே! இன்னும் நான் உயிர் வாழ்கிறேனே! என் சோகத்தின் பண்பு என்ன?" (புறம்.245)

சேரமான் துயரம் நம் நெஞ்சைத் தொடுகிறது.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், தன் மேல் ஒருங்கு திரண்டு படையெடுத்து வரும் வேந்தர்களை முறியடிப்பேன் என்று வீர சபதம் செய்ததை வேறொரு பாடலில் (புறம்.71) கண்டோம். ஆனால் அவன் போர்க்களத்தில் இறந்து போனான். அவனைப் பிரிந்து விதவை வாழ்க்கை மேற் கொண்டு வாழ விரும்பாத அவன் மனைவி உடன்கட்டை ஏறத் தீர்மானித்தாள். சான்றோர்கள் தடுத்தும் கேளாமல், 'எரியும்

ஈமப்படுக்கையில் ஏறுவது உங்களுக்குக் கடினமாகத் தோன்றலாம். கணவனை இழந்த எனக்கோ தாமரை மலர் மலர்ந்த நீர்நிறைந்த பொய்கையும் தீயும் ஒன்றுதான்'' என்று கூறி உடன்கட்டை ஏறினாள் (புறம்.246, 247).

புறநானூற்றின் இறுதி 34 பாடல்கள் (புறம்.367-400) பாடாண்திணைப் பாடல்கள் ஆகும். பாடலில் வைத்துப் பாடுவதற்கேற்ற சிறந்த பண்புகளும் செயல்களும் உடைய சிறந்த ஆண்மகனைப் புகழ்ந்து பாடும் பாடல்கள் பாடாண் திணைப் பாடல்கள் எனப்பட்டன. இப்பாடல்களில் ஒருவிதக் கவிதைமரபு காணப்படுகிறது. பொருநன் ஒருவன் தன் தடாரிப் பறையைக் கொட்டிக் கொண்டு அதிகாலையில் தலைவன் வாசலில் வந்துநின்று அவனைப் புகழ்ந்து பாடுகிறான். தலைவன் மகிழ்ந்து பொருநனின் கந்தை உடையைக் களைந்து புத்தாடை அணிவிக்கிறான். விருந்து படைக்கிறான்; பரிசு வழங்குகிறான். இவ்வாறு சில பாடல்கள் அமைந்துள்ளன. வேறு சில பாடல்களில் பொருநன் போர்க்களம் சென்று, போரில் வெற்றி பெற்ற தலைவனைப் பார்த்துத் தனக்கு யானையைப் பரிசாகத் தருமாறு கேட்கிறான். மற்றும் சில பாடல்களில் பரிசு பெற்ற புலவர்கள் மகிழ்ந்து தலைவர்களை வாயார வாழ்த்துகிறார்கள். பாடாண்திணைப் பாடல்களில் சேரமான் மாரிவெண்கோ (புறம்.367), நெடுஞ்சேரலாதன் (புறம்.368), செங்குட்டுவன் (புறம்.369), செல்வக்கடுங்கோ வாழியாதன் (புறம்.387), வஞ்சன் (புறம்.398) ஆகிய சேரர்களும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி (புறம்.367, 377), இளஞ்சேட் சென்னி (புறம்.370, 378), கிள்ளிவளவன் (புறம்.373, 386, 393, 397), நலங்கிள்ளி (புறம்.382, 400) ஆகிய சோழர்களும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி (புறம்.367), தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம்.371, 372) ஆகிய பாண்டியர்களும் பாடப்படுகிறார்கள்.

இவ்வாறு புறநானூற்றின் பல பகுதிகளிலும் மூவேந்தரைப் பற்றிய பாடல்கள் விரவி வருவதைக் காண்கிறோம்.

## சங்க காலம்

சங்ககாலம் எது என்ற வாதம் இன்னும் தீர்ந்தபாடில்லை. கி.பி.எட்டாம் நூற்றாண்டில் எழுந்த இறையனார் அகப்பொருள் உரையில் கூறப்படும் முச்சங்கக் கதையை உண்மை என்று கருதும் பழமைவாதிகள், பாண்டியர் தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற மூன்று சங்கங்களை நிறுவிப் பத்தாயிரம் ஆண்டுகள் தமிழ் வளர்த்தார்கள் என்றும், கடைச்சங்கம் கி.பி.230க்குள் முடிந்துவிட்டது என்றும், தலைச்சங்கம் 11750 ஆண்டுகளுக்கு முன்னே தொடங்கப்பட்டது என்றும், இடைச்சங்கம் கி.மு.5320இல் தொடங்கியது என்றும், தொல்காப்பியர் காலமும் அதுவே என்றும் கூறுகிறார்கள். (வெள்ளைவாரணனார் - தொல்காப்பியம்: பக்.103) புதுமைவாதிகள் சங்ககாலம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டு என்று கூறுவார்கள். இக்கொள்கைக்கு மூன்று ஆதாரங்கள் காட்டப்படுகின்றன.

1. கி.பி.171-193இல் இலங்கையை ஆண்ட கயவாகு மன்னனும், சேரன் செங்குட்டுவனும் சமகாலத்தவர்.

2. கி.பி.முதலிரு நூற்றாண்டுகளில் எழுதப்பட்ட கிரேக்க நூல்களில் தமிழகத்து வாணிகத்தைப் பற்றிக் கூறப்படும் செய்திகள், சங்கப் பாடல்கள் கூறும் செய்திகளோடு ஒத்துள்ளன. மேலும், கி.பி.முதலிரு நூற்றாண்டுகளில் ஆட்சி புரிந்த உரோமாபுரி அரசரின் நாணயங்கள் தமிழகமெங்கும் கிடைத்துள்ளன.

3. கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த புகலூர்க் கல்வெட்டில், கோ ஆதன் செல்லிரும்பொறை மகன் பெருங்கடுங் கோனின் மகனான இளங்கடுங்கோ தான்

இளவரசன் ஆனபோது செங்காயபன் என்ற சமணத் துறவிக்கு மலைக்குகையில் கல் படுக்கை அமைத்துத் தந்தான் என்று கூறப்படுகிறது. இவர்கள் சங்ககாலச் சேரர்களான செல்வக் கடுங்கோ வாழியாதனும், அவன் மகன் பெருஞ்சேரல் இரும்பொறையும், பேரன் இளஞ்சேரல் இரும்பொறையும் என்று ஐராவதம் மகாதேவன் கருதுகிறார்.

பழமைவாதிகளின் கருத்து தவறானது என்பதை மானுடவியலார் (Anthropologists) கூறும் காலநிலைகளோடு ஒப்பிட்டுப் பார்த்து நிறுவலாம். குரங்கிலிருந்து மனித இனம் பிரிந்து 25 இலட்சம் ஆண்டுகள் ஆனபோதிலும், பேசத் தெரிந்த இன்றைய மனிதன் (Homo sapiens sapiens; cro-magnon) தோன்றி 50,000 ஆண்டுகளே கழிந்துள்ளன. இம் மனிதன் முதல் 35,000 ஆண்டுகள் வேட்டையாடியும், இயற்கையாகக் கிடைக்கும் உணவைச் சேகரித்தும் உண்டு வாழ்ந்தான். 10-15 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்புதான் உழவு செய்யவும், விலங்குகளைப் பழக்கி உபயோகிக்கவும், மட்பாண்டங்கள் செய்யவும் கற்றுக் கொண்டான். கி.மு.14000-7000 என்ற கால எல்லையில் மொழி தோன்றி வளரலாயிற்று. ஆடலும் பாடலும் மனிதனின் இயற்கைக் குணங்களாகும். இவை பண்பட்ட இலக்கியமாக உருவெடுத்து 5000 ஆண்டுகளே ஆகியுள்ளன. இலக்கியம் முதலில் வாய்மொழி இலக்கியமாகவே உலவி வந்தது. மனிதன் எழுதக் கற்றுக் கொண்ட காலத்திலும் முதலில் எழுதி வைக்கப்பட்டவை வாணிபக் கணக்குகளும், சொத்துப் பரிமாற்றங்களும், மக்களின் சட்ட திட்டங்களுமே. எழுத்து தோன்றிய பிறகும் இலக்கியம் நெடுங்காலம் வாய்மொழி இலக்கியமாகவே இருந்து வந்தது. 3000 ஆண்டுகளுக்கு முன்புதான் இலக்கியத்தை ஏட்டில் எழுதி வைக்கும் வழக்கம் ஏற்பட்டது. (The Divine Plot - A.T. Mann, (1986) pp.113-138; Growth of literature -vol.III - H.M. Chadwick and N.K. Chadwick - pp.697-700)

தொல்காப்பியர் எழுத்துக்களுக்கு வரிவடிவம் கூறுகிறார். மெய்யெழுத்துக்கள் புள்ளியோடு நிற்கும் என்றும், எகர ஒகரங்களும் அவ்வாறே புள்ளி பெறும் என்றும், உயிர்மெய் எழுத்துக்களில் அகர உயிர்மெய் புள்ளியில்லாத மெய் எழுத்தைப் போல எழுதப்படும் என்றும், மற்ற உயிர்மெய்கள் மெய் எழுத்தின் உருவம் திரிந்து எழுதப்படும் என்றும் அவர் குறிப்பிடுகிறார். (தொல்.நூல் மரபு.15-17). தொல்காப்பியர் தமிழ் இலக்கியத்திற்கு இலக்கணம் கூறுவதால், அவருக்குச் சில

நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழில் பண்பட்ட இலக்கியம் தோன்றியிருந்தது என்பதும், அந்த இலக்கியம் எழுத்தில் எழுதி வைக்கப்பட்டது என்பதும் தெளிவாகின்றன. மேலும், சங்க கால மக்களின் அன்றாட வாழ்க்கையில் எழுத்து பயன் படுத்தப்பட்டதைச் சில பாடல்கள் நமக்குத் தெரிவிக்கின்றன. தூது செல்லும் பார்ப்பான், எழுதப்பட்டு மடித்த ஓலையை எடுத்துச் சென்றான் என்று ஒரு பாடல் கூறுகிறது (அகம். 337:7). நியாய சபையினர் (அவையத்தார்) செயல்முறைகள் ஓலையில் எழுதப்பட்டு முத்திரையிடப்பட்டு அனுப்பப்படும் என்று வேறொரு பாடல் கூறுகிறது (கலித்.94:42-43). ஆவணங்களை ஓலையில் எழுதி, குடத்தில் வைத்து மூடி, முத்திரையிட்டு பாதுகாப்பார்கள் என்றும், ஆவணமாக்கள் குடத்தின் மேலுள்ள முத்திரையை உடைத்து, குடத்திலுள்ள ஆவணத்தைக் கொள்வார்கள் என்றும் மற்றொரு பாடல் தெரிவிக்கிறது (அகம்.77:7-8). எனவே எழுதிவைக்கப்பட்ட சங்க இலக்கியத்தை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் கொண்டு செல்வதற்கில்லை. இன்றைக்கு 12,000 ஆண்டுகளுக்கு முன் தலைச்சங்கம் தமிழை ஆராய்ந்தது என்றும், அச்சங்கத்தில் புறநானூற்றின் இரண்டாம் பாடலை எழுதிய முரஞ்சியூர் முடிநாகராயர் இருந்தார் என்றும், 7000 ஆண்டுகளுக்கு முன் இடைச்சங்கம் இருந்தது என்றும், அதில் தொல்காப்பியர் இருந்தார் என்றும் கூறும் இறையனார் அகப்பொருள் உரைக்கதையைக் கற்பனை என்று தள்ள வேண்டும். பி.டி. சீனிவாச அய்யங்காரும் (Hisotry of the Tamils, pp. 225-252), கே.என். சிவராச பிள்ளையும் (Chronology of the Early Tamils, p.17) பல காரணங்களைக் காட்டி முச்சங்கக் கதை வெறும் கட்டுக்கதை என்று அறுபது ஆண்டுகளுக்கு முன்பே நிறுவியுள்ளார்கள்: என்றாலும் இன்றும் இந்தக் கதையை உண்மை என்று நம்பும் அறிஞர்கள் ஒருசிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். பெரும்பாலான தமிழ் அறிஞர்கள் இக்கதையை இன்று ஏற்றுக் கொள்வதில்லை.

சங்ககாலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்ற கொள்கை இன்றைய தமிழ் உலகத்தில் வேரூன்றி நிலைத்திருப்பதால், அக்கொள்கையை மறுத்துக் கூறுவதும், அதைத் தவறு என்று நிறுவுவதும் எளிய செயலல்ல. என்றாலும், இன்று நமக்குக் கிடைக்கும் சங்கப் பாடல்களில் பெரும்பாலானவை கி.மு. ஆறாம் நூற்றாண்டிலிருந்து கி.மு. முதல் நூற்றாண்டுக்குள் எழுதப்பட்டவை என்று தோன்றுகின்றன. குறிப்பாக

அப்பாடல்களில் வரும் மூவேந்தர்களும் பிற தலைவர்களும் கி.மு. நான்காம் நூற்றாண்டிலிருந்து கி.மு. முதல் நூற்றாண்டு வரை வாழ்ந்தவர்கள் என்று கணித்துக் கூறலாம். கி.மு. முதல் நூற்றாண்டிலேயே சங்க காலம் - குறிப்பாக முற்சங்க நூல்கள் எழுதப்பட்ட காலம் - முடிந்துவிட்டது. கிறிஸ்து அப்தம் தொடங்கியபோது மூவேந்தர்கள் தமிழ்நாட்டைச் சுதந்திரமாக ஆளவில்லை. தமிழரல்லாதவர் மூவேந்தர்களை முறியடித்து, சோழ மன்னர்களைத் தமிழ்நாட்டிலிருந்து விரட்டி ஆந்திராவில் தஞ்சம் புகச்செய்தனர். சேரநாடு சிதறுண்டு சேர குடும்பத்தினர் சிலர் கொங்கு நாடு அடைந்து கரூர்ப் பகுதியில் குறுநிலத் தலைவர்களாக வாழத் தொடங்கினர். பாண்டியர் அந்நியருக்கு அடங்கிப் பாண்டிய நாட்டிலேயே வாழ்ந்தனர். அந்நியர் தொடர்பால் தமிழர் பண்பாட்டிலும், தமிழ்மொழியிலும் மாறுதல் ஏற்படத் தொடங்கியது. இம்மாறுதல்களைக் கலித் தொகை, பரிபாடல் ஆகிய பிற்சங்க நூல்களில் காணலாம்.

மூவேந்தர்களை முறியடித்த அந்நியர்களைக் களப்பிரர் என்று பிற்காலத்துச் சாசனங்கள் கூறுகின்றன. களப்பிரர் படையெடுப்பு கி.பி.மூன்றாம் நூற்றாண்டில் நிகழ்ந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். ஆனால் களப்பிரர்களோ அவர்களின் முன்னோடிகளோ கிறிஸ்து சகாப்தம் தொடங்கும் போதே, தமிழ்நாட்டின் அதிபதிகளாகிவிட்டார்கள்.

இந்நிலையில், சங்ககால மூவேந்தர்கள் வாழ்ந்த காலம் கி.மு. நான்காம் நூற்றாண்டிலிருந்து கி.மு. முதல் நூற்றாண்டு வரை என்று முடிவு செய்ய வேண்டியுள்ளது. இம் முடிவுக்கு ஆதாரமாக இருப்பவை:

1. கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட முதுகுடுமிப் பெருவழுதியின் நாணயங்கள்.
2. கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் - பிராமி கல்வெட்டுகளில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பெயர் காணப்படுகிறது.
3. கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த தனநந்தன் பெருஞ் செல்வத்தைக் கங்கையாற்றில் ஒளித்து வைத்ததை, சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன (அகம். 251, 265).
4. கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் மௌரியர் தமிழ்நாட்டின் மேல் படையெடுத்ததைச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன (புறம்.175, அகம். 69, 251, 281).

5. கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த அசோகரின் கல்வெட்டுகள் (2, 13) தமிழ் நாட்டில் சோழர், பாண்டியர், சதியபுத்ரர், சேரர் ஆகிய நான்கு அரசர்களின் அரசுகள் சிறப்புற்று விளங்கின என்று கூறுகின்றன. சதியபுத்ர நாடு (அதியர் நாடு) பாண்டிய நாட்டை விடப் பெரியதாகவும் சிறப்புற்றும் விளங்கியதை ஒல்லையூர் தந்த பூதப்பாண்டி யனே ஒரு பாடலில் குறிப்பிடுகிறான் (அகம். 25).

6. கலிங்க அரசன் காரவேலன் ஹத்திகும்பா கல்வெட்டில், 113 ஆண்டுகளாக நிலவிய தமிழர் கூட்டணியைத் தான் அரியணை ஏறிய பதினோராம் ஆண்டில் அழித்ததாகக் கூறிக் கொள்கிறான். காரவேலன் அரியணை ஏறியது கி.மு.176 இல் ஆதலால், அவன் குறிப்பிடும் தமிழர் கூட்டணிகி.மு. 278 முதல் கி.மு.165 வரை இருந்தது என்று கொள்ள வேண்டும். இந்தக் கூட்டணி மௌரியர் படை யெடுப்புக்குப் பின் மூவேந்தர்களால் தமிழ்நாட்டின் எல்லையப் பாதுகாக்க நிறுவப்பட்டது போலும். இந்தக் கூட்டணி சங்கப் பாடல் ஒன்றில் பின்வருமாறு குறிப்பிடப் பட்டிருக்கிறது:

வென்றியொடு...
தமிழ் கெழு மூவர் காக்கும்
மொழிபெயர் தேஎத்த பல்மலை (அகம் 31:12, 14-15)

இந்த ஆதாரங்கள், சங்கப் பாடல்கள் கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் எழுந்தவை என்ற கருத்தை மறுப்பவையாக அமைந்துள்ளன. இனி, கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக் கொள்கைக்கு ஆதரவாகக் காட்டப்படும் சான்றுகளை ஆராய்வோம்.

செங்குட்டுவன் சேரநாட்டில் கண்ணகிக்குக் கோயில் கட்டி வழிபட்டபோது, இலங்கை வேந்தன் கயவாகு அங்கு இருந்தான் என்று சிலப்பதிகாரத்தின் இறுதி அடிகள் கூறுகின்றன:

உலக மன்னவன் நின்றோன் முன்னர்...
குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும்
கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்
'எம்நாட்டு ஆங்கண், இமய வரம் பனின்
நன்னாள் செய்த நாள்ணி வேள்வியின்

வந்தீகு' என்றே வணங்கினர் வேண்டத்
'தந்தேன் வரம்!' என்று எழுந்தது ஒரு குரல்
(சிலப்:30:156, 159-164)

கொங்கரும், மாளுவ வேந்தர்களும், இலங்கை வேந்தன் கயவாகுவும் பத்தினித் தெய்வத்தை வணங்கி, 'இமய வரம்பனான செங்குட்டுனின் வேள்வியில் எழுந்தருளியது போல, எங்கள் நாட்டிலும் எழுந்தருள வேண்டும்' என்று வேண்டினார்கள். பத்தினித் தெய்வம் அசரீரியாக, 'நீங்கள் கேட்ட வரத்தைத் தந்தேன்' என்று கூறியது.

சிலப்பதிகாரத்தின் இறுதியில் உள்ள இப்பகுதியோடு, சிலப்பதிகாரத்தின் முன்பு வைக்கப்பட்டுள்ள 'உரைபெறு கட்டுரை' முரண்படுகிறது. பாண்டியன் வெற்றிவேல் செழியன் பத்தினிக்கு விழா எடுக்க, அந்நாட்டில் மழை பெய்து வறுமை நீங்கியது. அதைக் கேள்விப்பட்ட கொங்குநாட்டு இளங்கோசர், தங்கள் நாட்டில் விழா எடுக்க, அங்கு மழை விடாமல் பெய்தது. அதைக் கேள்விப்பட்ட 'கடல்சூழ் இலங்கைக் கயவாகு என்பான்' தன் நாட்டில் பத்தினிக்குக் கோயில் கட்டி ஆடி மாதம் விழா எடுத்துப் பத்தினிச் சிலையை நகர்வலம் செய்வித்தான் என்று உரைபெறு கட்டுரை கூறுகிறத. பாண்டியனும் கோசரும் பத்தினிக்கு விழா எடுத்து நலம் பெற்றதைக் கேட்ட பிறகே, கயவாகு பத்தினிக்குக் கோயில் கட்டினான் என்று உரைபெறு கட்டுரை கூறுகிறது. பத்தினி வழிபாடு சேர நாட்டிலிருந்து, பாண்டிய நாடு, கொங்கு நாடுகளுக்குப் பரவிய பிறகே, இலங்கைக்குச் சென்றதை உரைபெறு கட்டுரை உணர்த்துகிறது. கி.பி.14ஆம் நூற்றாண்டுக்கு முன் பத்தினி வழிபாடு இலங்கையில் இருந்த தற்குச் சான்றில்லை. கி.பி.16ஆம் நூற்றாண்டில் எழுந்த 'இராஜாவளி' என்ற இலங்கை நூலில்தான் பத்தினி வழிபாடு கயவாகுவுடன் தொடர்பு படுத்தப்படுகிறது. கயவாகு என்ற பெயரில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ஒருவனும், கி.பி.12ஆம் நூற்றாண்டில் ஒருவனும் இலங்கையை ஆண்டுள்ளனர். கி.பி.12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இரண்டாம் கயவாகு இலங்கையில் பத்தினிக் கோயிலைக் கட்டி, விழா நடத்தியிருக்கலாம். (Ceylon - G.C. Mendis in A Comprehensive History of India - Vol.II - p.587; History of Tamil Language and Literature - S. Vaiyapuri Pillai, p.144). கி.பி. இரண்டாம்

நூற்றாண்டில் வாழ்ந்த முதலாம் கயவாகு, செங்குட்டுவன் சேரநாட்டில் பத்தினிக் கோயில் கட்டி விழா நடத்தியபோது வந்திருந்தான் என்பதற்கு தீபவம்சம், மகாவம்சம் போன்ற இலங்கை நூல்களிலோ தமிழ்நாட்டுச் சங்கப் பாடல்களிலோ சான்றில்லை. எனவே, செங்குட்டுவனும் கயவாகுவும் சமகாலத்தவர் என்று கூறும் சிலப்பதிகாரத்தின் இறுதி அடிகளை (30: 156-164) பிற்சேர்க்கை என்று தள்ள வேண்டும். கி.பி.12ஆம் நூற்றாண்டில் இரண்டாம் கயவாகு இலங்கையில் பத்தினிக் கோயிலைக் கட்டி விழா எடுத்த பிறகு, இவ்வடிகள் (சிலப்.30: 156-164) புனையப்பட்டு, சிலப்பதிகரத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கலாம். இவ்வடிகளை ஆதார மாகக் கொண்டு, செங்குட்டுவனையும் சங்ககாலத்தையும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்குத் தள்ளிவிடக் கூடாது.

கி.பி. முதலிரு நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஸ்ட்ராபோ, பிளைனி, தாலமி, பெரிபுளூஸ் ஆசிரியர் ஆகிய கிரேக்க ஆசிரியர்கள் எழுதிய நூல்கள் தமிழகத்து ஊர்களைப் பற்றியும், தமிழகத்துக்கும் மேலைநாடுகளுக்கும் நடந்த வாணிகத்தைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளன. இவர்களுடைய குறிப்புகள், சங்கப் பாடல்கள் தரும் செய்திகளோடு ஒத்துள்ளன. எனவே, சங்கப் பாடல்கள் கி.பி.முதலிரு நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை என்று கூறப்படுகின்றன. தமிழகம் கி.மு.4000த்திலிருந்து இன்றுவரை மேலை நாடுகளோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்ததற்கு ஆதாரங்கள் உள்ளன. தமிழகத்துத் தேக்கு மரமும், சிந்து எனப்படும் மஸ்லின் துணியும் பாபிலோனியரால் கி.மு.4000இல் உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. தமிழகத்துச் சாம்பிராணியும், நறுமணப் பொருட்களும், இரத்தினங்களும் கி.மு.3000இல் எகிப்தியர் தம் கடவுள் பூசைக்குப் பயன் படுத்தினர். ஏலம், இலவங்கம், சந்தனம், மயில் தோகை முதலிய பொருட்கள் தமிழகத்திலிருந்து யூதர்கள் நாட்டுக்கு கி.மு.2000 முதல் கி.மு.930 வரை ஏற்றுமதியாயின. (மயில்) தோகை, பைபிளில் துகி என்று உருமாற்றம் பெற்று வழங்கப்படுவதைக் காணலாம். கி.மு.எட்டாம் நூற்றாண்டில் சேர நாட்டிலிருந்து யானைகள் அஸிரியாவுக்கு அனுப்பப்பட்டன. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் கிரேக்க நாடுகளுக்குத் தமிழகத்திலிருநது அரிசி, இஞ்சி வேர், கருவாப்பட்டை முதலியன ஏற்றுமதி செய்யப்

பட்டன. இவை முறையே கிரேக்க மொழியில் அருசா, ஜிஞ்சிபோ, கர்பியன் என்று வழங்குகின்றன. அருசா, ஆங்கில மொழியில் ரைஸ் என்று வழங்குகிறது. அரிசி-அருசா-ரைஸ் என்ற மொழிமாற்றங்களுக்கு கி.மு. ஆறாம் நூற்றாண்டில் தமிழகம் கிரேக்கத்துக்கு அரிசி ஏற்றுமதி செய்ததே காரணமாகும். கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.மு. முதல் நூற்றாண்டுவரை எகிப்தை ஆண்டுவந்த தாலமி அரசர்கள், தமிழகத்து வாணிகத்தோடு தொடர்பு கொண்டிருந்தனர். கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாலமி அரசன் உருவம் தாங்கிய நாணயம் கரிவலம்வந்த நல்லூரில் கிடைத்துள்ளது. கி.மு.இரண்டாம் நூற்றாண்டில் இந்திய வாணிகத்தைக் கவனிப்பதற்குத் தனி அதிகாரி ஒருவனை தாலமிகள் நியமித்தார்கள். கி.மு.முதல் நூற்றாண்டில் எகிப்தை ஆட்சி செய்த தாலமி அரசி கிளியோபாட்ரா அணிவதற்காகத் தமிழகத்து முத்துக்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. கிளியோ பாட்ரா வீழ்ச்சிக்குப் பின் தாலமிகள் காத்து வந்த தென்னிந்திய வாணிகம் உரோமர் கைக்கு வந்தது. கி.பி. முதலிரு நூற்றாண்டு களில் உரோமப் பேரரசு உச்சநிலையில் இருந்தபோது கிரேக்க ஆசிரியர்களான ஸ்ட்ராபோ, பிளைனி, தாலமி, பெரிபுளுஸ் ஆசிரியர் தம் நூல்களை எழுதினர்.

ஸ்ட்ராபோ தம் நூலில் பின்வரும் செய்திகளைக் குறிப்பிடுகிறார். அகஸ்டஸ் சீசர் (கி.மு.44-14) அரியணை ஏறியபோது, பாண்டியன் ஒரு தூதுக்குழுவை அவனிடம் அனுப்பினான். பாண்டியர் முதலில் கொற்கையில் வாழ்ந்து, பிறகு மதுரைக்குத் தம் தலைநகரை மாற்றிக் கொண்டனர். ஆர்மஸ் துறைமுகத்திலிருந்து 120 கப்பல்கள் பாய்விரித்துக் கொண்டு சேரநாட்டுக் கடற்கரையை நோக்கிச் சென்றன.

பிளைனி தம் நூலில், இந்தியாவிலிருந்து வரும் சரக்குகள் உரோம் நாட்டில் நூறுமடங்கு விலைக்கு விற்கப்படுகின்றன என்றும், இந்தியாவால் உரோமப் பேரரசுக்கு ஆண்டுதோறும் ஐந்தரை கோடி செஸ்டர் பணம் விரயமாகிறது என்றும் குறிப்பிடுகிறார்.

தாலமி தமது பூகோள நூலில் அக்காலத் தமிழகத்தின் ஊர்கள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார்.

பெரிபுளூஸ் என்று சுருக்கமாக அழைக்கப்படும் பெரிபுளூஸ் மாரி எரித்ரீ (செங்கடல் செலவு) என்ற நூல் தென்னிந்தியா செல்லும் மாலுமிகளுக்குப் பயன்படுவதற்காக எழுதப்பட்ட கையேடு ஆகும். இதன் ஆசிரியர் யார் என்று தெரியவில்லை. பெரிபுளூஸ் நூலில் இருந்து பின்வரும் தகவல்களை அறிகிறோம். தமிரிகேவில் (தமிழகத்தில்) உள்ள முக்கியத் துறைமுகங்கள் சேரபுத்ர நாட்டிலுள்ள முசிறி; பாண்டிய (மதுரை) நாட்டிலுள்ள நெல்சிண்டா என்பவை யாகும். நெல்சிண்டாவிலிருந்து மிளகு, சுவைப் பொருட்கள் (spices), மூலிகைகள், முத்து, மணி, தந்தம், பட்டு, ஆமை ஓடு முதலியன ஏற்றுமதி செய்யப்பட்டன. கிழக்குக் கடற்கரை துறைமுகங்களுக்கே உரோமின் பெரும்பாலான ஏற்றுமதிப் பொருட்கள் சென்றன. காவிரி ஆறு கடலோடு கலக்குமிடத்தில் உள்ள காமரா, பொதுகா, சோபட்னா என்பன கீழைக் கடற் கரையின் முக்கியத் துறைமுகங்களாகும். குமரி முனையில் உள்ள கடவுளுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்வோர் கடலில் நீராடுவர். (காமரா - காவிரிப்பூம்பட்டினம் போலும். பொதுகா - புதுச்சேரி போலும். சோபட்னா - சிறுபாணாற்றுப் படையில் வரும் எயில்பட்டினம் போலும்)

உரோமப் பேரரசு அழிந்த பின்பும், தமிழகம் மேலைநாடுகளோடு வாணிகம் செய்வது நிற்கவில்லை. ஐரோப்பிய நாடுகளில் வேகமாகப் பரவிய கிறிஸ்துவ மதம் கி.பி.ஆறாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் கால்கொள்ளத் தொடங்கியது. காரைக்கால் அம்மையாரும், முதல் ஆழ்வார்களும் பக்திப்பாடல்களைப் பாடிய அதே கால கட்டத்தில், மாதா கோவில் மலைநாட்டில் இருந்ததாக காஸ்மாஸ் என்ற அலெக்ஸாண்டிரியாவாசி 'டபாக்ரபி' என்ற நூலில் குறிப்பிடுகிறார். அவர் தரும் வாணிபக் குறிப்புகள் வருமாறு: 'மலே என்று கூறப்படும் மிளகு விளையும் நாட்டில் ஒரு மாதா கோவில் இருந்தது. கலியனா என்ற இடத்தில் ஒரு பிஷப் இருந்தார். மலேயிலிருந்து மிளகும், கலியனாவிலிருந்து செம்பும் துணியும் ஏற்றுமதி செய்யப்பட்டன. மங்கரௌத், சலோபட்னா, நலோ பட்னா, பண்டோ பட்னா என்ற வணிக நகரங்களும் இருந்தன.

(மலே - மலைநாடு, மலபார்; மங்கரௌத் - மங்களூரோ?)

கி.மு.4000 த்திலிருந்து கி.பி.600 வரையில் தமிழகம் மேலைநாடுகளோடு வாணிபத் தொடர்பு வைத்திருந்ததை மேலே கண்டோம். சங்க காலத்திற்கு முன்பும், சங்க காலத்திலும், சங்க காலத்திற்குப் பிறகும் இவ்வாணிபம் நடைபெற்று வந்து கொண்டிருக்கிறது. எனவே, கி.பி. முதலிரு நூற்றாண்டுகளில் மட்டுமே மேலைநாடுகளுடன் தமிழ்நாடு வாணிகம் நடத்தியது என்றும், அதுவே சங்ககாலம் என்றும் கூறுவது பொருந்தாது. மேலும், கி.பி. முதலிரு நூற்றாண்டு களில் வாழ்ந்த உரோம அரசர்களின் நாணயங்கள் தமிழ்நாட்டில் கிடைப்பதால் அக்காலமே சங்ககாலம் என்றும் கூறப்படுகிறது. கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் வாழந்த இரண்டாம் தாலமி மன்னன் (கி.மு.284-247) உருவம் தாங்கிய நாணயம் ஒன்று கரிவலம்வந்த நல்லூரில் கண்டெடுக்கப்பட்டதை மேலே கண்டோம். கி.மு.இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சீன நாணயம் ஒன்று கர்நாடகத்தில் சந்திரவல்லியில் கண்டெடுக்கப் பட்டுள்ளது. மேலும் அகழ்வு ஆராய்ச்சிகள் நடக்கும்போது, சங்க காலத்துக்கு முந்தைய வெளிநாட்டு நாணயங்களும் கண்டுபிடிக்கப்படலாம். எனவே, உரோம அரசர் நாணயங்கள் தமிழ்நாட்டில் கிடைப்பதை வைத்து, சங்க காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்று முடிவு செய்வது சரியன்று.

சங்க காலம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டு என்ற கருத்துக்குக் காட்டப்படும் மற்றொரு ஆதாரம் புகலூர்க் கல்வெட்டுகள் ஆகும். இவற்றுள் ஒரு கல்வெட்டில் காணப் படும் மூன்று சேரர் பெயர்களைச் சங்ககாலத்தில் வாழ்ந்த மூன்று சேரர் பெயர்களோடு ஐராவதம் மகாதேவன் இணைத்துக் காட்டுகிறார்.

| புகலூர்க் கல்வெட்டுச் சேரர் | சங்ககாலச் சேரர் |
|---|---|
| 1. கோ ஆதன் செல்லிரும் பொறை | சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் |
| ↓ மகன் | ↓ மகன் |
| 2. பெருங்கடுங்கோன் | தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை |
| ↓ மகன் | ↓ மகன் |
| 3. இளங்கடுங்கோன் | இளஞ்சேரல் இரும்பொறை |

புகலூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்படுவோர் சங்ககாலச் சேரமன்னர் அல்லர். அவர்கள் வாழ்ந்த திருச்சி கரூர், சேரர் தலைநகரான வஞ்சிக் கருவூர் அன்று. சங்ககால இறுதியில் சேரநாடு சீரழிந்தபோது, சேர மரபினர் சிலர் சேரநாட்டை விட்டுவிட்டுக் கொங்கு நாட்டுக் கருவூரில் குடியேறிக் குறுநிலத் தலைவர்களாக வாழ்ந்தனர். அவர்களில் மூவரே புகலூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்படுபவர்கள். புகலூர்க் கல்வெட்டின் அடிப்படையில் சங்ககாலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்று கொள்வது தவறாகும்.

# காலநிலைக் கணிப்பு

சங்க கால மூவேந்தர்கள் கி.மு.நான்காம் நூற்றாண்டி லிருந்து கி.மு.முதல் நூற்றாண்டு வரை வாழ்ந்திருக்கலாம் என்ற கருத்து முன்பு கூறப்பட்டது. சங்கப் பாடல்களில் 20 சேரர் களும், 18 சோழர்களும், 14 பாண்டியர்களும் பாடப்படு கிறார்கள். இந்த 52 பேரில் முதலில் வாழ்ந்தவர் யார், பின்னால் வாழ்ந்தவர் யார் என்று எப்படிக் கண்டுபிடிப்பது? ஒவ்வொரு வேந்தரும் எந்த ஆண்டிலிருந்து எந்த ஆண்டுவரை ஆட்சி செய்தனர்? சேரநாட்டை ஒரு சேரன் ஆண்டு கொண்டிருந்த போது, அதே காலநிலையில் சோழநாட்டை ஆண்ட சோழ மன்னன் யார்? பாண்டிய நாட்டை அதே காலகட்டத்தில் ஆண்டவன் யார்? இவற்றை அறிவதற்கான தடயங்கள் சங்கப் பாடல்களில் உள்ளனவா? இன்ன அரசன் இந்த ஆண்டிலிருந்து இந்த ஆண்டுவரை ஆட்சி புரிந்தான் என்று கூறும் கல்வெட்டுகளோ, மெய்க்கீர்த்திகளோ, பாடல்களோ இல்லாதபோது, சங்ககால மூவேந்தர்களின் காலநிலையைக் கணிப்பது எப்படி?

சங்ககால வரலாற்றை அறிவதற்குச் சங்கப் பாடல் களையும், ஓரிரு தமிழ்-பிராமி கல்வெட்டுகளையும், ஒருசில நாணயங்களையுமே நம்ப வேண்டியுள்ளது. எதிர்காலத்தில் வலுவான சான்றுகள் கிடைக்கும்போது அறிவியல் முறைப்படி அமைந்த வரலாறு எழுத முடியும். ஆனால் இன்று எழுதப்படும் சங்ககால மூவேந்தர் வரலாற்றிலும், கணிக்கப்படும் அவர்களது காலநிலையிலும் குறைபாடுகள் இருப்பது தவிர்க்க முடியாத தாகும்.

இந்நிலையில் சங்ககால மூவேந்தர் காலநிலையைக் கணிக்க முயல்வோம்.

## பெருவழுதி நாணயங்கள்

இரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு 1985இல் 'பெரு வழுதி' என்ற பெயர் பொறித்த ஐந்து செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன. இவை கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. நாணயங்களின் முன்புறத்தில் ஒரு குதிரை நின்றுகொண்டிருக்க, குதிரைக்கு மேலே உள்ள இடத்தில் 'பெருவழுதி' என்ற பெயர் தமிழ்-பிராமி எழுத்தில் பொறிக்கப் பட்டுள்ளது. நாணயங்களின் பின்புறத்தில் மீன் சின்னம் உள்ளது.

ஐந்து நாணயங்களில் மூன்று சதுர வடிவானவை. ஒன்று அறுகோண வடிவமாக அமைந்துள்ளது. மற்றொன்று நீண்ட சதுரமாக உள்ளது. அறுகோண, நீண்ட சதுர நாணயங்களில் பெருவழுதி என்ற பெயர் ஒருமுறையே பொறிக்கப் பட்டுள்ளது. ஆனால் சதுர நாணயங்களில் அப்பெயர் இருமுறை பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் சதுர நாணயம் ஒன்றின் முன்புறத்தில் குதிரைக்கு முன் இறக்கை விரித்த பருந்து ஒன்றும், பீடத்தின் மேல் நடப்பட்ட யூபத்தூண் ஒன்றும் காணப்படுகின்றன.[1]

குதிரை, பருந்து, தூண் ஆகிய மூன்று சின்னங்களும் அசுவமேத யாகத்தைக் குறிப்பிடுகின்றன.[2] கெண்டை மீன் பாண்டியரின் சின்னமாகும்.[3] எனவே, பெருவழுதி என்ற

---

1. பாண்டியர் பெருவழுதி நாணயங்கள் (1987) பக்.13-23, 87, 90-91; தகடு I, II.
2. வேள்விச் சாலையில் பருந்து விழுங்குவதுபோல செய்யப்பட்ட இடத்தில், யூபத்தூண் நடப்படும்.
   எருவை நுகர்ச்சி, யூப நெடுந்தூண்,
   வேத வேள்வித் தொழில் முடித்ததூஉம் (புறம்.224:8-9)
   (எருவை-பருந்து)
3. நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
   குடுமிய ஆக, பிறர் குன்றுகெழு நாடே (புறம் 58)
   (பாண்டியன் வெள்ளி அம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியைப் பாடிய பாடல்)
   புலியொடு வில் நீக்கி, புகழ் பொறித்த கிளர்கெண்டை
   வலியினால் வணக்கிய வாடாச் சீர்த் தென்னவன் (கலித்.104:3-4)

பாண்டியன் அசுவமேத யாகம் செய்தபோது இந்நாணயங்கள் வெளியிடப்பட்டன என்று கருதலாம்.

சதுர நாணயங்களில் இருமுறை பொறிக்கப்பட்ட 'பெருவழுதி'ப் பெயர்களில் ஒன்று தமிழ்மொழியிலும் மற்றொன்று பிராகிருத மொழியிலும் எழுதப்பட்டுள்ளன என்று ஐராவதம் மகாதேவன் கருதுகிறார். வடநாட்டவர் யாகங்களையும் கொள்கைகளையும் மேற்கொண்ட பாண்டியன் பெருவழுதி வடநாட்டில் வழங்குவதற்காக இருமொழி சதுர நாணயங்களை வெளியிட்டிருக்கலாம்.

இந் நாணயங்களை வெளியிட்ட பாண்டியன் பெருவழுதி யார்? சங்கப் பாடல்களை ஆராய்ந்தோமானால், பெருவழுதி அல்லது வழுதி என்ற பெயரைக் கொண்ட அறுவரைக் காண்கிறோம்.[4] இவர்களுள் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியே இந் நாணயங்களை வெளியிட்டவன் என்று கொள்ள வேண்டும். ஏனெனில், மற்ற பெருவழுதிகள் யாகம் செய்ததற்குச் சங்கப் பாடல்களில் சான்றில்லை[5]. முதுகுடுமிப் பெருவழுதியே யாகங்களைச் செய்த முதல் தமிழ் மன்னன் ஆவான்.[6] தரும சாஸ்திரங்களிலும் வேதங்களிலும் சொல்லிய முறைப்படி சமிதை, பொரி முதலிய கண்ணுறைகளும், நெய்யும் பெய்து, ஆகுதிப்புகை பொங்க, பல சிறந்த யாகங்களைச் செய்து, யாகசாலைகளில் யூபங்களை

---

4. 1. கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி (புறம்.3)
   2. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி (புறம். 6, 9, 12, 15, 64; மதுரைக். 759-760).
   3. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி (புறம். 182)
   4. கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி (புறம். 51-52)
   5. கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி (புறம். 21, 367)
   6. வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி (புறம். 58)
5. உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி செய்த யாகத்தைக் காண சேரமான் மாரி வெண்கோவுடன் சென்றிருந்தான் என்று ஔவையார் பாடலால் (புறம்.367) அறிகிறோம். ஆனால் உக்கிரப் பெருவழுதி எந்த யாகத்தையும் செய்ததாகத் தெரியவில்லை.
6. முதுகுடுமியைப் பின்பற்றிச் சோழன் கரிகால் பெருவளத்தானும் (புறம். 224), சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் (புறம்.367) யாகங்கள் செய்துள்ளனர். சேரமன்னர்கள் வேள்வி செய்ததாகப் பதிற்றுப்பத்து கூறுகிறது. (பதிற். 64, 70, 74)

நாட்டினான்.[7] அதுமட்டுமன்று. மற்றவர்கள் வேள்வி புரிவதற்காக வேள்விக்குடி போன்ற ஊர்களைத் தானமாகக் கொடுத்தான்.[8] எனவே, பெருவழுதி நாணயங்களை வெளியிட்டவன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியே என்று முடிவு செய்யலாம்.

பெருவழுதி நாணயங்களின் காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டாதலால், முதுகுடுமி வாழ்ந்த காலமும் அதுவேயாகும்.

### நெடுஞ்செழியன் காலநிலை

மதுரைக்கு அருகிலுள்ள மாங்குளம் மலைக்குகை ஒன்றில், கணியநந்தி என்ற சமணத் துறவிக்கு நெடுஞ்செழியன் பணவனான கடலன் வழுதி பள்ளி (படுக்கை) அமைத்துக் கொடுத்தான் என்று தமிழ்-பிராமி எழுத்துக்களில் செதுக்கப் பட்டுள்ளது. இக்கல்வெட்டு கி.மு. மூன்றாம் அல்லது இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று இரா. நாகசாமி கருதுகிறார்.[9] கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியே இக்கல்வெட்டின் காலம் என்று ஐராவதம் மகாதேவன் கருதுகிறார்.[10]

---

7. நல்பனுவல், நால்வேதத்து,
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி ஆவுதி பொங்க, பல்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி,
யூபம் நட்ட வியன்களம் பல கொல்? (புறம். 15:17-21)

8. பல்யாக முதுக்குடுமிப் பெருவழுதி என்னும்
பாண்டியாதி ராஜன்...
கொற்கைக் கிழான் நற்கொற்றன்
கொண்ட வேள்வி முற்றுவிக்க...
வேள்விச்சாலை முன்புநின்று
வேள்விக்குடி என்ற பதியை...
நீரோடு அட்டிக் கொடுத்தமையான்
(வேள்விக்குடி சாசனம் Epig.Ind.vol.17 No.16)

9. கல்வெட்டியல், பக்.53.

10. Tamil-Brahmi Inscriptions of the sangam Age - proceedings of the second international conference seminar of Tamil Studies Vol.I p.97.

இக்கல்வெட்டில் காணப்படும் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனே என்று[11] ஆலம்பேரி சாத்தனாரின் இரு பாடல்கள் - [12, 13] தெரிவிக்கின்றன.




இதை வேறு இரு சங்கப் பாடல்கள் உறுதி செய்கின்றன. கடலனின் நகரமான விளங்கிலைச் சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை வென்றான்.




11. *அகம். 81, 175.*

12. *ஒளிறுவேல் அழுவம் களிறுபடக் கடக்கும்*
*மாவண் கடலன் விளங்கில் (அகம், 81:11-13)*

13. *கால்இயல் நெடுந்தேர்க் கைவண் செழியன்*
*ஆலங்கானத்து அமர்கடந்து உயர்த்த*
*வேல் - (அகம். 175:10-12)*

இவ்வாறு ஒரு பாடல் கூறுகிறது.[14] இந்தச் சேரனை, தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் சிறைவைத்தான் என்று மற்றொரு பாடலால் அறிகிறோம்.[15]

மாங்குளம் கல்வெட்டின் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என்று கூறப்படுகிறது. அக்கல்வெட்டில் காணப்படும் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனே என்பதை அகம் 81, 75, புறம் 17, 53 ஆகிய நான்கு பாடல்கள் ஐயமறத் தெரிவிப்பதால், அவனது காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு ஆகும். கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த முதுகுடுமிப் பெருவழுதி, நெடுஞ்செழியனின் முன்னோன் என்று மதுரைக் காஞ்சி[16] கூறுவதால், நெடுஞ்செழியனின் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என்று கொள்வது பொருத்தமேயாகும்.

**சில கோட்பாடுகள்**

மூவேந்தர் காலநிலையைக் கணிப்பதற்கு சில கோட்பாடுகளை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது.

1. முதலாவதாக, பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்காலநிலை கி.மு.175-150 என்று கொள்வோம்.நெடுஞ்செழியனுக்கு முன்பு எட்டு பாண்டியர் களும், பின்பு ஐந்து பாண்டியர்களும் வாழ்ந்ததைச் சங்கப் பாடல்கள் தெரிவிப்பதால், நெடுஞ்சழியனின் காலநிலை அடிப்படையில், மற்ற பாண்டியர்களின் காலநிலையைக் கணிக்கலாம்.

நெடுஞ்செழியன் சேரமான் யானைக்கண் சேய்மாந்தரஞ் சேரல் இரும்பொறயைச் சிறைவைத்தான்.[17] நெடுஞ் செழியனின் படைத்தலைவனான பழையன் மாறன்[18] கூடலில்

14. விளங்குசீர் விளங்கில் விழுமம் கொன்ற
 களங்கொள் யானைக் கடுமான் பொறைய! - (புறம். 53:4-5)
15. புறம். 17
16. நல்வேள்வித் துறைபோகிய
 பல்சாலை முதுகுடுமியின்...
 மகிழ்ந்து இனிது உறைமதி பெரும! (மதுரைக். 759-760, 781)
17. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால்
 பிணியிருந்த யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை -
 புறம்.17, அடிக்குறிப்பு.
18. பெரும்பெயர் மாறன் தலைவனாக (மதுரைக். 772)

கிள்ளிவளவனைத் தோற்கடிக்க, கோக்கோதை மார்பன் மகிழ்ந்தான் என்று ஒரு பாடல் கூறுகிறது.[19]

எனவே, மாந்தரஞ்சேரல், கோதைமார்பன், கிள்ளி வளவன், நெடுஞ்செழியன் ஆகிய இந் நால்வரும் கி.மு.175-150 என்ற காலநிலையில் வாழ்ந்தவர்கள் என்று கொள்வோம்.

| காலநிலை | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு. 175-150 | 1. சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை<br>2. சேரமான் கோக்கோதை மார்பன் | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் | பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் |

மேற்காட்டிய சேரர்களுக்கு முன்பும் பின்பும் வாழ்ந்த பல சேரர்கள் சங்கப் பாடல்களில் காணப்படுவதால், கி.மு.175-150 க்கு முன்பும் பின்பும் வாழ்ந்த சேரர்களின் காலத்தை நாம் கணிக்க முடியும்.

அவ்வாறே, சோழன் கிள்ளிவளவன் காலநிலை கி.மு.175-150 என்ற அடிப்படையில் அவனுக்கு முன்பு வாழ்ந்த நலங்கிள்ளி, கரிகால் வளவன் முதலியோர் காலத்தையும் அவனுக்குப் பின்பு வாழ்ந்த இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, செங்கணான் முதலியோர் காலநிலையையும் கணிக்கலாம்.

2. இரண்டாவதாக, ஒரு தலைமுறைக்கு 25 ஆண்டுகள் தருவோம். சங்ககால மக்கள் 25 ஆண்டுகளே வாழ்ந்தார்களா என்று சிலர் கேட்கலாம். நெடுஞ்செழியன் இளைஞனாக

19. *இழையணி யானைப் பழையன் மாறன்*
*மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்*
*வெள்ளத்தானையொடு வேறுபுலத்து இறுத்த*
*கிள்ளிவளவன் நல்அமர்சா அய்,*
*கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி,*
*ஏதில் மன்னர் ஊர்கொள,*
*கோதை மார்பன் உவகையின் பெரிதே.* *(அகம். 346: 19-25)*

இருந்தபோதே அரசு பெற்றான் என்றும்[20], நெடுங்காலம் உயிர் வாழ்ந்தான் என்றும்[21] அறிகிறோம். அவ்வாறே, சோழன் கரிகால் வளவன் சிறுவனாக இருந்தபோதே அரசு பெற்றான்[22] என்றும், முதியவனாக மகிழ்ந்து வாழ்ந்தான்[23] என்றும் சங்கப் பாடல்கள் கூறுகின்றன. சேரன் செங்குட்டுவன் 55 ஆண்டுகள் வீற்றிருந்தான் என்று பதிற்றுப்பத்து கூறுகிறது.[24] அரசர்கள் மட்டுமன்றி அவர்களைப் பாடிய சில புலவர்களும் நெடுங்காலம் உயிர் வாழ்ந்துள்ளனர். பரணர் என்ற புலவர் சேரமான் நெடுஞ்சேரலாதன்,[25] அவன் மகன் செங்குட்டுவன்,[26] செங்குட்டுவன் மகன் குட்டுவன் சேரல்[27] ஆகியோர் வாழ்ந்த மூன்று தலைமுறைகளிலும் வாழ்ந்துள்ளார்.

சேரன் செங்குட்டுவன், சோழன் கரிகால் வளவன், பாண்டியன் நெடுஞ்செழியன் ஆகிய மூவேந்தர்களும், பரணர் போன்ற புலவரும் முறையே பேரரசர்கள் என்றும், பெரும்புலவர் என்றும் சிறப்புப் பெற்றதற்கு அவர்கள் நெடுநாள் வாழ்ந்ததும் ஒரு காரணமாக இருக்கலாம். இந்நிலையில் தலைமுறை ஒன்றுக்கு 25 ஆண்டுகள் கொடுத்து, கால நிலையைக் கணிப்பது தவறாக முடியாதா என்ற ஐயம் தோன்றலாம். மனிதன் குறிப்பாக இந்தியன் - சிறப்பாகப் பணியாற்றி வாழும் காலம் 25 ஆண்டுகளே ஆகும். 25 வயதில் தானே நமக்கு அறிவுப்பல் முளைக்கிறது? 50 வயதுக்குப் பிறகு தளர்ச்சி தோன்ற ஆரம்பிக்கிறது. எனவே, சராசரி மனிதன் சாதனை புரிவது ஏறத்தாழ 25 ஆண்டுகளே என்று

20. 'இளையன் இவன்' என உளையக்கூறி - (புறம்.72:2)
தாலிகளைந்தன்றும் இலனே; பால்விட்டு
அயினியும் இன்று அயின்றனனே - (புறம்.77:7-8)
'விழுமியம், பெரியம், யாமே; நம்மின்
பொருநனும் இளையன்; கொண்டியும் பெரிது' என
எள்ளிவந்த வம்ப மள்ளர் - (புறம். 78:5-7)
21. மதுரைக்காஞ்சி
22. பிறந்து தவழ் கற்றதன் தொட்டு, சிறந்ததன்
நாடு செகிற் கொண்டு நாள்தொறும் வளர்ப்ப (பொரு.127-8)
23. பட்டினப்பாலை
24. பதிற்.பதிகம் 5
25. புறம். 63
26. புறம். 369; பதிற். 41-50
27. பதிற். பதிகம் 5.

கொள்வோம். ஒரு தலைமுறைக்கு 25 ஆண்டுகள் என்ற அடிப்படையில் சங்ககாலத் தலைவர்களின் தலைமுறைகளைக் கணிப்பது தவறு என்று சொல்வதற்கில்லை.

3. மூன்றாவதாக, புறநானூற்றுப் பாடல்கள் வரிசைப் படுத்தப்பட்ட முறையை ஆராய்ந்தோமானால், பல தலைவர்களுடைய காலநிலையை நிர்ணயிப்பதற்கும், அரண் செய்வதற்கும் அவை பயன்படுவதைக் காணலாம். புறநானூற்றுத் தொகுப்பாளர், பாடல்களை வரிசைப் படுத்தும்போது, பின்வரும் கொள்கைகளை மேற்கொண்டார் என்று தோன்றுகிறது.

(i) ஒத்த கருத்துள்ள பாடல்கள் ஒன்றாகத் தொகுக்கப் பட்டுள்ளன. சொல்லிலும் பொருளிலும் ஒற்றுமையுடைய பாடல்கள் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ளன. இது 'பாடல்களின் அமைப்பு' என்ற பகுதியில் விரிவாக ஆராயப் பட்டுள்ளது.

(ii) ஒத்த கருத்துள்ள பாடல்களுள், காலத்தால் முன்வாழ்ந்த தலைவரைப் பற்றிய பாடல் முன்னாலும், பின்னால் வாழ்ந்த தலைவரைப் பற்றிய பாடல் பின்னாலும் வைக்கப்பட்டுள்ளன.

மூவேந்தர் பாடல் அட்டவணையில் சோழர் பாடலில், 4ஆம் பாடல் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியையும், 7ஆம் பாடல் கரிகால் பெருவளத்தானையும் பாடுகின்றன. கரிகால் வளவன், உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியின் மகன் என்று பொருநர் ஆற்றுப்படை தெரிவிக்கிறது.

உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்...
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன் (பொருநர். 130, 148)

தந்தையைப் பாடும் பாடல் முன்பும் (புறம்.4) மகனைப் பாடும் பாடல் அதற்குப் பின்புமாக (புறம்.7) வைக்கப் பட்டுள்ளதைக் காண்கிறோம்.

| புறம் | சோழர் பாடல் |
|---|---|
| 4 | உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி (பொரு.130) ↓ |
| 7 | மகன் கரிகால் வளவன் |

பாண்டியர் பாடலை எடுத்துக்கொண்டால் *6, 9, 12, 15*ஆம் பாடல்கள் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யையும், அவற்றை யடுத்து வரும் *18, 19*ஆம் பாடல்கள் நெடுஞ்செழியனையும் பாடுவதைக் காணலாம். முதுகுடுமி நெடுஞ்செழியனின் முன்னோன் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது:

நல்வேள்வித் துறைபோகிய
பல்சாலை முதுகுடுமியின்...
மகிழ்ந்து இனிது உறைமதி பெரும! (மதுரைக்: 759-760, 781)

'முதுகுடுமியைப் போல நீ வாழவேண்டும்!' என்று நெடுஞ்செழியன் வாழ்த்தப்படுவதால், முதுகுடுமிக்குப் பின்பு நெடுஞ்செழியன் வாழ்ந்தான் என்று அறிகிறோம். எனவே, புறநானூற்றுத் தொகுப்பாளர் முதுகுடுமி மேல் பாடப்பட்ட பாடல்களை முன்பும், நெடுஞ்செழியன் மேல் பாடப்பட்ட பாடல்களை அவற்றிற்குப் பின்பும் அமைத்துள்ளார்.

| *புறம்* | *பாண்டியர் பாடல்* |
|---|---|
| *6, 9* | *பல்யாகசாலை* |
| *12, 15* | *முதுகுடுமிப் பெருவழுதி* |
| | *(மதுரைக். 759, 760, 781)* |
| | ↓ |
| | வழிவந்தவன் |
| *18, 19* | நெடுஞ்செழியன் |

புறம் *13*ஆம் பாடலில் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையைக் காணவரும் சோழன் ஒருவன் மதம் பிடித்த யானையால் துன்பமடைவது கூறப்படுகிறது. இப்பாடல் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவரால் அந்துவஞ் சேரலுக்குக் கூறப்பட்டதாகும். அடுத்த பாடல் (புறம் *14*) சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியதாகும். அந்துவஞ் சேரலின் மகன் செல்வக் கடுங்கோ என்பதைப் பதிற்றுப் பத்தால் அறிகிறோம்:

நெடுநுண் கேள்வி அந்துவற்கு....
பொறையன் பெருந்தேவி ஈன்றமகன்...
செல்வக் கடுங்கோ வாழியாதனைக்
கபிலர் பாடினார்பத்துப் பாட்டு. (பதிற். பதிகம்.7)

அந்துவஞ் சேரலுக்குக் கூறப்பட்ட பாடல் (புறம். 13) முன்பும், அவன் மகன் செல்வக் கடுங்கோவைப் பாடிய பாடல் (புறம்.14) அதற்குப் பின்பும் புறநானூற்றில் வைக்கப் பட்டுள்ளன.

செல்வக் கடுங்கோ வாழியாதனை அடுத்து, புறம்.17இல் பாடப்படுபவன் யானைக் கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை யாவான். இவன் கடலன் என்பவனுடைய விளங்கில் நகரத்தை வென்றபோது, தன் வெற்றியைத் தகுந்தபடி பாடக் கபிலர் உயிரோடு இல்லையே என்று வருந்தினான்.

விளங்குசீர் விளங்கில் விழுமம் கொன்ற
களம் கொள்யானைக் கடுமான் பொறைய!...
'செறுத்த செய்யுள் செய்செந்நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்று உளன் ஆயின் நன்றுமன்' என்றநின்
ஆடுகொள் வரிசைக்கு ஏற்ப
பாடுவல் மன்னால், பகைவரைக் கடப்பே

(புறம். 53 : 4-5, 11-15)

செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியுள்ளார். (புறம். 8, 14; பதிற். 61-70) ஆனால் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் காலத்தில் கபிலர் உயிரோடு இல்லை. எனவே, செல்வக் கடுங்கோவுக்குப் பிறகு, யானைக்கண் சேய் வாழ்ந்தான் என்று அறிகிறோம். எனவே, புறநானூற்றுத் தொகுப்பாளர் செல்வக் கடுங்கோமேல் பாடப்பட்ட பாடலை (புறம்.14) முன்னாலும், யானைக்கண் சேய்மேல் பாடப்பட்ட பாடலைப் (புறம்.17) பின்னாலும் அமைத்துள்ளார்.

| புறம் | சேரர் பாடல் |
|---|---|
| *13* | *அந்துவஞ் சேரல் இரும்பொறை*<br>↓<br>*மகன் (பதிற்.பதிகம்.7)* |
| *14* | *செல்வக் கடுங்கோவாழியாதன்*<br>*வழிவந்தவன் (புறம்.53)*<br>↓ |
| *17* | *யானைக்கண்சேய் மாந்தரஞ்*<br>*சேரல் இரும்பொறை* |

புறநானூற்றுப் பாடல்கள் இவ்வாறு அமைக்கப் பட்டுள்ளது காலநிலைக் கணிப்புக்கு மிகவும் பயன்படுகிறது.

(iii) ஒரு குடியில் மிகச் சிறந்தவன் என்று புறநானூற்றுத் தொகுப்பாளரால் கருதப்பட்ட தலைவன் காலத்தால் பிறபட்டவனாயினும், அவன்மேல் பாடப்பட்ட பாடல் காலமுறைப்படி வைக்கப் படாமல் முதலில் வைக்கப்படுகிறது.

சேர அரசைக் கருவூரில்[28] நிறுவிய முதல் சேர மன்னன் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை யாவான்.

இவன் புறம் 5ஆம் பாடலில் பாடப்பட்டுள்ளான். இவனுக்குப் பிறகு ஆண்ட பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன், புறநானூறு தொகுக்கப்பட்ட காலத்தில் மிகச்சிறந்த சேரனாகக் கருதப்பட்டதால் அவனைப் பற்றிய பாடல் புறநானூற்றின் முதலில் (புறம் 2) வைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு காலமுறை பிறழ்ந்து அமைக்கப்பட்ட பாடல்கள் சிறுபான்மையாகும்.

| புறம் | சேரர் பாடல் | |
|---|---|---|
| 2 ↓ | சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் | சிறப்புக் கருதி பின்னால் வாழ்ந்த உதியஞ்சேரல் பாடல் முன்னால் வைக்கப்பட்டது. |
| | ↑ | |
| ↑ 5 | சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை | |

புறநானூற்றுத் தொகுப்பாளர் காலத்தில் முக்கியத்துவம் இல்லாதவன் என்று கருதப்பட்ட தலைவன் காலத்தால் முந்தியவன் என்றாலும், அவன் மேல் பாடப்பட்ட பாடல் பின் இணைப்பு போல இறுதியில் வைக்கப்படுவதும் உண்டு.

28 சேரநாட்டுத் தலைநகரம் 'வஞ்சி' என்ற ஒன்றேயாகும். சேரமான் கோக்கோதை மார்பன் காலத்தில் அது கருவூர் என்று அழைக்கப் படலாயிற்று. திருச்சிக்கு அருகிலுள்ள கரூரே, கருவூர் என்றும், அதை இரும்பொறைச் சேரர்கள் தலைநகராகக் கொண்டு ஆண்டார்கள் என்றும் சிலர் கூறுவது தவறாகும்.

சோழ அரசை உறையூரில் நிறுவிய தித்தனின் மகன் சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியாவான். பெயர் தெரிந்த சோழ மன்னர்களில் பழமையானவன் இவனே. புறநானூறு தொகுக்கப்பட்ட காலத்தில் மக்கள் இவனை மறந்துவிட்டார்கள் போலும். எனவே, இவன் மேல் பாடப்பட்ட ஏழு பாடல்களை (புறம் 80-86) மூவேந்தர் பாடல் பகுதியின் இறுதியில், ஒரு பின் இணைப்பு போலத் தொகுப்பாளர் சேர்த்திருக்கிறார்.

# பாண்டியர் காலநிலை

புறநானூற்றில் ஒத்த கருத்துள்ள பாடல்கள் பெரும்பாலும் காலமுறைப்படி அமைக்கப்பட்டுள்ளன என்ற கோட்பாட்டின் துணையோடு மூவேந்தர் காலநிலையைக் கணிக்க முயல்வோம்.

பதினான்கு பாண்டியர்களைச் சங்க இலக்கியத்தில் காண்கிறோம். இவர்களுள் எட்டுப் பேர் நெடுஞ்செழியனுக்கு முன்பும் ஐந்து பேர் நெடுஞ்செழியனுக்குப் பின்பும் வாழ்ந்தவர்கள். இவர்களை கி.மு.350 முதல் கி.மு.75 வரை பதினோரு தலைமுறைகளில் வாழ்ந்தவர்களாகப் பிரிக்கலாம்.

முதலில் நெடுஞ்செழியனின் முன்னோர்களைக் காண்போம்.

''பல்சாலை முதுகுடுமியைப் போல, நெடியோனைப் போல நீ மகிழ்ந்து வாழ்வாயாக!'' என்று நெடுஞ்செழியன் மதுரைக் காஞ்சியில் வாழ்த்தப்படுகிறான்.[29] எனவே, இவ்விருவரும் நெடுஞ்செழியனின் முன்னோர் என்று அறிகிறோம். நெடியோன் முதுகுடுமிக்கு முன்பு வாழ்ந்தவன் என்பதைப் புறம். 9 ஆம் பாடலால் அறிகிறோம். அப்பாடலில்,

''எங்கள் வேந்தனான குடுமி வாழ்வானாக! தன்னுடைய கோ (மூதாதை) நெடியோனால் தோற்றுவிக்கப்பட்ட பஃறுளி ஆற்று மணலைவிடப் பலகாலம் குடுமி வாழ்வானாக!'' என்று கூறப்படுகிறது.[30]

---

*29. பல்சாலை முதுகுடுமியின்....*
*நிலந்தரு திருவின் நெடியோன் போல...*
*மகிழ்ந்து இனிது உறைமதி பெரும!* *(மதுரைக். 759, 763, 781)*

*30. எங்கோ வாழிய குடுமி! - தங்கோச்*
*செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈத்த*
*முந்நீர் விழவின் நெடியோன்*
*நல்நீர்ப் பஃறுளி மணலினும் பலவே* *(புறம்.9:8-11)*

நெடியோன்
↓ புறம்.9
முதுகுடுமி
↓ மதுரைக்.759
நெடுஞ்செழியன்

**நெடியோன் யார்?**

நெடியோன் என்பவன் முதலில் கொற்கையில் இருந்து ஆட்சி செய்தவன் என்றும், பிறகு பாண்டிய அரசைக் கூடல்வரை விரிவாக்கினான் என்றும், அதன் பிறகு கூடலைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான் என்றும் தெரிகிறது. பேராலவாயர் என்ற புலவர் இவனைக் 'கொற்கைப் பொருநன் நெடுந்தேர்ச் செழியன்' என்று அழைக்கிறார். இவன் கூடல்வரை தன் ஆட்சியை நீடித்தபோது, பெரிய ஆரவாரம் எழுந்தது என்றும் கூறுகிறார்.[31] இப்புலவர் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு கணவனோடு உடன்கட்டை ஏறிய[32] காட்சியைக் கண்டு கலங்கிப் பாடிய பாடல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. இவர் பூதப்பாண்டியன் காலத்திலும் நெடியோன் காலத்திலும் வாழ்ந்தவர் என்பதை இதனால் அறிகிறோம். பூதப்பாண்டியன் மேல் வேந்தர் பலர் படையெடுத்து வந்தபோது, ''அவர்களைத் தாக்கிப் புறமுது கிட்டு ஓடச் செய்வேன்'' என்று பூதப் பாண்டியன் செய்த வீரசபதம் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. (புறம்.71) பூதப்

31. *பேர் இசைக் கொற்கைப் பொருநன், வென்வேல்*
*கடும்பகட்டுயானை நெடுந்தேர்ச் செழியன்,*
*மலிபுரை நெடுநகர்க் கூடல் நீடிய*
*மலிதரு கம்பலை* *(அகம். 296:10-13)*

32. *பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்*
*நுமக்கு அரிதாகுக தில்ல; எமக்கு எம்*
*பெருந்தோள் கணவன் மாய்ந்தென....*
*நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே!* *(புறம். 246:11-13, 15)*
*பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது*

*நீர்வார் கூந்தல் இரும்புறம்தாழ*
*பேர் அஞர்க் கண்ணள் பெருங்கர்டு நோக்கி,*
*தெருமரும் அம்மதானே!* *(புறம் 247:5-7)*
*அவள் தீப்பாய்வாளைக் கண்டு மதுரைப் பேராலவாயர் சொல்லியது*

பாண்டியன் இப்போரில் இறந்து போனான். அவனுடன் அவன் மனைவி உடன்கட்டை ஏறினாள். அதற்குப் பிறகு, நெடியோன் பூதப் பாண்டியனைக் கொன்ற வேந்தர் மேல் படையெடுத்துக் கூடல்வரை சென்றான் என்றும், அவர்களை வென்று கூடலில் ஆரவாரமாக வெற்றிவிழா எடுத்தான் என்றும் ஊகிக்கலாம். பாண்டியருக்கு முன் கூடலை ஆண்டவன் அகுதை என்ற வேந்தன் என்று தெரிவதால்[33], பூதப் பாண்டியன் மேல் படையெடுத்து, அவனைக் கொன்றவன் அகுதை என்றும், நெடியோன் கூடல்வரை சென்று அகுதையை வென்று அங்கு ஆரவாரமாக வெற்றிவிழா கொண்டாடினான் என்றும் கருதலாம்.

பேராலவாயர் பூதப்பாண்டியன் இறந்ததையும், நெடியோன் கூடல் வரை சென்று வென்றதையும் பாடியிருப்பதை இணைத்துப் பார்த்தால், பூதப் பாண்டியன் தந்தையாகவும், நெடியோன் மகனாகவும் இருக்கலாம் என்று ஊகிக்கலாம்.




இதுவரை நாம் கண்டுபிடித்த நெடுஞ்செழியனின் முன்னோர்கள் வருமாறு:

பூதப்பாண்டியன்
↓ (அகம். 296, புறம். 247)
நெடியோன்
↓ (புறம். 9)
முதுகுடுமி
↓ (மதுரைக். 759)
நெடுஞ்செழியன்

33. மணம்நாறு மார்பின் மறப்போர் அகுதை
குண்டுநீர் வரைப்பின் கூடல் (புறம் 347:5-6)

### பசும்பூண் பாண்டியன்

பசும்பூண் பாண்டியன் புறநானூற்றில் பாடப்பட வில்லை. என்றாலும் ஏழு அகப்பாடல்களில் பாடப் படுகிறான்.[34] கூடலில் ஆட்சி புரிந்த[35] பசும்பூண் பாண்டியன் கூடலுக்குத் தெற்கே ஆட்சி புரிந்த பொதியமலைத் தலைவனையும்,[36] வடக்கே ஆண்ட எவ்வியையும்,[37] மேற்கே வாழ்ந்த கொங்கரையும் அடக்கினான்[38] என்றும், பலநாடுகளை வென்று 'நாடு பல தந்த பசும்பூண் பாண்டியன்' என்ற பெயரைப் பெற்றான் என்றும், அறம் கடைப்பிடித்த செங்கோல் ஆட்சி புரிந்தான்[39] என்றும் இப்பாடல்களால் அறிகிறோம்.

பூதப்பாண்டியன் காலத்தில் பொதியில் (பொதியமலை) நாடு பாண்டிய நாட்டைவிடப் பெரியதாகவும், சிறப்புடைய தாகவும் இருந்ததைப் பூதப்பாண்டியன் பாடிய அகப்பாடல் ஒன்று தெரிவிக்கிறது.[40] பூதப்பாண்டியன் மகனான

---

34. அகம் 162, 231, 253, 266, 338; நற். 358; குறு. 393

35. விசும்பு இவர் வெண்குடைப் பசும்பூண்பாண்டியன்
பாடுபெறு சிறப்பின் கூடல் (அகம். 231:12-13)

36. அதிகன்...
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய,
வில்கெழு தானைப் பசும்பூண்பாண்டியன்
களிறு அணி வெல்கொடி (அகம். 162: 18, 20-22)
[அதிகன் வெற்பகம் - ஆய் அதிகனின் பொதியமலை]

37. யாழ்இசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வாள் எவ்வி ஏவல்மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூண்பொருந்தலர் (அகம். 266: 10-12)
[பசும்பூண் பெருந்திறல்' என்ற பாடம் பொருத்தமாக இருக்கும். எவ்வியின் ஏவல் கேளாதவரைச் சாய்த்த பசும்பூண்பாண்டியன்]

38. வாடாப்பூவின் கொங்கர் ஓட்டி
நாடு பல தந்த பசும்பூண் பாண்டியன் (அகம். 253:4-5)

39. மறம்கெழு தானை அரசருள்ளும்,
அறம் கடைப்பிடித்த செங்கோலுடன்...
பலர் புகழ் திருவின் பசும்பூண்பாண்டியன் (அகம். 338: 2,3,5)

40. காதலன் காதலியைப் பிரிந்து வெகுதூரம் சென்றுவிட்டான் என்பதைக் குறிப்பிட, 'பொதியில் செல்வன் திதியனின் மலையில் அருவி விழும் காட்டையும் கடந்து சென்ற காதலர் வருவார்' என்று தோழி கூறுகிறாள். இதனால் பொதியில் நாடு மிகப் பெரியது என்ற கருத்து தெரிவிக்கப்படுகிறது.
வருவர் வாழி ! தோழி!- பொருநர்
செல்சமம் கடந்தவில் கெழு தடக்கைப்
பொதியில் செல்வன், பொலந்தேர்த்திதியன்,
இன் இசை இயத்தின் கறங்கும்
கல்மிசை அருவிய காடு இறந்தோரே (அகம் 25: 18-22)

நெடியோனும் பொதியமலைத் தலைவனை அடக்கியதாகத் தெரியவில்லை. ஆனால் பசும்பூண் பாண்டியன் பொதிய மலைப் பகுதியை ஆண்ட அதிகனைத் தனக்குக் கீழ்ப்படியச் செய்து, தனது படைத்தலைவனாக கொங்கரை அடக்க ஏவினான்.[41] எனவே, பசும்பூண்பாண்டியன் நெடியோனு க்குப் பிறகு கூடலில் இருந்து ஆட்சி புரிந்தான் என்று கருதலாம். முதுகுடுமி காலத்தில் பாண்டியநாடு வலிமைமிக்க அரசாகி, அமைதி நிலவியதால் அவன் பல யாகங்களைச் செய்ய முடிந்தது. நெடியோனும் பசும்பூண்பாண்டியனும் பல போர்களைச் செய்து பாண்டிய நாட்டை விரிவடையச் செய்த பிறகே இந்த அமைதி நிலை ஏற்பட்டிருக்க முடியும். பசும்பூண் பாண்டியன் நெடியோனுக்குப் பிறகும், முதுகுடுமிக்கு முன்பும் வாழ்ந்தான் என்று முடிவு செய்யலாம்.

பசும்பூண் பாண்டியனையும் சேர்த்தால் நெடுஞ்செழியன் முன்னோர் பட்டியல் பின்வருமாறு நீளுகிறது:




## கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி

| புறம் | பாண்டியர் பாடல் |
|---|---|
| *3* | கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி |
| | ↓ |
| *6* | பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி |

---

*41.* *பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன்*
*களிறொரு பட்ட ஞான்றை*
*ஒளிறுவாள் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே* *(குறு. 393: 4-6)*

புறநானூற்றில் முதலாவதாக வைத்துப் பாடப்படும் பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர்வழுதி ஆவான் (புறம். 3). அவனுக்கு அடுத்தபடியாகப் பாடப்படுபவன் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி ஆவான் (புறம். 6). எனவே, முதுகுடுமிக்கு முன்பு கருங்கை ஒள்வாள் பெரும்பெயர்வழுதி வாழ்ந்தான் என்று கருதலாம்.

கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதியைப் பாடியவர் இரும்பிடர்த்தலையார் (புறம்.3). இப்புலவர் கரிகால் வளவனின் தாய்மாமன் என்றும், இவர் உதவியால் இழந்த அரசைக் கரிகால்வளவன் மீண்டும் அடைந்தான் என்றும் பழமொழியில் ஒரு பாடல் கூறுகிறது.[42] இரும்பிடர்த்தலையார் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதியின் உதவியை நாடி, கரிகால் வளவனுக்கு அரசை மீட்டுத் தந்திருக்கலாம் என்று கருதலாம்.[43] அவ்வாறானால், கருங்கைஒள்வாள் பெரும்பெயர் வழுதி கரிகால் வளவன் காலத்தில் வாழ்ந்தவனாக இருக்க வேண்டும்.

| புறம்.2 | புறம்.3 |
|---|---|
| சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் | பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி |

மேலும், இவன் மேல் பாடப்பட்ட பாடல் (புறம்.3) சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் மேல் பாடப்பட்ட பாடலுக்கு (புறம். 2) அடுத்து வைக்கப் பட்டுள்ளதால், இருவரும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்று கொள்வதற்கு இடமிருக்கிறது. எனவே, சேரமான்

42. *சுடப்பட்டு உயிர் உய்ந்த சோழன் மகனும்,*
*பிடர்த்தலைப் பேரானைப் பெற்று, - கடைக்கால்,*
*செயிர் அறு செங்கோல் செலீஇயினான்; - இல்லை,*
*உயிர் உடையார் எய்தாவினை* *(பழமொழி 105)*
*(பிடர்த்லைப் பேரான் - இரும்பிடர்த் தலையார்)*

43. Chromology of the Early Tamils

பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனும், சோழன் கரிகால் பெருவளத்தானும் வாழ்ந்த காலத்தில்,[44] பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி வாழ்ந்தான் என்று முடிவு செய்யலாம்.

இம்மூவரும் வாழ்ந்த காலநிலை, சேர சோழ பாண்டியர் முறையே வஞ்சி, உறையூர், கூடல் நகரங்களில் தத்தம் அரசுகளை அமைத்து, நிலைபெற்று, தத்தம் நாடுகளை விரிவுபடுத்தி, தமிழ்நாட்டின் பெருவேந்தர்களாக வளர்ச்சி பெற்று வந்த காலநிலையாகும். பூதப்பாண்டியனும், நெடியோனும் கொற்கையில் இருந்தவர்கள்; அவர்களுள் நெடியோன் கூடலில் பாண்டிய அரசை நிறுவினான்; பசும்பூண் பாண்டியன் கூடலில் இருந்துகொண்டு, பாண்டியர் ஆட்சியை விரிவுபடுத்தியவன். எனவே, பூதப்பாண்டியன், நெடியோன், பசும்பூண் பாண்டியன் ஆகியோருக்குப் பிறகே, கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி பாண்டிய நாட்டை ஆண்டான் என்று கொள்ள வேண்டும்.

பூதப்பாண்டிய னையும், நெடியோனையும், பசும்பூண் பாண்டியனையும் நேர்முகமாகப் புகழ்ந்து பாடிய புறப் பாடல்கள், புறநானூற்றுத் தொகுப்பாளருக்குக் கிடைக்காத தால், இம்மூவருக்குப் பிறகு வாழ்ந்த கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதிமேல் எழுதப்பட்ட பாடலை (புறம்.3), பாண்டியர் பாடல்களின் முதலில் வைத்தார் என்று கருதலாம்.

கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி பசும்பூண் பாண்டியனுக்குப் பிறகும், முதுகுடுமிக்கு முன்பும் பாண்டிய நாட்டை ஆண்டான் என்று கருதலாம். அவனைப் பசும்பூண் பாண்டியன் மகன் என்றும், முதுகுடுமியின் தந்தை என்றும் கொள்வோம்.

இப்போது, நெடுஞ்செழியனின் முன்னோர் பட்டியல் பின்வருமாறு அமைகிறது:

---

44. பெருஞ்சேரலாதன், கரிகால் வளவனிடம் தோற்று வடக்கிருந்தான். (புறம்.65,66). பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனே, பெருஞ்சேர லாதன். எனவே இவர்கள் சமகாலத்தவர்.




புறநானூறு 182 முதல் 195 வரையுள்ள 14 பாடல்களை அறிவுரைப் பாடல்கள் என்று கூறலாம். இப்பாடல் ஒவ்வொன்றிலும் ஏதாவது ஓர் அறிவுரை கூறப்படுகிறது. இவற்றில் சிலவற்றை அரசர்கள் பாடியுள்ளனர். அவர்களுள் மூவர் பாண்டியர்கள் ஆவர்.

| புறம் | அறிவுரைப் பாடல் |
|---|---|
| *182* | *கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி பாட்டு* |
| *183* | *பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாட்டு* |
| *184* | *பாண்டியன் அறிவுடை நம்பியிடம் சென்ற பிசிராந்தை யார் பாடியது* |
| *188* | *பாண்டியன் அறிவுடைநம்பி பாட்டு* |

## இளம்பெருவழுதி

பரிபாடல் 15 ஆம் பாடலில் திருமாலிருங்குன்றத்தையும், அங்கு வீற்றிருந்த கண்ணன் - பலராமனையும் பாடிய இளம்பெருவழுதியார் வேறு. கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி வேறு. இருவருக்குமிடையே சில நூற்றாண்டு கால இடைவெளி இருக்கிறது.

கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி தமது பாடலில் (புறம்.182), தமக்கு என வாழாமல் பிறருக்காக வாழும்

பெரியோரைப் புகழ்கிறார். அத்தகையோர் இருப்பதால்தான் இவ்வுலகம் இருக்கிறது என்கிறார்.[45] தன்னலமற்ற இப்பெரியோர், இந்திரர் அமிழ்தம் கிடைப்பதாக இருந்தாலும், அது இனிது என்று கருதி, தாம் மட்டும் தனியாக உண்ண மாட்டார் என்று மேலும் அவர்களைப் புகழ்கிறார்:

இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும், 'இனிது' எனத்
தமியர் உண்டலும் இலரே. (புறம். 182:1-3)

'இந்திரர்' என்ற சொல் தேவர் என்ற பொருளில் இங்குக் கையாளப்படுகிறது. இந்திரர் என்று பன்மையில் பௌத்தரும் சமணருமே கையாள்வர்.[46] இந்துக்கள் இந்திரன் என்ற தேவர் தலைவனை ஒருமையிலே பேசுவர்.[47] கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி, இந்திரர் என்று பன்மையில் பேசுவதாலும், சமணரைப் போலக் குகைகளில் மறைந்து வாழாமல் பிறர் துன்பம் துடைக்க வெளியில் வந்து பாடுபடும் பெரியோரைப் புகழ்வதாலும் அவர் பௌத்த மதத்தைச் சேர்ந்தவர் என்று கொள்வது தவறாகாது.

இளம்பெருவழுதி, இளவரசனாக இருந்தபோது கடல் பயணத்தில் கப்பல் மூழ்கி இறந்து போனார் என்றும், அதனால் அவர் பாண்டிய நாட்டை அரசனாக ஆளவில்லை என்றும்

---

*45.* உண்டால் அம்ம, இவ்வுலகம்....
தமக்கு என முயலா நோன்தாள்
பிறர்க்கு என முயலுநர் உண்மையானே (புறம். 182:1, 8-9)

*46.* இந்திரர் தொழப்படும் இறைவன் எம் இறைவன்
(மணிமேகலை 27: 171)
இந்திரகுமரரின் யாம் காண்குவமோ (சிலப். 16:173)
''இந்திரர் - தேவர். 'இந்திரர்க்கும் புகழ் வரிதே' (சீவக. 173) எனவும், 'இந்திரர் அமுதம் இயைவது ஆயினும்' (புறம். 182:1-2) எனவும் சொன்னார் பிறரும்'' (சிலப். 16:173 அடியார்க்கு நல்லார் உரை)

*47.* ஏறுஅதிர்க்கும் இந்திரன் இரும்உரும் (பரி 8:33)
'இந்திரன் பூசை; இவள் அகலிகை; இவன்
சென்ற கவுதமன்; சினன் உறக் கல்உரு
ஒன்றியபடி இது' என்று உரைசெய்வோரும் (பரி. 19:50-52)
ஆயிரம் கண்ணினான், இந்திரன் (பரி. திரட்டு 2:96-97)

கருதலாம். அவர் பெயருக்குமுன் பாண்டியன் என்ற பட்டப்பெயர் இல்லாதது இதை உறுதிப்படுத்துகிறது. இளம்பெருவழுதி, பகைவர்மேல் போர் செய்வதற்காகக் கடல் பயணம் செய்தார் என்று சிலர் கருதுகிறார்கள். சங்க காலத்தில் சேரமான் நெடுஞ்சேரலாதனும் அவன் மகன் செங்குட்டு வனுமே கடல் போரில் ஈடுபட்டார்கள் என்று தெரிகிறது.[48] பாண்டியர் எவரும் கடல்போர் செய்ததாகச் சங்கப் பாடல்கள் கூறவில்லை. அவ்வாறானால், இளம்பெருவழுதி கடல் பயணம் செய்தது ஏன்? பௌத்தரான இளம்பெருவழுதி பௌத்த மதப் பிரசாரம் செய்வதற்குக் கடல் கடந்து சென்றார் என்று ஊகிக்கலாம்.

பௌத்த மதப் பிரசாரம் பாண்டிய நாட்டில் முதல் முதலாக அசோகர் காலத்தில்தான் நிகழ்ந்தது. அசோகர் தம் ஆட்சிக் காலத்தில் (கி.மு.272-232) தம் மகளான சங்கமித்திரையைப் புத்தமதப் பிரச்சாரம் செய்யத் தென்னாட்டுக்கும் இலங்கைக் கும் அனுப்பி வைத்தார். பொதியில் மலைப்பகுதியில் சங்கமித்திரை மேடு என்று ஒன்று இருப்பதால், சங்கமித்திரை பாண்டிய நாட்டிலும் பௌத்தமதப் பிரசாரம் செய்தார் என்று அறிகிறோம்.[49] பொதியமலைப் பகுதியில் போதி தர்மத்தைச் சங்கமித்திரை பிரசாரம் செய்தது கி.மு.250-225 என்ற கால நிலையில் என்று கருதலாம். சங்கமித்திரையின் போதனையால் கவரப்பட்ட இளம்பெருவழுதி பௌத்தராகி, சங்கமித்திரை யோடு இலங்கைக்குச் செல்லும்போது, கடலில் மாய்ந்து விட்டார் என்று ஊகிக்கலாம்.

---

*48. இரு முந்நீர்த் துருத்தியுள்*
*முரணியோர்த் தலைச்சென்று*
*கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின முன்பின்*
*நெடுஞ்சேரலாதன்* *(பதிற். 20:2-5)*
*கோடுநரல் பௌவம் கலங்க வேல்இட்டு*
*உடைதிரைப் பரப்பின் படுகடல் ஓட்டிய*
*வெல்புகழ்க் குட்டுவன்* *(பதிற். 46: 11-13)*

*49. நெடுஞ்செழியன் காலத்தில் (கி.மு.175-150) மதுரையில் பௌத்தப் பள்ளிகள் இருந்ததை மதுரைக் காஞ்சியில் காண்கிறோம். (மது.461-467)*

சங்கமித்திரை பாண்டிய நாட்டில் பௌத்த மதப் பிரசாரம் செய்த காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டவன், இந்து மதத்தை வரவேற்று யாகங்கள் செய்த பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியாவான் (கி.மு.250-225).[50] கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி இந்தக் காலநிலையில் வாழ்ந்திருப்பதால், அவர் முதுகுடுமியின் மகனாக இருக்கலாம். முதுகுடுமிப் பெருவழுதி, இளம்பெருவழுதி என்ற பெயர்கள் முறையே தந்தையையும் மகனையும் குறிப்பிடுவனவாகக் கொள்ளலாம். இளம்பெருவழுதி பாண்டிய நாட்டை ஆளவில்லையாதலால், அவரை முதுகுடுமியின் காலநிலையான கி.மு.250-225இல் வைக்கலாம். புறநானூற்றுப் பாடல் அமைப்பு முறையைக் காணும்போது, இளம்பெருவழுதி ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் தந்தையாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

| | |
|---|---|
| புறம். 182 | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி |
| ↓ | ↓ மகன் |
| புறம்.183 | ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் |

## ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

சங்கப்பாடல்களில் மோரியர் படையெடுப்பு[51] ஒன்றும், ஆரியர் படையெடுப்பு ஒன்றும்[52] கூறப்படுகின்றன. மோரியர் படையெடுப்பு கி.மு.278இல் அசோகர் தந்தை பிந்துசாரன் மௌரியப் பேரரசை ஆண்ட காலத்தில் நிகழ்ந்தது. ஆரியர் படையெடுப்பு சேரன் செங்குட்டுவன் காலத்தில்[53] நிகழ்ந்தது. இப் படையெடுப்பின்போது சோழன் உருவப்பல்தேர்

50. சங்க காலப் பாண்டியர் அட்டவணையைக் காண்க.

51. அகம் : 69, 251, 281; புறம்: 175

52. நற் : 170; அகம் : 336, 356, 396; புறம் : 183, 378

53. கி.மு: 225இல் ஆரியர் படையெடுப்பு நிகழ்ந்ததாகக் கொள்ளலாம். அசோகர் மாய்ந்தபின் மௌரியப் பேரரசு அழிந்தது. அவ்வரசுக்கு உட்பட்ட பல ஆரிய மன்னர்கள் தத்தம் அரசை நிலைநாட்டிக் கொண்டனர். சாதவாகனர் தலையெடுக்கலாயினர். இக்கால கட்டத்தில், சில ஆரிய மன்னர்கள் ஒன்றுகூடி தமிழ்நாட்டின்மேல் படையெடுத்தனர் மூவேந்தர்கள் ஒன்றுகூடி, மலையமான் திருமுடிக் காரி உதவியுடன் ஆரியரையும் அவர்களுக்குத் துணைவந்த வடுகரையும் முறியடித்தனர்.

இளஞ்சேட் சென்னியும்[54], மலையமான் திருமுடிக்காரியும்[55] முறையே வடுகரையும் ஆரியரையும் எதிர்த்துப் போரிட்டார்கள். ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியனும் ஆரியரை எதிர்த்துப் போர்செய்தான் என்பதை, அவன் பெயரே தெரிவிக்கிறது. எனவே, அவன் செங்குட்டுவன் காலமான கி.மு. 225-200 என்ற காலநிலையில் வாழ்ந்திருக்கலாம். ஏற்கனவே, சொல்லியபடி அவன் இளம் பெருவழுதியின் மகனாக இருக்கலாம்.

ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன் பாடிய புறம். 183ஆம் பாடல் கல்வியின் பெருமையை எடுத்துக் கூறுகிறது.

### அறிவுடை நம்பி

புறநானூற்றில், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் பாடலை அடுத்து, அறிவுடை நம்பிமேல் பாடப்பட்ட பாடல் வைக்கப் பட்டுள்ளது. எனவே, அறிவுடை நம்பி ஆரியப்படை கடந்தவனின் மகனாக இருக்கலாம் என்று ஊகிக்கலாம்.

| | |
|---|---|
| புறம். *183* | ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாட்டு |
| ↓ | ↓ மகன் |
| புறம். 184 | பாண்டியன் அறிவுடை நம்பி. |

பாண்டியன் அறிவுடை நம்பி, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தவன் என்பதைப் பின்வருமாறு நிறுவலாம்.

பரணரும் அரிசில் கிழாரும் பேகனைப் பாடியுள்ளனர்[56]. எனவே, இவ்விரு புலவர்களும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் ஆகிறார்கள். பரணர் செங்குட்டுவனையும்[57], அரிசில் கிழார் சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறையையும்[58] பாடியுள்ளனர். எனவே, இவ்விரு சேரர்களும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் செங்குட்டுவன் முதலியோரோடு சேர்ந்து ஆரியப்படையை

54. அகம். 375; புறம். 378.

55. நற். 170.

56. புறம். 145, 146

57. புறம். 369; பதிற். 41-50.

58. பதிற். 71-80.

வென்றவனாதலால்[59] அவனும் செங்குட்டுவனும் பெருஞ் சேரல் இரும் பொறையும் ஒரே தலைமுறையில் வாழ்ந்தவர் ஆகிறார்கள்.




ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையும் சம காலத்தவர் என்று கண்டோம்.

இனி, பெருஞ்சேரல் இரும் பொறை மகனான இளஞ் சேரல் இரும்பொறையும், பாண்டியன் அறிவுடை நம்பியும் சமகாலத்தில் வாழ்ந்தனர் என்பதை நிறுவுவோம்.

---

*59. சிலப்பதிகாரம் சங்கப்பாடல்களுக்குச் சில நூற்றாண்டுகள் கழித்து எழுதப்பட்டாலும், சங்க காலப் பின்னணியில் கதையை அமைத்துள்ளது. சேரன் செங்குட்டுவன் வஞ்சியிலிருந்து சேரநாட்டை ஆண்டபோது, மதுரையிலிருந்து பாண்டியநாட்டை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆண்டான் என்பதைச் சிலப்பதிகாரக் கட்டுரைகள் தெரிவிக்கின்றன.*

*செங்குட்டுவனோடு ஒருபரிசு நோக்கிக்*
*கிடந்த வஞ்சிக் காண்டம்*
*வட ஆரியர்படைகடந்து..*
*அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்*
*நெடுஞ்செழியனோடு ஒரு பரிசா நோக்கிக்கிடந்த*
*மதுரைக் காண்டம்.*

இளஞ்சேரல் இரும் பொறை கோப்பெருஞ் சோழனை வென்றான் என்று பதிற்றுப் பத்தின் ஒன்பதாம் பதிகம் கூறுகிறது.[60]

கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் என்ற புலவரின் உயிர் நண்பன். இருவரும் ஒருவரை ஒருவர் புகழ்ந்து பாடிய பாடல்கள் புறநானூற்றில் உள்ளன.[61] பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பியிடம் சென்று, அவன் நெறியறிந்து வரிவசூலிக்க வேண்டும் என்று கூறிய அறிவுரை, புறம். 184ஆம் பாடலாக அமைந்துள்ளது.

இந்த இணைப்பால், இளஞ்சேரல் இரும்பொறையும் பாண்டியன் அறிவுடை நம்பியும் சமகாலத்தவர் என்று அறிகிறோம்.

இளஞ்சேரல் இரும்பொறையின் தந்தையான பெருஞ் சேரல் இரும்பொறை காலத்தில் வாழ்ந்த ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், பாண்டியன் அறிவுடை நம்பியின் தந்தையாக இருக்கலாம் என்று கொள்வது தவறாகாது.

---

60. பொத்தி ஆண்ட பெருஞ்சோழனை..
வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று..
இன் இசை முரசின் இளஞ்சேரல் இரும் பொறை
*(பதிற். பதிகம். 9: 6,8,17)*
*(பொத்தி - பொத்தியார் என்ற புலவர். கோப்பெருஞ் சோழன் உயிர்நண்பர். பெருஞ் சோழன் - கோப்பெருஞ்சோழன்)*

61. கோழியோனே, கோப்பெருஞ்சோழன் -
பொத்து இல் நண்பின் பொத்தியொடு கெழீ இ,
வாய் ஆர் பெருநகை வைகலும் நக்கே *(புறம். 212: 8-10)*
(பொத்தி - பொத்தியார்)
(இது பிசிராந்தையார் பாடியது.)
பிசிரோன் என்ப, என் உயிர் ஓம்புநனே. *(புறம். 215:7)*
(பிசிரோன் - பிசிராந்தையார்)
(இது கோப்பெருஞ்சோழன் பாடியது)




ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் காலம், செங்குட்டுவன் காலமான கி.மு. 225-200 ஆகும். ஆரியப்படை கடந்தவன் மகனான அறிவுடை நம்பியின் காலம் கி.மு. 200-175 என்று கொள்வோம். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் காலம் கி.மு. 175-150 என்று மேலே கொண்டோம், எனவே, இந்த நெடுஞ்செழியனுக்கு முந்தைய தலைமுறையில் அறிவுடைநம்பி வாழ்ந்துள்ளான். அவ்வாறானால், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் அறிவுடை நம்பியின் மகனாக இருக்கக் கூடுமோ? இருக்கலாம் என்றுதான் தோன்றுகிறது.

பாட்டன் பெயரைப் பேரனுக்கு இடும் வழக்கம் சங்ககாலத்திலும் இருந்தது. ஒருவன் தன்மகனை 'எந்தை பெயரன்' (என் தந்தையின் பெயரைக் கொண்டவன்) என்று அழைப்பதைக் கலித்தொகையில் காண்கிறோம்.[62] எனவே, ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியனும், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் பாட்டனும் பேரனுமாக இருக்கலாம் என்று கொள்வது தவறாகாது. ஆரியப்படை கடந்தவனுக்கு அடுத்த தலைமுறையில் அறிவுடை நம்பியும், அதற்கும் அடுத்த தலைமுறையில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும்

62. மேதக்க எந்தை பெயரன் (கலித். 81; 35).

வாழ்ந்துள்ளதை இணைத்துப் பார்க்கும் போது, தலையாலங் கானத்துச் செருவென்றவன் அறிவுடை நம்பியின் மகனாக இருக்கலாம் என்று கொள்வது பொருத்தமே.

அறிவுடை நம்பி குழந்தைச் செல்வமே, பெருஞ்செல்வம் என்று ஒரு பாடலில் கூறுகிறான்.[63]

"பலசெல்வங்களைப் படைத்து, பலரோடு உண்ணும் பெருஞ்செல்வந்தரானாலும், குழந்தைச் செல்வம் இல்லாதவர் வாழ்நாள் பயனற்றதாகும். குறு குறு வென்று தளர்நடை போட்டு நடந்து, தனது சிறுகையை நீட்டிப் பாத்திரத்திலுள்ள உணவையெடுத்துத் தரையிலே இட்டும், தொட்டும், வாயால் கவ்வியும், கையால் துழாவியும், நெய்ச் சோற்றை உடம்பெல்லாம் சிதறியும் பெற்றோரை மயக்கும் மக்கட் செல்வம் இல்லாதவர்களுக்கு வாழ்நாளில் பெற்ற பயனுள்ள பொருள் எதுவுமில்லை."

இப்பாடலில் வரும், குறுகுறுவென்று நடந்து நம்மை மயக்கும் குழந்தை, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாக இருக்கலாம்.

முது குடுமியின் மகன் இளம் பெருவழுதி என்றும், அவன் மகன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்றும், அவன் மகன் அறிவுடை நம்பி என்றும், அவன் மகன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்றும் கண்டோம். இப்போது, நெடுஞ்செழியனின் முன்னோர்களின் பட்டியலை முழுமையாகப் பின்வருமாறு தரலாம் :

| | | |
|---|---|---|
| 1. | கி.மு. 350 - 325 | ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் |
| 2. | கி.மு. 325 -300 | நெடியோன் |
| 3. | கி.மு. 300 - 275 | பசும் பூண்பாண்டியன் |

63. படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெருஞ்செல்வர் ஆயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி,
இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை - தாம்வாழு நாளே. (புறம். 188)

| 4. | கி.மு. 275 - 250 | கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி |
|---|---|---|
| 5. | கி.மு. 250 - 225 | பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி |
| 6. | கி.மு. 250 - 225 | கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி |
| 7. | கி.மு. 225 - 200 | ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் |
| 8. | கி.மு. 200 - 175 | அறிவுடை நம்பி |
| 9. | கி.மு. 175 - 150 | தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் |

## நெடுஞ்செழியன் வழிவந்தோர்

இனி, நெடுஞ்செழியனுக்குப் பிறகு சங்க காலத்தில் வாழ்ந்த பாண்டியர்களைக் காண்போம்.

நெடுஞ்செழியன் காலத்திலும், அவனுக்கு அடுத்த தலை முறையிலும் இரண்டு பாண்டியர்கள் வாழ்ந்துள்ளனர். அவர்கள், கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியும், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனும் ஆவர்.[64]




நெடுஞ்செழியனைப் போன்ற வலிமை மிக்க அரசன் பாண்டியநாட்டை ஆண்டபோது, வேறொரு பாண்டியன் அந்நாட்டையோ, அந்நாட்டின் ஒரு பகுதியையோ சுதந்திரமாக ஆண்டிருக்க முடியாது. எனவே, இவ்விருவரும் நெடுஞ்

64. நெடுநல்வாடையில் நெடுஞ்செழியன்ப்பாடிய நக்கீரர், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனைப் பாடியுள்ளார்(புறம். 56)

நெடுஞ்செழியன் காலத்துச் சோழனான கிள்ளிவளவனைப் பாடிய ஐயூர் முடவனார் (புறம். 228) கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியைப் பாடியுள்ளார். இதனால் இவ்விரு பாண்டியரும் நெடுஞ்செழியன் காலத்தில் வாழ்ந்ததை அறிகிறோம்.

நெடுஞ்செழியனை மதுரைக் காஞ்சியில் பாடியவர் மாங்குடி மருதனார். அவர் மகன் மருதன் இளநாகனார். இளநாகனார் மேற் கூறிய இரு பாண்டியர்களையும் பாடியுள்ளார் (புறம். 52, 55). எனவே, இப்பாண்டியர்கள் நெடுஞ்செழியனுக்கு அடுத்த தலைமுறையிலும் வாழ்ந்ததை அறிகிறோம்.

செழியனின் புதல்வர்கள் என்று கொள்ளவேண்டும். இவர்களில், கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதி மூத்தவன் என்பதைப் புறநானூற்றுப் பாடல்களின் வரிசை காட்டுகிறது.

| பாண்டியர் பாடல் | பாண்டியர் |
|---|---|
| புறம் 51,52 | பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி (நெடுஞ்செழியனின் மூத்த மகன்) |
| புறம் 55, 56,57 | பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன் மாறன். (நெடுஞ்செழியனின் இளைய மகன்) |

நெடுஞ்செழியன் காலநிலை கி.மு. 175 - 150 என்று கொண்டதால், அவன் புதல்வர் இருவரின் காலநிலை கி.மு.150-125 என்று கொள்ளலாம். இவர்களில், நெடுஞ் செழியனுக்குப் பிறகு பாண்டிய நாட்டை ஆண்டவன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியாவான். இவன் நெடுநாள் உயிர்வாழவில்லை என்று தோன்றுகிறது. இவனுக்குப்பின் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் பாண்டியநாட்டை ஆண்டான். இவனுக்கு அநேக புதல்வர்கள் இருந்தார்கள்.[65] ஐந்து புதல்வர்கள் இருந்தி ருக்கலாம். இவர்கள் பஞ்சவர் (ஐவர்) என்று அழைக்கப்பட்டனர். இவர்களில் ஒருவனான வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, 'பஞ்சவர் ஏறு' (புறம். 58) என்று அழைக்கப்படுகிறான்.

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனின் ஐந்து புதல்வர்களில் இருவரையே சங்கப் பாடல்களில் காண்கிறோம். ஒருவன் பாண்டியன் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி. மற்றொருவன் பாண்டியன் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி.

65. *நோய் இலராக நின் புதல்வர்! (புறம். 196:10)*
*நின் ஓரன்ன நின் புதல்வர் (புறம். 198:14)*

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய
நன்மாறன் (புறம். 57)
↓

| ↓ | ↓ |
|---|---|
| வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி (புறம். 58) | கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி. |

புறநானூறு 57, 58ஆம் பாடல்கள் பகைவரோடு உடன்பாடு செய்து கொள்வதைப் பொருளாகக் கொண்டவை. ஒத்த கருத்துள்ள இவ்விரு பாடல்களில் முன்னுள்ள பாடல் (புறம். 57) நன்மாறனையும், பின்னுள்ள பாடல் (புறம். 58) வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியையும் பாடுகின்றன. எனவே, நன்மாறனுக்குப் பிறகு வெ.அ.து. பெருவழுதி வாழ்ந்தான் என்றும், இருவரும் தந்தையும் மகனுமாக இருக்கலாம் என்று கொள்வதும் தவறாகாது.

பேரிசாத்தனார் என்ற புலவர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனையும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியையும் பாடியுள்ளார். இந்தச் சோழனையும் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியையும் ஔவையார் பாடியுள்ளார். எனவே, இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறன் காலத்தில் உக்கிரப் பெருவழுதியும் வாழ்ந்தான் என்று அறிகிறோம். நற்றிணைப் பாடல் வரிசையை ஆராய்ந்தால், 97ஆம் பாடல் மாறன் வழுதியாலும், 98ஆம் பாடல் உக்கிரப் பெருவழுதியாலும் பாடப்பட்டுள்ளதைக் காண்கிறோம். எனவே, மாறன் வழுதிக்கு அடுத்த தலைமுறையில் உக்கிரப் பெருவழுதி வாழ்ந்தான் என்று கொள்ளலாம். மாறன் வழுதி நன்மாறனின் அண்ணன் ஆதலால், உக்கிரப் பெருவழுதி நன்மாறனுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தான் என்று அறிகிறோம். நன்மாறன் தலைமுறையிலும் அவனுக்கு அடுத்த தலைமுறையிலும் வாழ்ந்த உக்கிரப் பெருவழுதி, அவன் மகனாக இருக்கலாம்.

பேரி சாத் தனார்

பு. 198

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்

(தம்பி)

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி

பு. 125

மகன்

97

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி

பாண்டியன் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி

98

நற்றிணை

பு. 367

பு. 367

ஔவையார்

சங்கப் பாடல்களில் காணப்படும் கடைசிப் பாண்டியன் *சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன்* ஆவான்.

| புறம் | பாண்டியர் பாடல் |
|---|---|
| 58 | வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி |
| 59 | *சித்திர மாடத்துத் துஞ்சிய* நன்மாறன். |

இவன் மேல் பாடப்பட்ட பாடல் (புறம். 59) வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியின் மேல் பாடப்பட்ட பாடலுக்குப் பின் (புறம். 58) வைக்கப்பட்டுள்ளது. எனவே இவன் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதிக்கு அடுத் தலைமுறையில் வாழ்ந்திருக்கலாம். இவன் பெயர் நன்மாறன் என்று இருப்பதால், இவன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனின் பேரன் என்று முடிவு செய்யலாம். இவன் உக்கிரப் பெருவழுதியின் மகனாக இருக்கலாம்.

நெடுஞ்செழியனுக்குப் பிறகு வாழ்ந்த ஐந்து பாண்டியர்களின் கால நிலை வருமாறு:

| காலம் | | |
|---|---|---|
| கி.மு. 175-150 | நெடுஞ்செழியன் | |
| கி.மு. 150-125 | இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் | கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி |
| கி.மு. 125-200 | கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி | வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெரு வழுதி |
| கி.மு. 100-75 | சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் | |

சங்க காலத்தில் வாழ்ந்த பதினான்கு பாண்டியர்களின் கால நிலை வருமாறு.

| காலநிலை | | பாண்டியர் |
|---|---|---|
| கி.மு. 350-325 | 1 | ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் |
| கி.மு. 325-300 | 2 | நெடியோன் |
| கி.மு. 300-275 | 3 | பசும்பூண் பாண்டியன் |
| கி.மு. 275-250 | 4 | பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி. |
| கி.மு. 250-225 | 5 | பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி |
| | 6 | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி |
| கி.மு. 225-200 | 7 | பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன். |
| கி.மு. 200-175 | 8 | பாண்டியன் அறிவுடை நம்பி |
| கி.மு. 175-150 | 9 | பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் |
| கி.மு. 150-125 | 10 | பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி |
| | 11 | பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் |
| கி.மு. 125-100 | 12 | பாண்டியன் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி |
| | 13 | பாண்டியன் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி |
| கி.மு. 100-75 | 14 | பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் |

# சோழர் காலநிலை

## முகவுரை

கி.மு. நான்காம் நூற்றாண்டுக்குமுன் சோழர் குடியைச் சேர்ந்த பலகிளையினர் அழுந்தூர், ஆமூர், கழார், குடந்தை, பருவூர், பெருந்துறை, போஓர், வல்லம் முதலிய இடங்களில் சிறு சிறு குடியாட்சிகளை[65] அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள். ஒவ்வொரு கிளையினரும் தங்களுக்குள் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். இத்தலைவன் சோழர் பெருமகன் என்று அழைக்கப்பட்டான்.[66] பல சங்கப் பாடல்கள் சோழர்களைப் பன்மையிலேயே குறிப்பிடு கின்றன.[67] காலப்போக்கில் சோழர்குடியில் கிள்ளி, சென்னி என்ற இரு கிளையினர் நம் படைபலத்தால் சிறப்படையத் தொடங்கினார்கள். கிள்ளி வழியினர் உறையூரைக் கைப்பற்றி அங்கிருந்து ஒரு பேரரசை அமைக்கத் தொடங்கினார்கள். இவ்வழியினர் தம்மைப் பெருநற்கிள்ளி, பெருங்கோக் கிள்ளி என்று கூறிக் கொண்டார்கள். முதன் முதல் சிறு நிலப்பரப்பை ஆண்டுவந்ததால், சிறுகோல் சென்னி[68] என்று அழைக்கப்பட்ட சென்னி வழியினர் அழுந்தூரில் தொடங்கிக் காவிரிப் பூம்பட்டினம் வரையில் தமது ஆட்சியை விரிவாக்கி அப்பட்டினத்திலிருந்து ஆளத்தொடங்கினார்கள்.

கிள்ளி, சென்னி கிளையினரின் மேம்பாட்டை ஒப்புக் கொள்ளாத சோழர்குடியைச் சேர்ந்த மற்ற கிளையினர்,

---

65. அகம். 44, 246; ஐங். 56; நற். 281, 379; அகம். 96, 123, 336;

66. அகம். 375

67. நற். 10, 87; அகம். 96; நற். 227; பதிற். பதிகம் 5

68. நற். 265

அவர்களுக்கு அடிக்கடி தொல்லை கொடுத்து வந்தனர். காலப் போக்கில் மற்ற கிளையினர் அடங்கிவிட, கிள்ளி,சென்னி கிளையினரே சோழநாட்டைப் பிரித்துக் கொண்டு ஆட்சி செய்தார்கள்.

சங்க இலக்கியத்தில் பதினெட்டு சோழர்களைக் காண்கிறோம். இவர்கள் கி.மு. 325 முதல் கி.மு. 75 வரையில் - பத்து தலைமுறைகளில் வாழ்ந்தவர்கள் என்று கணிக்கலாம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் நெடுஞ்செழியன் படைத்தலைவனான பழையன் மாறனிடம் கூடலில் போர்செய்து தோற்றவனாதலால்[69], அவன் காலநிலை நெடுஞ்செழியன் காலநிலையான கி.மு. 175-150 என்ற அடிப்படையில் இந்தக் காலநிலை கணிக்கப்பட்டுள்ளது.

| தலை முறை | காலம் கி.மு. | கிள்ளி வழிச் சோழர் | சென்னி வழிச் சோழர் |
|---|---|---|---|
| I | 325-300 | 1 தித்தன் | — |
| II | 300-275 | 2 சோழன் போர்வைக் கோப் பெரு நற்கிள்ளி | 3 பெரும்பூண்சென்னி |
| III | 275-250 | 4 சோழன் முடித் தலைக்கோப் பெருநற்கிள்ளி | 5 சோழன் கரிகால் பெருவளத்தான் (1). |
| IV | 250-225 | 6 சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி | 7 சோழன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி |
| V | 225-200 | 8 கோப்பெருஞ் சோழன் | 9 சோழன் கரிகால் பெருவளத்தான் (2) |
| VI | 200-175 | 10 காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி | 11 சோழன் சேட்சென்னி நலங்கிள்ளி<br>12 மாவளத்தான் |
| VII | 175-150 | 13 சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் | |
| VIII | 150-125 | 14 சொழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்<br>15 சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி<br>16 சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி | |
| IX | 125-100 | 17 சோழன் நல்லுருத்திரன் | |
| X | 100-75 | 18 சோழன் செங்கணான். | |

69. அகம். 346

## சென்னி வழிச் சோழர்கள்

புறநானூற்றுப் பாடல்களின் அமைப்பை ஆராய்ந்தால், கிள்ளி வளவன் பாடல்களுக்கு முன்பு நலங்கிள்ளியின் பாடல்களும், நலங்கிள்ளியின் பாடலுக்கு முன்பு இரண்டாம் கரிகால் வளவன்[70] பாடலும் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

| பாடல் கருத்து | பாடல் | சோழன் |
|---|---|---|
| வீரம், வெற்றி<br>கொடை, புகழ் | புறம். 27-33<br>புறம். 34-42 | சோழன் நலங்கிள்ளி<br>கிள்ளிவளவன் |
| பகைமை | புறம். 44-45<br>46 | நலங்கிள்ளி<br>கிள்ளிவளவன் |
| பாண் ஆற்றுப் படை | புறம். 68<br>புறம். 69,70 | நலங்கிள்ளி<br>கிள்ளிவளவன் |
| இறந்தபோது பாடப்பட்டவை | புறம். 224<br>புறம். 225<br>புறம். 226-8 | கரிகால் வளவன் (2)<br>நலங்கிள்ளி<br>கிள்ளி வளவன் |
| கடைநிலை (அரண்மனை வாசலில் நின்று பாடும்) பாடல் | புறம். 382<br>புறம். 386 | நலங்கிள்ளி<br>கிள்ளி வளவன் |

70. கரிகால் வளவன் என்ற பெயரில் பாட்டனும் பேரனுமான இருவர் சங்ககாலத்தில் இருந்தனர். முதலாம் கரிகால் வளவன் இளஞ்சேட் சென்னியின் தந்தை. இரண்டாம் கரிகால் வளவன் இளஞ்சேட் சென்னியின் மகன் - கே.என்.சிவராசபிள்ளை, 'முற்காலத் தமிழர் காலநிலை' Chronology of the Eazly Tamils) பக்கம் 88-96.

மேற்காட்டிய பாடல்களின் அமைப்பிலிருந்து, கிள்ளிவளவனுக்கு முந்தைய தலைமுறையில் சோழன் நலங்கிள்ளியும், நலங்கிள்ளிக்கு முந்தைய தலைமுறையில் கரிகால் வளவன் (2) உம் வாழ்ந்தனர் என்று கொள்ளலாம்.

| | |
|---|---|
| கி.மு. 225-200 | சோழன் கரிகால் பெருவளத்தான் (2)<br>↓ மகன் |
| கி.மு. 200-175 | சோழன் சேட்சென்னி நலங்கிள்ளி<br>↓ மகன் |
| கி.மு. 175-150 | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் |

சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியின் மகன் கரிகால் வளவன் என்று பொருநர் ஆற்றுப்படை கூறுகிறது.[71] எனவே, உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னியை இரண்டாம் கரிகால் வளவனுக்கு முந்தைய தலைமுறையில் கி.மு. 250--225 என்ற காலநிலையில் வைக்க வேண்டும். நலங்கிள்ளியின் முழுப்பெயர், சேட் சென்னி நலங்கிள்ளியாதலால்[72] அவன் இளஞ்சேட் சென்னியின் பேரன் என்று கொள்ளவேண்டும்.

| | |
|---|---|
| கி.மு. 250-225 | சோழன் உருவப்பலதேர் இளஞ்சேட் சென்னி<br>↓ மகன் |
| கி.மு, 225-200 | சோழன் கரிகால் வளவன் (2) |

முதலாம் கரிகால் வளவன், இரண்டாம் கரிகால்வளவனின் பாட்டனும், உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியின் தந்தையுமாவான். இது கே.என். சிவராச பிள்ளை ஆராய்ச்சியின் முடிவாகும். எனவே, முதலாம் கரிகால் வளவனின் காலநிலை கி.மு. 275-250 என்று கொள்வோம்.

| | |
|---|---|
| கி.மு. 275-250 | கரிகால் வளவன் (1)<br>↓ மகன் |
| கி.மு. 250-225 | உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி |

71. உருவப்பல்தேர் இளையோன் சிறுவன்....
கண்ணார்கண்ணிக் கரிகால் வளவன் (பொருநர் 130, 148)

72. சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன்கொல் (புறம் 225:9)

முதலாம் கரிகால் வளவனோடு சேரமான் பெருஞ் சேரலாதன் வெண்ணியில் போர்புரிந்தபோது, சேரன் முதுகில் புண்பட்டு விட்டது. அதற்கு நாணிய சேரன், போர்க் களத்திலேயே உண்ணா நோன்பிருந்து உயிர்விட்டான்.[73] இந்த சேரன், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் ஆவான்.[74] சேரர் காலநிலையை ஆராயும் போது, உதியஞ் சேரலாதன் காலநிலை கி.மு. 275-250 என்பது புலப்படும்.[75] எனவே, முதலாம் கரிகால் வளவன் காலம் அதுவே.

பெரும் பூண்சென்னியின் பெயரைப் பார்த்தால், அவன் இளஞ்சேட் சென்னியின் பாட்டனாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. அவன் முதலாம் கரிகால் வளவனின் தந்தை என்று கொண்டு, அவன் காலநிலை கி.மு. 300-275 என்று கணிப்போம்.

| கி.மு. | |
|---|---|
| 300-275 | பெரும் பூண்சென்னி ↓ |
| 275-250 | கரிகால்வளவன் (1) ↓ |
| 250-225 | இளஞ்சேட் சென்னி |

மாவளத்தான், சோழன் நலங்கிள்ளியின் தம்பி என்று புறம். 43ஆம் பாடலின்அடிக்குறிப்பால்அறிகிறோம். எனவே, அவன் கால நிலை, நலங்கிள்ளியின் காலநிலையான கி.மு.200-175 ஆகும்.

இனி, சென்னிவழிச் சோழர்களின் காலநிலையை முழுமையாகக் காண்போம்.

| காலநிலை | சென்னிவழிச் சோழர் |
|---|---|
| கி.மு. 300-275 | பெரும் பூண் சென்னி ↓ |
| கி.மு. 275-250 | கரிகால் பெருவளத்தான் (1) ↓ |

73. புறம். 65,66; அகம் 55
74. கே.என். சிவராச பிள்ளை: 'முற்காலத் தமிழர் காலநிலை' பக். 103-105
75. சேரர் காலநிலை - காணவும்.

| | |
|---|---|
| கி.மு. 250-225 | உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி |
| | ↓ |
| கி.மு. 225-200 | கரிகால் பெருவளத்தான் (2) |
| | ↓ |
| கி.மு. 200-175 | சேட்சென்னி நலங்கிள்ளி<br>நலங்கிள்ளிதம்பி மாவளத்தான் |
| | ↓ |
| கி.மு. 175-150 | குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் |

### கிள்ளி வழிச் சோழர்கள்

தித்தன் என்பவன் உறையூரில் சோழ அரசை நிறுவி, உறையூரைப் பாதுகாப்புடையதாகச் செய்தான்.[76] தித்தன் மறைந்து ஓரிரு நூற்றாண்டுகளுக்குப் பின்பும், உறையூர் தித்தன் உறந்தை என்றே அழைக்கப்படலாயிற்று.[77]

தித்தனின் மகன் தித்தன் வெளியன் ஆவான். இவன் சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளி என்று அழைக்கப்பட்டான்.[78] தித்தன் வெளியன் மற்போரில் பெரும் விருப்ப முடையவன். ஆமூர் மல்லன் என்பவனோடு மற்போர் செய்து வென்றவன்.[79] அரசனான பிறகும் உறையூர் அவையில் மற்போர் நிகழ்வதைக் கண்டு களித்தவன். தித்தன் வெளியன் அவையில் மற்போர் செய்வதில் வல்லமை மிகுந்த பாணன் என்பவன் இருந்தான். பாணனோடு மற்போர் செய்வதற்கு வந்த கட்டி என்பவன், மற்போர் தொடங்குமுன் உறையூர் நாளவையில் கொட்டப்பட்ட கிணைப்பறை ஓசையைக் கேட்டு அஞ்சி, மற்போர் செய்யாமலே பின்வாங்கி ஓடிவிட்டான்.[80] பாணனோடு மற்போர்செய்து அவனை வீழ்த்த வேண்டும் என்ற நோக்கத்தோடு, கழுமலத்தின்

76. நற். 58, அகம். 122
77. புறம். 352, 395; அகம். 6,122
78. புறம். 80, உரை
79. புறம். 80
80. வலிமிகு முன்பின் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
பாடு இன் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே (அகம். 226: 13-17)

தலைவனான கணையன் என்பவன், தமிழ்நாட்டு மல்லர்களை விட்டுவிட்டு, ஆரியப் பொருநன் ஒருவனை அழைத்து வந்தான். பாணனுக்கும் ஆரியப் பொருநனுக்கும் மற்போர் நடந்தபோது, ஆரியப் பொருநனின் தோள்கள் பாணன் கைக்குள் அகப்பட்டு நசுங்கிச் செயலற்றுப் போயின. அதைக் கண்ட கணையன் நாணமடைந்தான்.[81]

கிள்ளி, சென்னி வழிச் சோழர்கள் தங்கள் ஆட்சியை விரிவாக்கப் பகைவர்களோடு போர் செய்த தொடக்க காலத்தில், தேவைப்பட்டபோது ஒருங்கிணைந்து செயல்பட்டார்கள். சேர சோழர்கள் தத்தம் அரசை விரிவாக்க முயன்றபோது தடையாக இருந்தவன் கொண்கானத்துத் தலைவன் நன்னன் ஆவான். நன்னனை அடக்குவதற்காகச் சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளி, தன் படைத்தலைவனான பழையனை அனுப்பினான். நன்னன் கட்டி முதலிய ஐவரைக் கூட்டு சேர்த்துக் கொண்டு பழையனோடு போர் செய்து அவனைக் கொன்றான். போர்வைக்கோ, பெரும்பூண் சென்னியை நன்னன் மேல் போர் செய்ய அனுப்பினான். நன்னன் நாட்டுக்குச் செல்லும் வழியில் இருந்த கழுமலத்தின் தலைவனான கணையன் பெரும்பூண் சென்னியைத் தடுத்து நிறுத்த முயன்றான். பெரும்பூண் சென்னி கணையனைச் சிறைபிடித்துக் கழுமலத்தைக் கைப்பற்றினான்.[82]

கணையனும் கட்டியும் தித்தன் வெளியன் அவையில் இருந்த பாணனை மற்போரில் வீழ்த்த முடியாமல்

81. ..... ..... ..... பாணன்
*மல் அடு மார்பின் வலி உற வருந்தி*
*எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்*
*நிறைத்திரள் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த*
*திறன் வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்*
*கணையன் நாணியாங்கு* (அகம். 386:3-8.)

82. *நன்னான், ஏற்றை, நறும்பூண் அத்தி,*
*துன் அருங் கடுந்திறல் கங்கன், கட்டி,;*
*பொன் அணி வல்வில் புன்றுறை, என்று ஆங்கு*
*அன்று அவர் குழீஇய அளப்பரும் கட்டூர்,*
*பருந்துபடப்பண்ணி, பழையன் பட்டென,*
*கண்டு அது நோனானாகி, திண்தேர்க்*
*கணையன் அகப்பட, கழுமலம் தந்த*
*பிணையல் அம் கண்ணிப் பெரும்பூண்சென்னி*
*அழும்பில்* (அகம். 44:7-15.)

தோற்றுப்போனவர்கள். இவர்களில் கணையனைப் பெரும்பூண்சென்னி போரிலே வென்று சிறைபிடித்தான். தித்தன் வெளியன் படைத்தலைவன் பழையனைக் கொன்ற நன்னன் கூட்டணியில் கட்டி இருந்தான். எனவே, தித்தன் வெளியனான சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியும், பெரும்பூண்சென்னியும் சமகாலத்தில் வாழ்ந்த சோழர்கள் ஆவர். தித்தன் வெளியன் உறையூரிலிருந்து ஆட்சி புரிந்தபோது, பெரும்பூண் சென்னி அழுந்தூரிலிருந்து ஆட்சி செய்து வந்தான். பெரும்பூண் சென்னியின் காலநிலை கி.மு.300-275 என்று மேலே கணித்தோம். எனவே போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் காலநிலையும் அதுவேயாகும்.




தித்தன், போர்வைக்கோவின் தந்தையாதலால், அவன் காலநிலை கி.மு. 325-300. தித்தன் உறையூரிலிருந்து சோழ அரசை அமைத்தது. கி.மு. 325இல் என்றும், பெரும்பூண் சென்னி அழுந்தூரை ஆண்ட காலம் கி.மு. 300 என்றும் முடிவு செய்யலாம்.

கி.மு. 325-300




மகன்

கி.மு. 300 - 275




(உறையூர்ச் சோழர்) (அழுந்தூர்ச் சோழன்)

தித்தனும் அவன் மகன் சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளியும் முடி சூடிக்கொண்டு சோழ நாட்டை ஆளவில்லை. குடியாட்சித் தலைவர்களாகவே உறையூர்ப்

பகுதியை ஆண்டுவந்தார்கள். ஆனால், சோழன் முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளி, தலையில் முடி சூடிக்கொண்டு ஆட்சி செய்தான் என்பதை அவன் பெயரிலுள்ள 'முடித்தலைக்கோ' என்ற பெயர் சுட்டிக் காட்டுகிறது. இவன் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையைக் காணக் கருவூருக்குச் சென்றான் என்பதை புறம். 13ஆம் பாடலால் அறிகிறோம். சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையின் காலநிலை கி.மு.275 - 250 ஆகும்.[83] எனவே முடித்தலைக்கோப்பெருநற் கிள்ளியின் காலநிலையும் இதுவேயாகும். இந்தக் கால நிலையில் அழுந்தூர்ப்பகுதியைச் சென்னி வழிச்சோழனான முதலாம் கரிகால் வளவன் ஆண்டு வந்தான். இவன் சேரமான் பெருஞ்சேரலாதன் எனப்படும் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனை வெண்ணிப் போர்க்களத்தில் வென்றபோது, முதுகில் புண்பட்டதற்கு நாணிய சேரன் உண்ணா நோன்பிருந்து உயிர்விட்டதை மேலே பார்த்தோம். அந்துவஞ்சேரலும், உதியஞ்சேரலும் அண்ணன்-தம்பி உறவு என்று பதிற்றுப்பத்தால் ஊகிக்கலாம்.[84]

எனவே, அந்துவஞ் சேரலும், அவனைக் காணக் கருவூருக்குச் சென்ற முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளியும், உதியஞ்சேரலும், அவனை வென்ற முதலாம் கரிகால் வளவனும் கி.மு. 275-250 என்ற காலநிலையில் வாழ்ந்துள்ளார்கள் என்று முடிவு செய்யலாம்.




சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் காலநிலை கி.மு. 300 - 275 ஆதலால், முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி. போர்வைக்கோவிற்குப் பிறகு உறையூரில் முடிசூடிக்கொண்டு ஆட்சிபுரிந்த அவனது மகன் என்று கருதலாம்.

83. சேரர் காலநிலை பார்க்கவும்.

84. சேரர் காலநிலை பார்க்கவும்.




சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேல் பல் தடக்கைப் பெருநற்கிள்ளியும்[85] போர் செய்தபோது இருவரும் போர்க்களத்திலேயே இறநதுபோனார்கள். இறந்து கிடக்கும் இருவேந்தர்களுக்கு இரங்கிப் பரணர் ஒரு பாடல் பாடியுள்ளார்.[86] பரணர் இளஞ்சேட் சென்னியையும் பாடியுள்ளதால்,[87] சோழன் வேல் பல் தடக்கைப் பெருநற் கிள்ளி, சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னியின் காலத்தில் - கி.மு. 250 - 225இல் வாழ்ந்தவன் என்று முடிவு செய்யலாம். இளஞ்சேட்சென்னி நெய்தலங்கானல் பகுதியை ஆண்டுவந்தபோது, வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி உறையூர்ப் பகுதியை ஆண்டு வந்தான் என்று கருதலாம்.

வேல் பல் தடக்கைப் பெருநற்கிள்ளி, முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளிக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தவன் என்பதைப் பின்வருமாறு நிறுவலாம்.

முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறையைக் காணக் கருவூருக்குச் சென்றான்

85. இவன் பெயர் சோழன் வேல் பல் தடக்கைப் பெருவிறல் கிள்ளி என்று புறம்.62இன் அடிக்குறிப்பில் தவறாக எழுதப்பட்டுள்ளது. ஆனால் புறம்.368இல் பெருநற்கிள்ளி என்று சரியாக எழுதப்பட்டுள்ளது.
86. புறம்.63
87. புறம். 4.

என்று புறம். 13ஆம் பாடலின் அடிக்குறிப்பு கூறுகிறது. எனவே இருவரும் சமகாலத்தவர். அந்துவஞ்சேரலின் மகன் செல்வக்கடுங்கோ வாழியாதன்,[88] செல்வக் கடுங்கோவின் மனைவியும், நெடுஞ்சேரலாதனின் மனைவியும் சகோதரிகள்.[89] எனவே, செல்வக்கடுங்கோவும் நெடுஞ்சேரலாதனும் சகலர் ஆகிறார்கள். இதனால், நெடுஞ்சேரலாதன் அந்துவஞ்சேரலுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தவனாகிறான். நெடுஞ்சேரலாதனோடு போர் செய்த வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி அந்துவஞ்சேரலும் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளியும் வாழ்ந்த தலைமுறைக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தவனாகிறான். வேல் பல்தடக்கைப் பெருநற்கிள்ளி, முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளியின் மகனாக இருக்கலாம்.




சோழன் வேல் பல் தடக்கைப் பெருநற்கிள்ளி, கிள்ளி வழியில் உறையூர்ப் பகுதியை கி.மு. 250-225 என்ற காலநிலையில் ஆண்டான்.

88. பதிற். பதிகம்.7

89. பதிற். பதிகம்.4,8.

| கி.மு. | | |
|---|---|---|
| 325 - 300 | தித்தன் | ? |
| 300 - 275 | போர்வைக்கோ | பெரும்பூண்சென்னி |
| 275-250 | முடித்தலைக்கோ | கரிகால்வளவன் (1) |
| 250 - 225 | வேல் பல் தடக்கைப் பெருநற்கிள்ளி | உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி |
| | உறையூர்ச் சோழர் | அழுந்தூர் நெய்தலங்கானல் சோழர். |

## கோப்பெருஞ்சோழன் காலநிலை

கோழியோன்[90], தேர்வண்கிள்ளி[91], பெருங்கோக்கிள்ளி[92], பொத்தியாண்ட பெருஞ்சோழன்,[93] பேதைச் சோழன்[94] என்று கோப்பெருஞ்சோழன் புறநானூற்றுப் பாடல்களிலும், பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகத்திலும் குறிப்பிடப்படுகிறான். கோப்பெருஞ்சோழன் உறையூரிலிருந்து ஆட்சிபுரிந்தான் என்பதைக் 'கோழியோன்' என்ற தொடர் தெரிவிக்கிறது. (கோழி, உறையூரின் பழைய பெயர்) தேர்வண்கிள்ளி, பெருங்கோக்கிள்ளி என்ற தொடர்கள் அவன் கிள்ளி வழிச் சோழன் என்பதைக் குறிப்பிடுகின்றன. பெருஞ்சோழன்,

---

*90. கோழியோனே கோப்பெருஞ்சோழன் - புறம் 212:8.*

*91. கலங்கினென் அல்லனோ, யானே - பொலந்தார்த்*
*தேர்வண் கிள்ளி போகிய*
*பேர் இசை மூதூர் மன்றம் கண்டே (புறம். 220:5-7)*
*(கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச் சென்று மீண்டு உறையூர் கண்ட பொத்தியார் அழுது பாடியது)*
*[மூதூர் - தலைநகரம், உறையூர்; மன்றம் - அரசவை]*

*92. சோழ நல்நாட்டுப் படினே, கோழி...*
*பெருங்கோக்கிள்ளி கேட்க (புறம். 67:8,11)*

*93. பொத்தி ஆண்ட பெருஞ்சோழனை -*
*வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று*
*இன் இசை முரசின் இளஞ்சேரல் இரும்பொறை (பதிற்.பதி. 9:6,8,17.)*
*[பொத்தி - பொத்தியார்]*

*94. புறம். 216:9.*

பெருங்கோக்கிள்ளி என்ற பெயர்கள், 'பெருநற்கிள்ளி' என்ற பட்டப் பெயரை நினைவுபடுத்துகின்றன. எனவே, கோப் பெருஞ்சோழன் பெருநற்கிள்ளி என்ற பட்டப்பெயருடன் உறையூர்ப் பகுதியை ஆண்ட கிள்ளி வழிச்சோழன் என்பது தெளிவாகிறது.

கோப்பெருஞ்சோழனைப் பாடிய பிசிராந்தையார், பாண்டியன் அறிவுடை நம்பியைப் பாடியுள்ளார்.




பிசிராந்தையார் அறிவுடை நம்பியைப் பாடியபோது, அவன் இளைஞனாக, நெறியறிந்து வரிவசூலிக்காமல், ஆரவாரச் சுற்றத்தோடு கேளிக்கைகளில் மூழ்கி பொருளை வீணடித்தான் என்பதை புறம். 184 ம் பாடலால் அறிகிறோம். அதே சமயம் கோப்பெருஞ்சோழன் முதியவனாக, தன் மக்கள் இருவர் தன் மேலேயே படையெடுக்க முனைந்ததால் மனமுடைந்து, துறவு பூண்டு, வடக்கிருந்து உயிர் நீத்ததையும், உயிர் நீத்தபின் பிசிராந்தையார் அவன் நடுகல் அருகில் தாமும் அமர்ந்து வடக்கிருந்ததையும் புறப்பாடல்கள் தெரிவிக்கின்றன.[95] எனவே, அறிவுடை நம்பி வாழ்ந்த தலைமுறையில் கோப்பெருஞ்சோழன் வாழ்வு முடிந்து விட்டது என்பதை அறிகிறோம். பாண்டியன் அறிவுடைநம்பி வாழ்ந்த காலநிலை கி.மு.200 - 175 ஆகும். அதற்கு முந்தைய தலைமுறையில் - அதாவது கி.மு. 225 - 200 என்ற கால நிலையில் கோப்பெருஞ் சோழனை வைக்கலாம்.

பொத்தியார் என்ற புலவரை அவைப்புலவராக ஆண்ட கோப்பெருஞ்சோழனை இளஞ்சேரல் இரும்பொறை தோற்கடித்தான் என்று பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகம் கூறுகிறது. பொத்தியார் கோப்பெருஞ்சோழன் மேல் பாடிய ஐந்து பாடல்கள் (புறம். 217, 220 - 223) புறநானூற்றில் இடம்

95. புறம். 213 - 218

பெற்றுள்ளன. இப்பாடல்கள் கோப்பெருஞ்சோழன் இறந்த பின்பு பாடப்பட்டவை. எனவே, இளஞ்சேரல் இரும் பொறையிடம் தோற்ற கோப்பெருஞ்சோழன், அந்த தோல்வியாலும், தன் மக்களே தன் மேல் படையெடுக்க வந்ததாலும் மனமுடைந்து, வடக்கிருந்து உயிர்நீத்தான் என்று கருதலாம். இளஞ்சேரல் தலைமுறையில், கோப்பெருஞ் சோழன் இறந்து போனதால், கோப்பெருஞ்சோழனை இளஞ்சேரல் தலைமுறைக்கு முந்தைய தலைமுறையில் வைக்கலாம். இளஞ்சேரலின் காலம் கி.மு. 200 - 175 ஆதலால், கோப்பெருஞ்சோழனை கி.மு. 225 - 200 என்ற காலநிலையில் வைக்கலாம்.




புறநானூற்றுப் பாடல்களின் வரிசை அமைப்பு, இளஞ் சேரலும் கோப்பெருஞ்சோழனும் ஏறத்தாழச் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

| புறம் | சேரர் பாடல் | புறம் | சோழர் பாடல் |
|---|---|---|---|
| *210-211* | சேரமான் குடக் கோச்சேரல் இரும்பொறை (இளஞ்சேரல் இரும்பொறை) பரிசில் தராமல் ஏமாற்றிய போது பெருங்குன்றூர் கிழார் பாடிய பாடல்கள் | *212-223* | கோப்பெருஞ் சோழன் மக்கள் செயலால் மனம் வெறுத்து, வடக்கிருந்து, உயிர் நீத்ததைப் பாடிய பாடல்கள் |

இளஞ்சேரலையும் கோப்பெருஞ்சோழனையும் பாடும் பாடல்கள் அடுத்தடுத்துப் புறநானூற்றில் வைக்கப்பட்டுள்ள தால், இருவரும் ஏறத்தாழச் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்பது உறுதிப்படுகிறது. என்றாலும், ஏற்கனவே கூறியபடி இளஞ்சேரலுக்கு முந்தைய தலைமுறையில் கோப்பெருஞ் சோழனை வைக்கலாம்.

கோப்பெருஞ்சோழன் காலநிலை கி.மு. 225 - 200 என்று கண்டோம். இந்தக் கால நிலையில் வாழ்ந்த சென்னிவழிச் சோழன் இரண்டாம் கரிகால் வளவன் ஆவான். எனவே, கோப்பெருஞ்சோழனும், இரண்டாம் கரிகால் வளவனும் சமகாலத்தவர் ஆவர். கோப்பெருஞ்சோழன் உறையூரிலிருந்து ஆட்சிபுரிந்தபோது, . கரிகால் வளவன் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து ஆட்சி செய்திருக்க வேண்டும்.

கோப்பெருஞ்சோழன் இறந்தபிறகே இரண்டாம் கரிகால் வளவன் இறந்தான் என்பதைப் புறநானூற்றுப் பாடல் வரிசையால் அறிகிறோம்.

| புறம் | தலைவர்கள் இறந்தபோது பாடிய இரங்கல் பாடல்கள் |
|---|---|
| ***223*** | கோப்பெருஞ்சோழன் இறந்து நடுகல் ஆனது<br>↓ |
| ***224*** | சோழன் கரிகால் பெருவளத்தான் இறப்பு |

கோப்பெருஞ்சோழன் இறந்ததைப் பாடும் பாடல் (புறம். 223) முன்னாலும், கரிகால் வளவன் இறந்ததைப் பாடும் பாடல் (புறம். 224) அதற்குப் பின்பும் வைக்கப்பட்டுள்ளதால், கோப்பெருஞ்சோழன் இறந்து சிலகாலம் கழித்தே இரண்டாம் கரிகால் வளவன் இறந்தான் என்று அறிகிறோம். காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து ஆட்சிபுரிந்த கரிகால் வளவன், உறை யூருக்குத் தன் தலைநகரை மாற்றினான் என்பதைப், 'பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி' என்ற பட்டினப்பாலை (285) அடி தெரிவிக்கிறது. கோப்பெருஞ்சோழன் இறந்தபிறகு, கரிகால் வளவன் கிள்ளி வழியினர் ஆண்ட உறையூர்ப் பகுதியையும் கைப்பற்றி, உறையூருக்குத் தலைநகரை மாற்றி, சோழநாடு முழுவதையும் தான் ஒருவனே ஆட்சிபுரிந்தான் என்று கருதவேண்டும்.

கி.மு.250-225 என்ற காலநிலையில் உறையூரிலிருந்து ஆண்ட கிள்ளிவழிச் சோழன், வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியாவான். கி.மு.225-200 என்ற காலநிலையில் உறையூரிலிருந்து கோப்பெருஞ்சோழன் ஆண்டான். கோப்பெருஞ்சோழன், வேல்பல் தடக்கைப் பெருநற் கிள்ளியின் மகனாக இருக்க வேண்டும்.

கி.மு.250-225 — சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி



மகன்

கி.மு.225-200 — கோப்பெருஞ்சோழன்

இதுவரை நாம் கண்ட கிள்ளிவழிச் சோழரையும், அவர்களுக்குச் சமகாலத்தில் வாழ்ந்த சென்னிவழிச் சோழரையும் பின்வருமாறு காட்டலாம்.

| காலநிலை | கிள்ளிவழிச் சோழர் | சென்னிவழிச் சோழர் | ஆண்ட பகுதி |
|---|---|---|---|
| கி.மு. 325-300 | (தலைநகர்: உறையூர்) தித்தன் ↓ | ? (சிறுகோல் சென்னி) ↓ | ஆரேறு (நற்.265) |
| 300-275 | போர்வைக்கோப் பெருநற்கிள்ளி ↓ | பெரும்பூண் சென்னி ↓ | அழுந்தூர் தலைநகர் |
| 275-250 | முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி ↓ | கரிகால் வளவன்-I ↓ | அழுந்தூர் தலைநகர் |
| 250-225 | வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி ↓ | உருவப் பல்தேர் இளஞ்சேட்சென்னி ↓ | நெய்தலங் கானல் |
| 225-200 | கோப்பெருஞ்சோழன் | கரிகால் வளவன்-II | காவிரிப்பூம் பட்டினம் |

## நெடுங்கிள்ளி யார்?

| காலம் | கிள்ளிவழிச் சோழர் | சென்னிவழிச் சோழர் |
|---|---|---|
| கி.மு. 225-200 | கோப்பெருஞ்சோழன் (புறம்.223) | கரிகால் வளவன்-II (புறம்.224) |
| | ↓ மகன் | ↓ மகன் |
| 200-175 | காரியாற்றுத் துஞ்சிய × நெடுங்கிள்ளி (புறம்.44, 45, 47) | சேட்சென்னி நலங்கிள்ளி (புறம்.225) |

நெடுங்கிள்ளி கிள்ளிவழிச் சோழன், கோப்பெருஞ் சோழனின் மகன் என்பதற்கான குறிப்புகள் புறநானூற்றுப் பாடல்களில் காணப்படுகின்றன. கிள்ளிவழிச் சோழர்கள் பெருநற்கிள்ளி என்ற பட்டப் பெயரைத் தாங்கியவர்கள். போர்வைக் கோப்பெருநற்கிள்ளி (புறம்.80-86), முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி (புறம்.13), வேல் பல் தடக்கைப் பெருநற்கிள்ளி (புறம்.62, 63, 368) என்பவர்கள் கிள்ளிவழிச் சோழர்கள் ஆவர்.

கோப்பெருஞ் சோழனும் கிள்ளி வழிச் சோழன் என்பதைப் பெருங்கோக்கிள்ளி (புறம்.67), பெருஞ்சோழன் (பதிற். பதிகம் 9) என்ற பெயர்கள் சுட்டிக் காட்டுகின்றன. நெடுங்கிள்ளி (பெரிய கிள்ளி) என்ற பெயரும் பெருநற்கிள்ளி என்ற பெயரின் திரிபாகவே இருக்க வேண்டும்.

கிள்ளி என்ற சொல் நலங்கிள்ளியின் பெயரிலும் இருப்பதால், அவனும் கிள்ளி வழிச் சோழனாக இருக்கக் கூடாதோ என்று கேட்கலாம். 'சேட்சென்னி நலங்கிள்ளி' என்று இரண்டு பாடல்களில் (புறம். 27, 225) அவன் குறிப்பிடப்படுவதால், அவன் சென்னிவழிச் சோழன் என்பது தெளிவாகிறது.

கோப்பெருஞ் சோழன் இறந்தபின், அவன் ஆட்சி செய்த உறையூர்ப் பகுதியையும் கரிகால் வளவன் தன் ஆட்சியின் கீழ் கொண்டுவந்து, காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த தன் தலை நகரை உறையூருக்கு மாற்றிக் கொண்டான். கிள்ளிசென்னி வழியினர்·இணைப்பின் அடையாளமாகத் தன் மகனுக்கு நலங்கிள்ளி என்றும், தன் பேரனுக்குக் கிள்ளி வளவன் என்றும் பெயரிட்டான் என்று கருதலாம்.

நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி என்ற பெயர் ஒற்றுமையைக் கொண்டு, இருவரும் உடன்பிறந்தவர்கள்; கரிகால் வளவன் மக்கள் என்று சிலர் கூறுவது தவறாகும்.

மணிமேகலையில்,

"சிலைக்கயல் நெடுங்கொடி செருவேல் தடக்கை
ஆர்புனை தெரியல் இளங்கோன் தன்னால்

காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண்கிள்ளி!'' (மணி19:124-127)

('உன்மேல் படையெடுத்து வந்த சேர பாண்டியர்களின் வில் கொடியையும், மீன்கொடியையும் இளங்கோனால் காரியாற்றில் கைக்கொண்ட மாவண் கிள்ளியே!')

என்று வரும் பகுதியில், காரியாற்றில் நடந்த போர் ஒன்று குறிப்பிடப்படுகிறது. மாவண்கிள்ளி என்ற சோழன், தன் இளவரசனை அனுப்பி, சேர பாண்டியர்களைக் காரியாற்றில் தோற்கடிக்கச் செய்தான் என்று மணிமேகலை கூறுகிறது. மாவண் கிள்ளி நெடுமுடிக் கிள்ளி (மணி 24:29) என்றும், கிள்ளிவளவன் (மணி.25:14) என்றும், வடிவேல் கிள்ளி என்றும், வென்வேல் கிள்ளி என்றும் இந்நூலில் குறிப்பிடப்படுகிறான். நெடுமுடிக் கிள்ளி என்ற பெயரையும், காரியாறு என்ற இடத்தையும் ஓர் அறிஞர் தொடர்புபடுத்தி, மணிமேகலையில் குறிப்பிடப்படும் மாவண் கிள்ளியே காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்றும், சேர பாண்டியரை வெல்வதற்கு அவனால் அனுப்பப்பட்ட இளங்கோனே நலங்கிள்ளி என்றும் கூறி, இருவரும் உடன்பிறந்தவர்கள் என்றும் குறிப்பிடுகிறார். புறநானூற்றுப் பாடல்கள் தோன்றி, ஆறு நூற்றாண்டுகள் கழித்து மணிமேகலை எழுதப்பட்டது. மணிமேகலையில் வரும் நெடுமுடிக்கிள்ளி என்ற கற்பனைப் பாத்திரத்திற்கும், புறநானூற்றில் கோவூர்கிழார் என்ற புலவரால் நேர்முகமாகப் பாடப்பட்ட (புறம்.44, 45, 47) காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளிக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

எனவே, நலங்கிள்ளி சென்னி வழிச் சோழன் என்றும், நெடுங்கிள்ளி கிள்ளிவழிச் சோழன் என்றும் முடிவு செய்யலாம். இவ்விருவர் வாழ்ந்த காலநிலை கி.மு.200-175. இதற்கு முந்தைய தலைமுறையில் (கி.மு.225-200) கோப்பெருஞ்சோழன் வாழ்ந்துள்ளான். எனவே, நெடுங்கிள்ளியைக் கோப்பெருஞ்சோழன் மகன் என்று கொள்வது தவறாகாது. துறவற நெறியில் மனத்தைச் செலுத்தி, அரசாட்சியைச் சரிவரக் கவனிக்காத கோப்பெருஞ்சோழன் போக்கை எதிர்த்துக் கலகம் விளைத்த அவனுடைய இரு புதல்வர்களுள் (புறம்.213) நெடுங்கிள்ளி மூத்தவனாக இருக்க வேண்டும்.

கோப்பெருஞ் சோழன் இறந்தபிறகு, கரிகால் வளவன் உறையூர்ப் பகுதியைக் கைப்பற்றி, சோழநாடு முழுவதையும் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தான். கரிகால் வளவனுக்குப் பிறகு, அவன் மகனான நலங்கிள்ளி சோழநாடு முழுவதையும் ஆளலானான். இதைப் பொறுக்காத நெடுங்கிள்ளி, தன் முதாதையர் ஆண்ட உறையூர்ப் பகுதியைக் கைப்பற்ற முயன்றான். ஆவூரையும், உறையூரையும் கைப்பற்றினான். நலங்கிள்ளி இவ்வூர்களை முற்றுகையிட்டான். இருவரையும் சமாதானப்படுத்தக் கோவூர் கிழார் செய்த முயற்சி வெற்றி பெறவில்லை (புறம். 44, 45, 47).

நெடுங்கிள்ளியின் பக்கம் நியாயம் இருந்தது. உறையூர்ப் பகுதி அவன் முதாதையருடையது. அவன் மக்களிடம் தன் உரிமையை எடுத்துக்கூறி, தன்னை உறையூர்ப் பகுதியின் அரசனாக்குமாறு வேண்டினான். ஆனால், சோழநாட்டு மக்களோ, கோவூர் கிழார் போன்ற செல்வாக்கு மிகுந்த புலவர்களோ அவனுக்கு ஆதரவு தரவில்லை. தன் முதாதையர் இறந்தபின் உறையூர் அரசவுரிமை தனக்கே உரியது என்று நெடுங்கிள்ளி குடிமக்களிடம் இரப்பதை, நலங்கிள்ளி ஒரு பாடலில் எள்ளி நகையாடுகிறான்.[96]

"என்னோடு போர் செய்யாமல், என் காலில் விழுந்து பிச்சை கேட்டிருந்தால், அவன் முதாதையர் ஆண்ட உறையூர் ஆட்சியை மட்டுமல்லாமல், என் உயிரையும் கொடுத்திருப் பேனே!" என்று வேறொரு பாடலில் நலங்கிள்ளி கூறுகிறான்.[97]

சோழநாட்டு மக்கள் நெடுங்கிள்ளியின் பழைய உரிமையை மதிக்கத் தயாராக இல்லை. நலங்கிள்ளியையே அவர்கள் ஆதரிக்கிறார்கள். குயவன் களிமண்ணைச் சக்கரத்தில்

96. "மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்து எனப்
பால்தர வந்த பழவிறல் தாயம்
எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்பு" எனக்
குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச்
சிறியோன். - நலங்கிள்ளி பாட்டு (புறம். 75:1-5.)

97. மெல்ல வந்து என் நல்லடி பொருந்தி
'ஈ!' என இரக்குவராயின், சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்!
இன்னுயிர் ஆயினும் கொடுக்குவென் (புறம். 73:1-4)

வைத்து, தன் விருப்பப்படி அதை ஆட்டிவைத்து, தனக்கு வேண்டிய கலத்தைச் செய்துகொள்வதுபோல, நலங்கிள்ளி சோழநாட்டு மக்களைத் தன் விருப்பப்படி ஆட்டிவைத்து, தன் விருப்பப்படி நடக்கச் செய்வான் என்று கோவூர் கிழார் ஒரு பாடலில் குறிப்பிடுகிறார்.[98]

நலங்கிள்ளியை எதிர்த்து நெடுங்கிள்ளி வெற்றி பெறமுடியவில்லை. காரியாறு என்ற இடத்தில் நடந்த போரில் அவன் இறந்துபோனான். அதோடு சோழநாட்டின் உள்நாட்டுப் போர் முடிவடைந்தது. 'உள்நாட்டுப் போர் ஒருவழியாக ஓய்ந்துவிட்டது'[99] என்று நலங்கிள்ளியின் போர்வீரர் கூறுவதை ஒரு பாடலில் காண்கிறோம்.

நெடுங்கிள்ளியோடு, கிள்ளி மரபினர் வழி அற்றுப் போய்விட்டது.

## நலங்கிள்ளிக்குப் பிறகு ஆண்ட சோழர்கள்

**கிள்ளிவளவன்**

நலங்கிள்ளிக்குப் பிறகு கிள்ளிவளவன் சோழநாட்டை ஆட்சி செய்துள்ளான் என்பதைப் புறநானூற்றுப் பாடல்களால் அறிகிறோம்.

நலங்கிள்ளியைப் பாடிய கோவூர் கிழார், ஆலத்தூர் கிழார் என்ற இரு புலவர்கள் கிள்ளிவளவனையும் பாடியுள்ளனர். இவர்களுள் ஆலத்தூர் கிழார் நலங்கிள்ளி இறந்தபோது இரங்கல் பாடல் பாடியுள்ளார் (புறம்.225). கிள்ளி வளவன் கருவூரை முற்றுகையிட்டதையும் (புறம்.36), உறையூரில் வளமாக வாழ்ந்ததையும் (புறம் 69) இப்புலவரே பாடி யிருப்பதை நோக்கும்போது, நலங்கிள்ளியின் இறுதிக் காலத்திலும், கிள்ளிவளவன் இளைஞனாக இருந்தபோதும் இவர் வாழ்ந்தவர் என்று கருதலாம்.

---

98. தொல்நிலக் கிழமை சுட்டின், நல்மதி
வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த
பசுமண் குரூஉத்திரள்போல, அவன்
கொண்ட குடுமித்து இத்தண்பணை நாடே (புறம்.32:7-10)

99. உட்பகை ஒருதிறம் பட்டென (புறம். 68:11)




கிள்ளி வளவன் நலங்கிள்ளியின் மகனாக இருக்கலாம். அவன் பெயரே அவன் (நலங்)கிள்ளியின் மகனாகவும், (கரிகால்) வளவனின் பேரனாகவும் இருக்கலாம் என்று ஊகிக்க இடந்தருகிறது.

நலங்கிள்ளி தன்போன்று சோழர் குடியைச் சேர்ந்த நெடுங்கிள்ளியோடு போர் செய்து தன் அரச உரிமையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய நிலையில் இருந்தான். ஆனால் கிள்ளிவளவனோ உள்நாட்டுக் கலகம் எதுவுமின்றிச் சோழநாடு முழுவதையும் ஆட்சி செய்தான். நலங்கிள்ளி உட்பூசலிலிருந்து சோழநாட்டை மீட்டு அமைதியை நிலைநாட்டிய பிறகு, கிள்ளிவளவன் சோழநாட்டை ஆண்டிருக்க வேண்டும்.

**கிள்ளிவளவனின் மக்கள்**

கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையில் மூன்று சோழர்களைக் காண்கிறோம்.

1. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்
2. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி
3. சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி.

இவர்கள் மூவரும் கிள்ளி வளவன் மக்களாக இருக்கலாம். கிள்ளிவளவன் விட்டுச் சென்ற பரந்து விரிந்த சோழநாட்டை மூன்றாகப் பங்கு போட்டுக் கொண்டு இவர்கள் ஆட்சி புரிந்தார்கள் என்று தோன்றுகிறது.

| | | | |
|---|---|---|---|
| கி.மு.175-150 | | கிள்ளிவளவன் | |
| கி.மு.150-125 | பெருந்திரு மாவளவன் | இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி | நலங்கிள்ளி சேட்சென்னி |
| | ↓ | ↓ | |
| | உறையூர்ப் பகுதியை ஆண்டவன் | வெண்ணிப் பகுதியை ஆண்டவன் | |

கிள்ளிவளவன் தலைமுறையிலும் அதற்கு அடுத்த தலைமுறையிலும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி வாழ்ந்துள்ளான் என்பதைப் பின்வருமாறு நிறுவலாம்.

சோழன் கிள்ளிவளவன் படைகள் கூடலில் வந்து தங்கியபோது, பாண்டியன் நெடுஞ்செழியனின் படைத் தலைவனான பழையன் மாறன் அப் படையைத் தோற்கடித்தான் என்று நக்கீரர் ஒரு பாடலில் கூறுகிறார் (அகம். 346). எனவே, கிள்ளிவளவனும் நெடுஞ்செழியனும் ஒரு தலைமுறையில் வாழ்ந்தவர்கள் என்று அறிகிறோம். நெடுஞ்செழியன், சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரலை வென்று சிறையில் வைத்தான் என்று புறநானூற்றுப் பாடலின் அடிக்குறிப்பு கூறுகிறது. (புறம்.1:7) இம்மூவேந்தர்களும் கி.மு.175-150 என்ற காலநிலையில் வாழ்ந்தவர்கள்.

சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சோழநாட்டின் மீதும் படையெடுத்தான். அவனோடு போர் செய்தவன் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியாவான் (புறம்.125). கிள்ளிவளவன் வாழ்ந்த காலத்தில் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் வாழ்ந்ததை இது காட்டுகிறது. இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிள்ளிவளவன் மகன் என்றும், சேரனோடு போர் செய்வதற்குத் தன்மகனைக் கிள்ளிவளவன் அனுப்பி வைத்தான் என்றும் நாம் ஊகிக்கலாம்.

| கி.மு. 175 150 | சோழன் கிள்ளி வளவன் | × அ. 346 | பாண்டியன் நெடுஞ் செழியன் | × பு. 17 | சேரன் மாந்தரஞ் சேரல்இரும் பொறை | × பு. 125 | சோழன் இராசசூயம் வேட்டபெரு நற்கிள்ளி |
|---|---|---|---|---|---|---|---|

கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையிலும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி வாழ்ந்துள்ளான் என்பதைப் புறநானூற்றுப் பாடல்களில் சில நமக்குத் தெரிவிக்கின்றன.

ஆவூர் மூலங்கிழார் என்ற புலவர் கிள்ளிவளவனை இரண்டு பாடல்களில் பாடியுள்ளார் (புறம்.38,40). இப் புலவரின் மகன் பெருந்தலைச் சாத்தனார் என்று அகநானூறு 224ஆம் பாடலின் அடிக்குறிப்பு கூறுகிறது. எனவே, பெருந் தலைச் சாத்தனார் கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையில் கி.மு.150-125 என்ற காலநிலையில் வாழ்ந்ததை அறிகிறோம்.

பெருந்தலைச் சாத்தனாரும் (புறம்.164) பெருஞ் சித்திரனாரும் (புறம்.163) குமணன் என்ற வள்ளலைப் பாடியுள்ளதால், இருவரும் சமகாலத்தவர் ஆவர். இவர்களுள் பெருஞ்சித்திரனார் என்பவர், ஔவையாரின் தலைவனான அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியுள்ளார் (புறம்.208). இதனால் பெருந்தலைச் சாத்தனார், பெருஞ்சித்திரனார், ஔவையார் ஆகிய மூன்று புலவர்களும் கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையில் கி.மு.150-125 என்ற காலநிலையில் வாழ்ந்துள்ளனர்.



ஔவையார் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடியுள்ளதால் (புறம்.367) அவன் கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையிலும் வாழ்ந்ததை அறிகிறோம்.

கிள்ளிவளவன் தலைமுறையிலும், அவனுக்கு அடுத்த தலைமுறையிலும் வாழ்ந்த சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிள்ளிவளவனின் மகனாக இருக்க வேண்டும்.

சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி என்ற பெயர், கிள்ளிவளவன் தந்தையான நலங்கிள்ளியை நமக்கு நினைவுபடுத்துகிறது. நலங்கிள்ளியின் முழுப்பெயர் சேட்சென்னி நலங்கிள்ளி என்று இரு பாடல்களில் (புறம்.27, 225) வருவதை முன்பே கண்டோம். எனவே, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளிசேட் சென்னி கிள்ளிவளவன் தந்தையான சேட் சென்னி நலங்கிள்ளியின் பேரனாகவும், கிள்ளிவளவனின் மகனாகவும் இருக்க வேண்டும். "கிள்ளிவளவன் தந்தையான நலங்கிள்ளியே, இலவந்திகைப் பள்ளத் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னியாவான்" என்று சில அறிஞர்கள் கூறுவது தவறாகும். ஏனெனில், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி, இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி வாழ்ந்த தலைமுறையில் வாழ்ந்துள்ளதைப் புறநானூற்றுப் பாடல்கள் தெரிவிப்பதால், அவன் கிள்ளிவளவனின் மற்றொரு மகனென்று கொள்ள வேண்டும்.

சேட்சென்னி நலங்கிள்ளி



கிள்ளிவளவன்



இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய
நலங்கிள்ளி சேட்சென்னி

இனி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி வாழ்ந்த தலைமுறையில் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியும், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனும் வாழ்ந்தனர் என்பதை நிறுவுவோம்.




இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடிய (புறம். 367) ஔவையார் நாஞ்சில் வள்ளுவனைப் பாடியுள்ளார் (புறம். 140). நாஞ்சில் வள்ளுவனை மருதன் இளநாகனார் என்ற புலவரும் பாடியுள்ளார் (புறம்.138). இப்புலவர் நாஞ்சில் வள்ளுவனை மட்டுமன்றிப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்பவனையும் பாடியுள்ளார் (புறம்.55). இந்த இணைப்பால் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனும் சமகாலத்தில் வாழ்ந்தவர் ஆகிறார்கள்.

பாண்டியன் நன்மாறன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனின் பகைவன் என்று தெரிகிறது. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் என்ற புலவர் இவ்விருவரையும் அடுத்தடுத்த பாடல்களில் பாடியுள்ளார் (புறம்.57, 58). எனவே, பாண்டியன் நன்மாறனும், சோழன் பெருந்திருமாவளவனும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் என்பதை அறிகிறோம்.

கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் என்ற நீண்ட பெயரைக் கொண்ட ஒரு புலவர், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன் தனக்குப் பரிசு தாராமல் காலங் கடத்தியபோது அவனை இகழ்ந்து ஒரு பாடலைப் பாடி யுள்ளார் (புறம். 197). அதே புலவர் சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியைப் புகழ்ந்து ஒரு பாடலைப் பாடியிருக்கிறார் (புறம்.61).

இதுவரை கூறியதிலிருந்து, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், சோழன் பெருந்திருமாவளவனும், சோழன் நலங்கிள்ளி சேட் சென்னியும் ஒரே தலைமுறையில் வாழ்ந்த மூன்று சோழர்கள் என்பது தெளிவாகிறது. இவர்கள் கிள்ளி வளவனுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்துள்ளதால் அவனுடைய மக்களாக இருக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| *கி.மு.175-150* | | கிள்ளிவளவன் | |
| *கி.மு.150-125* | பெருந்திரு மாவளவன் | இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி | நலங்கிள்ளி சேட்சென்னி |

நலங்கிள்ளியும் கிள்ளிவளவனும் சோழநாட்டின் எல்லையை விரிவுபடுத்தியிருந்தார்கள். நெடுங்கிள்ளியால் ஏற்பட்ட உள்நாட்டுப் போர் முடிந்தபின், நலங்கிள்ளி சோழநாட்டின் எல்லையை விரிவாக்க முயற்சி செய்தான். பாண்டிய நாட்டில் ஏழு கோட்டைகளைக் கட்டிக்கொண்டு சுதந்திரமாக வாழ்ந்த ஒரு குறுநிலத் தலைவன் மேல் நலங்கிள்ளி படையெடுத்துச் சென்று அவன் நிலப்பகுதியைக் கைப்பற்றி, அவன் மதில் கதவுகளில் புலிச்சின்னத்தைப் பொறித்தான். இந்த வெற்றியைக் கோவூர் கிழார் பின்வருமாறு பாடுகிறார்:

> தென்னம் பொருப்பன் நல்நாட்டுள்ளும்,
> ஏழ்எயில் கதவம் எறிந்து, கைக்கொண்டு, நின்
> பேழ்வாய் உழுவை பொறிக்கும் ஆற்றலை! (புறம்.33:7-9)

கிள்ளிவளவனும் சோழநாட்டை விரிவுபடுத்தப் பல போர்களைச் செய்திருக்கிறான். சேரனின் கருவூரை முற்றுகையிட்டு அதை அழித்தான்.[100] கொங்கர்களை வென்றான்.[101] கோசர் படையை அழித்தான்.[102] மலையமானை அடக்கி,

---

*100.* வஞ்சி முற்றம் வயக்களன் ஆக
அஞ்சா மறவர் ஆட்போர்பு அழித்துக்
கொண்டனை பெரும குடபுலத்து அதரி *(புறம். 373:24-26)*

*101.* கொங்கு புறம் பெற்ற கொற்ற வேந்தே! *(புறம் 373:8)*

*102.* வளங் கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி *(அகம்.205:9-10)*

படைத்தலைவன் ஆக்கிக் கொண்டான்.[103] கூடல் மீதும் படையெடுத்தான்; ஆனால் பழையன் மாறனால் தோற்கடிக்கப்பட்டான்.[104]

இவ்வாறு நலங்கிள்ளியும் 'கிள்ளிவளவனும் விரிவு படுத்திய சோழநாட்டைக் கிள்ளிவளவன் மக்கள் மூவரும் பங்குபோட்டுக் கொண்டு ஆண்டார்கள் என்று கருத வேண்டியுள்ளது. ஏனெனில், ஒரே தலைமுறையில் கி.மு.150-125 என்ற காலநிலையில் - வாழ்ந்த இம்மூவரும் அரசர்களாகவே வாழ்ந்திருக்கிறார்கள். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடிய உலோச்சனார் என்ற புலவர்,

> நாடு என மொழிவோர், 'அவன்நாடு' என மொழிவோர்
> வேந்து என மொழிவோர், 'அவன் வேந்து' என மொழிவோர்
> (புறம்.377:21-22)

என்று பாடுகிறார். இவன் இராசசூய யாகம் செய்தபோது, அங்கு வந்திருந்த சேரமான் மாரி வெண்கோ, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி, இவன் ஆகிய மூவரையும் வாழ்த்தும் ஔவையார்

> முத்தீப்புரையக் காண்தக இருந்த
> கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்!
> (புறம்.367:13-14)

என்று கூறுகிறார். அதனால், இராசசூய யாகம் வேட்ட பெருநற் கிள்ளி, ஒரு வேந்தனாக ஒரு நாட்டை ஆள்பவனாக வாழ்ந்தான் என்பதில் ஐயமில்லை. மேலும் மற்ற வேந்தர்களைவிடத் தான் உயர்ந்த அரசன் என்பதை நிலைநாட்ட இராசசூய யாகம் செய்திருக்கிறான்.

---

103. புறம். 46, 125, 174. மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனின் தந்தையான தேர்வண் மலையனின் முள்ளூர்க் கோட்டையில் புலிப் பொறியைக் கிள்ளிவளவன் பொறித்ததை 'விடர்ப்புலி பொறித்த கோட்டை.... நும்முன்' (புறம்.174:17, 18) என்ற அடிகள் தெரிவிக்கின்றன.

104. *இழையணி யானைப் பழையன் மாறன்*
*மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்*
*வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த*
*கிள்ளிவளவன் நல்அமர் சாய்* (அகம். 346:19-22)

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனை எடுத்துக் கொள்வோம். இவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்,

நீயே, தண்புனல் காவிரிக் கிழவனை!...
அறம் துஞ்சு உறந்தைப் பொருநனை! (புறம்.58:1, 9)

என்று பாடுகிறார். இவன் பரிசு தராமல் காலங் கடத்தியபோது, ஒரு புலவர்[105] இவனை இகழ்ந்து பாடுகிறார்.

அந்தப் பாடலில்,

மண்கெழு தானை, ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே.
எம்மால் வியக்கப்படுமோரே....
சீறூர் மன்னர் ஆயினும், எம்வயின்
பாடு அறிந்து ஒழுகும் பண்பினோரே! (புறம்.197:7-9, 13-14)

என்று இவனைச் சாடுகிறார். "நீ பெரிய வேந்தன் என்பதற்காக என்போன்ற புலவர்கள் உன்னை மதிக்க மாட்டார்கள். குறுநில மன்னர் ஆனாலும் எங்கள் தகுதி அறிந்து நடப்பவர்களையே நாங்கள் மதிப்போம்" என்கிறார். எனவே, இவனும் உறையூரைத் தலைநகராகக் கொண்டு காவிரி பாயும் சோழநாட்டை ஆண்ட வேந்தன் என்று அறிகிறோம்.

பெருந்திருமா வளவனை இகழ்ந்துபாடிய புலவர், அவன் தம்பியான நலங்கிள்ளி சேட்சென்னியைப் புகழ்ந்து பின்வருமாறு பாடுகிறார்:

"உழத்தியர் வயலில் இறங்கி, களைகளாக முளைத்த நெய்தல், ஆம்பல் மலர்களைப் பறித்துக் கொண்டிருந்தார்கள். உழவர்கள் நெல்சோற்றை வாளை மீன்துண்டங்களோடு விலாப் புடைக்க உண்டு, நெற்கதிர்களை அடுக்கிக் கொண்டிருந்தார்கள். உழவரின் சிறுவர்களோ தேங்காயை உண்டு உண்டு தெவிட்டிப் போனதால், நெற்போரின் மேல் ஏறிக் கொண்டு குதித்துக் குதித்துப் பனம்பழத்தைப் பறிக்க முயன்றார்கள்.

நாள்தோறும் புது வருவாய் தரும் வளம் மிகுந்த நாட்டின் தலைவன் சென்னியாவான். அவனோடு பகைத்துப் போருக்கு

105. கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்

வருபவர் இருந்தால், அதன் விளைவு அவர்களுக்கே தெரியும். அவனோடு போர் செய்தவர் வாழ்ந்ததை நாங்கள் கண்டதில்லை. காலந் தாழ்க்காமல் அவன் அடியைப் பொருந்தியவர்கள் வருந்தக் கண்டது அதனினும் இல்லை'' (புறம்.*61*).

> வைகல் யாணர், நல்நாட்டுப் பொருநன்,
> எஃகு விளங்கு தடக்கை இயல்தேர்ச் சென்னி
>
> (புறம்.61:12-13)

என்று இப்பாடல் கூறுவதால், வயல் வளம் மிகுந்த சோழநாட்டின் ஒரு பகுதியை இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி ஆட்சி செய்துவந்தான் என்று அறிகிறோம்.

ஒரே தலைமுறையில் மூவர் சோழநாட்டை ஆண்டதைக் கண்டோம். பெருந்திருமாவளவன் 'உறந்தைப் பொருநன்' (புறம்.*58:9*) என்று அழைக்கப்படுவதால், உறையூரைத் தலைநகராகக் கொண்டு, இன்றைய திருச்சி மாவட்டத்துப் பகுதிகளை அவன் ஆண்டிருக்க வேண்டும். இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி சோழநாட்டின் கடற்கரைப் பகுதியை அதாவது இன்றைய தஞ்சாவூர் மாவட்டப் பகுதியை - ஆண்டான் என்பதைச் சங்கப் பாடல்கள் சில நமக்குத் தெரிவிக்கின்றன. இராசசூய யாகம் செய்தபோது இவனைப் பாடிய ஔவையார், வெண்ணிகிள்ளியினுடையது என்று வேறொரு பாடலில் கூறுகிறார்.[106] முந்தைய தலைமுறையில் அருவந்தை என்பவனுக்கு உரியதாய் இருந்த அம்பர்[107] என்ற ஊரை (இது அரிசில் ஆற்றங்கரையில் அமைந்த ஓர் ஊர்) கிள்ளி வென்று, அங்கு புதிதாக அலங்கரித்து உயர்த்தப்பட்ட தன் கொடியைப் பறக்கவிட்டான் என்று ஒரு பாடல் கூறுகிறது.[108]

---

*106. கைவண் கிள்ளி வெண்ணி (நற்.390:3.)*

*107. காவிரி அணையும் தாழ்நீர் படப்பை*
*நெல்விளை கழனி அம்பர் கிழவோன்*
*நல் அருவந்தை வாழியர் (புறம்.385:8-10)*
*என்ற பாடலை நெடுஞ்செழியன் - கிள்ளிவளவன் தலைமுறையில் வாழந்த கல்லாடனார் பாடியுள்ளார்.*

*108. ஏந்து கோட்டுயானை இசைவெம் கிள்ளி*
*வம்பு அணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த*
*அரிசில் (நற்.141:9-11)*

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடிய[109] உலோச்சனார் என்ற புலவர் எழுதிய 35 பாடல்கள் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மூன்று புறப்பாடல்கள் (புறம்.258, 274, 377). மற்ற 32 அகப் பாடல்கள்[110]. அகப்பாடல்கள் அனைத்தும் கடலையும் கடல் சூழ்ந்த பகுதியையும் பின்னணியாகக் கொண்ட நெய்தல் திணைப் பாடல்களாகும். இப்பாடல்கள் தஞ்சை மாவட்டக் கடற்கரைப் பகுதியில் காணப்படும் காட்சிகளைப் பலவாறு வருணிப்பதைக் காண்கிறோம். இப்புலவர் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஒருவனையே நேர்முகமாகப் பாடியிருப்ப தாகத் தோன்றுகிறது. (புறம்.377) எனவே, இவர் அவனது அவைப் புலவராக இருந்திருக்கலாம். இப்புலவர் பெரியன் என்பவனின் பொறையாற்றை இரண்டு அகப் பாடல்களில் குறிப்பிடுகிறார் (அகம்.100, நற்.131).[111] பொறையாற்றுக் கிழான் ஒருவனை, முந்தைய தலைமுறையில் வாழ்ந்த கல்லாடனார் என்ற புலவரும் பாடியுள்ளார் (புறம்.391). உலோச்சனாரால் பாடப்பட்ட பெரியன், கல்லாடனாரால் பாடப்பட்ட பொறையாற்றுக் கிழானின் மகனாக இருக்க வேண்டும். பெரியன், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் படைத்தலைவனாக இருந்திருக்கலாம் என்பதை அகம். 100இல் வரும் பின்வரும் பகுதியிலிருந்து ஊகிக்கலாம்:

> கொண்டல் இரவின் இருங்கடல் மடுத்த
> கொழுமீன் கொள்பவர் இருள்நீங்கு ஒண்சுடர்
> ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை,
> ஆடுஇயல் யானை அணிமுகத்து அசைத்த
> ஓடை ஒண்சுடர் ஒப்பத் தோன்றும்
> பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்,
> பரியுடை நல்தேர்ப் பெரியன், விரிஇணர்ப்
> புன்னை அம் கானல் புறந்தை முன்துறை

---

*109. புறம்.377*

*110. ஒரு பாடல் - நற்.64 - குறிஞ்சி என்று காட்டப்பட்டாலும், அதன் பொருள் இரங்கல் ஆதலால், அதுவும் நெய்தல் திணையே.*

*111. பரியுடை நல்தேர்ப் பெரியன், விரிஇணர்ப்*
*புன்னை அம்கானல் புறந்தை முன்துறை (அகம். 100:12-13)*
*நறவு மகிழ் இருக்கை நல்தேர்ப் பெரியன்*
*கள்கமழ் பொறையாறு (நற். 131:7-8)*

''பாடும் புலவர்களுக்குக் கைநிறையப் பரிசு தந்து அவர்களைத் தன்னிடம் வளைத்துப் போடும் வள்ளலான பெரியன், குதிரைகள் பூட்டிய தேர்களைக் கொண்டவன். பூங்கொத்துகள் விரிந்த புன்னை மரங்கள் நிறைந்த கடற்கரைச் சோலையையுடைய புறந்தை (பொறையாறு) பெரியனுடைய ஊராகும். பொறையாற்று மீனவர்கள், மேகம் சூழ்ந்த இரவில் மீன் பிடிக்கச் செல்லும்போது, தம் படகுகளில் இருளை நீக்கும் விளக்குகளை எடுத்துச் செல்வார்கள். அந்த விளக்குகளில் இருந்து வரும் சுடர், வேந்தன் பாசறையில் யானையின் முகத்தில் கட்டிய பட்டத்திலிருந்து வீசும் சுடருக்கு ஒப்பாகத் தோன்றும்'' என்பது இப்பாடல் பகுதியின் பொருளாகும். இங்குக் குறிப்பிடப்படும் வேந்தன் பாசறை உவமைக்காகக் கூறப்பட்டாலும், இது இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் பாசறையையும், அவனுடைய தேர்ப்படையை நடத்திச் சென்ற பெரியனையும் சிறப்பித்ததற்காக உலோச்சனார் கையாண்ட உத்தி என்று கொள்ள வேண்டும்.

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு தொடர்புடைய வெண்ணி, அம்பர், அரிசிலாறு, பெரியனின் பொறையாறு ஆகியவை தஞ்சாவூர் மாவட்டத்தில் இருப்பவை. ஆர். ஆளவந்தார் எழுதிய 'இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்' என்ற நூலிலிருந்து இதை அறிகிறோம்.[112]

**வெண்ணி:** சோழநாட்டில் நீடாமங்கலத்திற்கு மேற்கேயுள்ள ஓர் ஊர். கோயில் வெண்ணி (கோவிலுண்ணி) என இக்காலத்து வழங்கும். அவ்வூரையும் அதனைச் சூழ்ந்துள்ள இடங்களையும் பார்க்கையில், அந்த இடம் பண்டைக் காலத்தில் மிகப்பெரிய நகராக இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

'வெண்ணிக்கூற்றம் என்பது அடிக்கடி தஞ்சாவூர்க் கல்வெட்டுக்களில் சொல்லப்படுகின்றது.[113]

**அம்பர்:** சோழநாட்டில் தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கே சுமார் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. (ஆளவந்தார் நூல் பக்.62)

*112. தொகுதி ஒன்று (1984), உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு.*
*113. உ.வே. சாமிநாதையர் - புறநானூறு - ஆறாம் பதிப்பு (1963) - பக்கம் 158, 673.*

'தஞ்சாவூர்க் கல்வெட்டுகளில் அம்பர் என்ற ஊர் அடிக்கடி சொல்லப்படுகின்றது.[114]

**அரிசிலாறு:** இது சோழநாட்டிலுள்ள நதிகளுள் ஒன்றன் பெயர். இந்நதிக்கும் காவிரிக்கும் நடுவிலிருந்த நாட்டுக்கு உய்யக்கொண்டான் வளநாடு என்ற பெயர் வழங்கி வந்தது.[115]

'அரிசிலாறு காவிரியின் கிளையாற்றில் ஒன்று. அதனை அரசலாறு என்று இக்காலத்தார் வழங்குப.'[116]

**பொறையாறு:** 'தஞ்சை மாவட்டத்துக் கீழைக் கடற்கரையில் உள்ள ஒரு பட்டினம்.'[117]

'தரங்கம்பாடிக்கு அருகில் பொறையாறு என்னும் ஊர் உள்ளது' (ஆளவந்தார் நூல். பக்.162).

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு தொடர் புடைய ஊர்கள் அனைத்தும் தஞ்சாவூர் மாவட்டத்தில் இருப்பதால், அவன் வெண்ணியைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டின் கடற்கரைப் பகுதியை ஆண்டுவந்தான் என்பது தெளிவாகிறது.

சோழநாட்டில் திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்கள் போக எஞ்சியுள்ள இன்றைய புதுக்கோட்டை மாவட்டப் பகுதியை இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி ஆட்சி செய்திருக்கலாம்.

கிள்ளிவளவன் மக்கள் மூவருள் பெருந்திருமா வளவன் மூத்தவனாக இருக்க வேண்டும். எனவே, அவன் தன் முன்னோர் ஆண்ட உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆளும் உரிமை பெற்றான் என்று கருதலாம். அடுத்தவன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியாக இருக்க வேண்டும். மூன்றாமவன் நலங்கிள்ளி சேட்சென்னி என்று கருதலாம். பெருந்திருமாவளவனைப் பாடும் (புறம்.60) பாடலுக்குப் பிறகு நலங்கிள்ளி சேட்சென்னியைப் பாடும் (புறம்.61) பாடல் வைக்கப்பட்டுள்ளதால், இருவரும் முறையே அண்ணன் - தம்பி என்பதை அறிகிறோம்.

---

*114.* மேற்படி நூல் - பக்.605

*115.* மேற்படி நூல் - பக்.607

*116.* பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் நற்றிணை (1962) பக்.244.

*117.* மேற்படி நூல் - பக்.228

கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையில் சோழநாடு மூன்றாகத் துண்டிக்கப்பட்டதைக் கண்டோம். இன்னும் சில தலைமுறைகளில் சோழநாடு மேலும் சிதறுண்டு, சிதைந்து போயிற்று. களப்பிரர் சோழநாட்டைக் கைப்பற்றி, சோழர்களைத் தமிழ்நாட்டிலிருந்தே விரட்டி அடிக்க இது அடிகோலியது.

### சோழன் நல்லுருத்திரன்

கலித்தொகையில் முல்லைக்கலியை (கலித்.101-117) நல்லுருத்திரனார் என்ற புலவர் எழுதியதாகக் கூறப்படுகிறது. 'அருஞ்சோழன் நல்லுருத்திரன் முல்லை' என்று ஒரு வெண்பா கூறுவதால், முல்லைக்கலியைச் சோழர்குடியில் வந்த நல்லுருத்திரன் எழுதினார் என்று அறிஞர்கள் நம்புகிறார்கள். ஆனால், கலித்தொகை (முல்லைக்கலி உட்பட) பாண்டியனையும், பாண்டிய நாட்டையும் சிறப்பித்துக் கூறுவதைக் காண்கிறோம். கலித்தொகைப் பாடல்களின் நடையும், யாப்பும், சொல் உருவங்களும், அப்பாடல்களில் கூறப்படும் புராணக் கதைகளும், அந்நூல் அகநானூறு, புறநானூறு போன்ற சங்க நூல்களுக்குப் பிற்பட்டது என்பதைக் காட்டுகிறது. வையாபுரி பிள்ளை கலித்தொகையைப் பிற்சங்க நூல் என்று குறிப்பிடுகிறார். அவர் பதிப்பித்த சங்க இலக்கியத்தில் (பக்.664) சோழன் நல்லுருத்திரன் பாடியதாகப் புறநானூற்றில் ஒரு பாடலையே (புறம்.190) காட்டியிருக்கிறார். முல்லைக்கலிப் பாடல்கள் நல்லுருத்திரனார் என்ற வேறொரு புலவரின் பாடல்களாகக் காட்டப்பட்டுள்ளன. (பக்.812-837)

சோழன் நல்லுருத்திரன் மேல் பாடப்பட்ட பாடல் எதுவும் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்படவில்லை. ஆனால் அவன் பாடிய பாடல் ஒன்று (புறம்.190) புறநானூற்றில் உள்ளது. அந்தப் பாடலில், எலிபோல் சிறுமுயற்சியுடையவர் நட்பு கூடாது. புலிபோல் பெருமுயற்சியுடையவர் நட்பு வேண்டும் என்று நல்லுருத்திரன் கூறுகிறான். எலி பிறர் உழுது விளைவித்த கதிர்களைத் திருடித் தன் வளையில் சேமித்து வைக்கிறது. புலியோ தான் பெருமுயற்சி செய்து வேட்டையாடிக் கொன்ற விலங்குகளையே உண்கிறது. அவ்வாறு தன்னால் வேட்டையாடப்பட்ட விலங்கு தன் இடப்பக்கத்தில் விழுந்தால் புலி அதை உண்ணாதாம். வலப்பக்கத்தில் விழுந்த

விலங்கையே புலி உண்ணுமாம். இடப்பக்கத்தில் விழுந்த பன்றியை உண்ணாமல், ஒருநாள் முழுவதும் பசியைத் தாங்கிக்கொண்டு இருந்து, மறுநாள் யானையை வேட்டையாடி, அதை வலப்பக்கத்தில் வீழ்த்தி, அதை உண்டு புலி பசி தீர்ந்ததாகச் சோழன் நல்லுருத்திரன் பாடல் கூறுகிறது. (இக்கருத்து அகம்.29, நாலடியார்-300 ஆகியவற்றிலும் காணப்படுகிறது) புலி உடல் வலிமை மட்டுமன்றி, மனவலிமையும் கொண்டது. பசியால் இறக்க நேரிட்டாலும், இடப்பக்கம் விழுந்ததை உண்ணக்கூடாது என்ற கொள்கையிலிருந்து மாறாது. எனவே, புலிபோல வலிமையும் உயர்ந்த கொள்கையும் கொண்ட 'உரனுடையாளர்' நட்பு வேண்டும் என்று நல்லுருத்திரன் விரும்புகிறான்.

பாடல் கருத்து வருமாறு:

''பயிர் விளைந்த தருணம் பார்த்து, முற்றி வளைந்த கதிர்களைக் கவர்ந்து கொண்டு, தன் வளையில் நிரப்பி வைக்கும் எலிபோலச்சிறுமுயற்சியுடையவராகி, தம் செல்வத்தை இறுகப் பிடிக்கும், பரந்த உள்ளம் இல்லாதவரோடு பழகிய நட்பு இல்லாமல் போவதாக! அஞ்சாத காட்டுப் பன்றி, தன் இடப்பக்கத்தில் வீழ்ந்ததால், அன்று அவ்விடத்தில் அப்பன்றியை உண்ணாமல் மறுநாள் பெருமலையிலுள்ள தன் குகையிலிருந்து புறப்பட்டு வேட்டை மேல் சென்று, ஆண் யானையை வலப்பக்கத்தில் வீழ்த்தும் புலி பசித்திருந்தது போல மெலிவில்லாத உள்ளமுடைய வலியவரோடு நட்பு கொண்ட நாட்கள் உளவாகுக![118]

---

*118.* *விளைபதச் சீறிடம் நோக்கி, வளைகதிர்*
*வல்சி கொண்டு, அளைமல்க வைக்கும்*
*எலி முயன்றனையர் ஆகி, உள்ளதம்*
*வளன் வலியுறுக்கும் உளம் இலாளரொடு,*
*இயைந்த கேண்மை இல்லாகியரோ!*
*கடுங்கண் கேழல் இடம்பட வீழ்ந்தென,*
*அன்றுஅவண் உண்ணாதாகி, வழிநாள்*
*பெருமலை விடரகம் புலம்ப, வேட்டு எழுந்து,*
*இருங்களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்*
*புலி பசித்தன்ன மெலிவுஇல் உள்ளத்து*
*உரனுடையாளர் கேண்மையொடு*
*இயைந்த வைகல் உள ஆகியரோ! (புறம்.190)*

உருத்திரன் என்பது சிவனின் பெயர். சங்ககாலச் சோழர்களின் பெயர்கள் கிள்ளி, சென்னி, வளவன் என்றிருக்க, நல்லுருத்திரன் பெயர், கடவுள் பெயராக இருக்கிறது. இவன் சங்ககால இறுதியில் வாழ்ந்ததை இது காட்டுகிறது. பாண்டியர்களில் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியின் பெயரில், உக்கிரன் என்ற கடவுள் பெயர் வருவதைக் காண்கிறோம். பாண்டியன் உக்கிரப் பெருவழுதியின் காலம் கி.மு.125-100 என்று கண்டோம். சோழன் நல்லுருத்திரனும் இதே காலநிலையில் வாழ்ந்திருக்கலாம். இவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் மகனாக இருக்கலாம்.




சோழன் நல்லுருத்திரன் எழுதிய பாடலில் (புறம் 190 ல்) அவன் வரலாறு அடங்கியிருப்பதாகத் தோன்றுகிறது. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் தலைமுறையில் மூன்றாகத் துண்டிக்கப்பட்ட சோழநாடு, இவன் தலைமுறையில் மேலும் பலவாகச் சிதறுண்டிக்கலாம். அவ்வாறு சிதறுண்ட சோழநாட்டின் சின்னஞ்சிறு பகுதி ஒன்றைச் சோழன் நல்லுருத்திரன் ஆண்டிருக்கலாம். அதனால் மனநிறைவு பெறாமல், பொறுத்திருந்து விடாமுயற்சி செய்து பேரரசன் ஆகவேண்டும் என்று விரும்பினான் என்று கருதவேண்டியுள்ளது. தனக்குத் துணையாக நிற்கும் நல்ல நண்பர்களை நாடினான் என்பதை இவன் பாடல் தெரிவிக்கிறது.

**சோழன் செங்கணான்**

சோழன் செங்கணான், சேரமான் கணைக்கால் இரும்பொறையைச் சிறையில் வைத்தான் என்ற குறிப்பு, புறம்.74இன் கீழ் காணப்படுகிறது. இதைத்தவிர, சங்ககாலத்தில் வாழ்ந்த செங்கணானைப் பற்றி வேறொன்றும் அறியக்கூடவில்லை.

'களவழி நாற்பது' என்ற பிற்காலத்து நூலின் தலைவனாகக் கருதப்படும் செங்கணானுக்கும், சங்ககாலத்துச் செங்கணானுக்கும் எவ்விதத் தொடர்புமில்லை. களவழி நாற்பதின் தலைவன் தஞ்சை விசயாலயன் என்பது சிலர் கருத்தாகும்.[119]

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவபக்தன் செங்கணான், சங்ககாலச் செங்கணானின் வேறானவன். இவன் சிவனுக்கு 78 மாடக்கோயில்கள் கட்டினான்.[120] திருமாலுக்கு திருநறையூரில் கோவில் எழுப்பினான்.[121] பெரிய புராணத்தில் 63 நாயன்மார்களில் ஒருவனாகப் பாடப்படுகிறான்.[122]

சங்ககாலத்தில் வாழ்ந்த செங்கணான் - சேரமான் கணைக்கால் இரும்பொறை காலத்தவன். கணைக்கால் இரும்பொறையின் காலம் கி.மு. 100-75 என்று கொண்டால் செங்கணான் காலமும் அதுவேயாகும். செங்கணான், சோழன் நல்லுருத்திரன் மகனாக இருத்தல் கூடும்.

கி.மு. 125-100: சோழன் நல்லுருத்திரன்



கி.மு. 100-75 : சோழன் செங்கணான்.

---

119. பதினெண்கீழ்க்கணக்கு - எஸ். ராஜம்வெளியீடு (1957), பக்கம் 409.
120. பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங் கோயில் எழுபதினோடு எட்டும்
(அப்பர் தேவாரம் 6-71-5)
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க்கு அடியேன்
(சுந்தரர் திருத்தொண்டத்தொகை 11:3)
121. இருக்கு இலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் (திருமங்கை - பெரிய திருமொழி 6-6-8)
122. வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார்
தேவர் பிரான் திருத் தொண்டில் கோச்செங்கண் செம்பியர்
[கோன்.
(-கோச்சங்கண் சோழ நாயனார் புராணம் 16:4, 17:1)

சங்ககாலச் சோழர்களைப் பின்வருமாறு

அட்டவணை செய்யலாம்

| கி.மு. | கிள்ளிவழியினர் | சென்னிவழியினர் |
|---|---|---|
| 325-300 | தித்தன் ↓ | (சிறுகோல் சென்னி?) ↓ |
| 300-275 | சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி ↓ | பெரும்பூண் சென்னி ↓ |
| 275-250 | சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி ↓ | சோழன் கரிகால் பெருவளத்தான்-(1) ↓ |
| 250-225 | சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி ↓ | சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி ↓ |
| 225-200 | கோப்பெருஞ் சோழன் ↓ | சோழன் கரிகால் பெருவளத்தான் - (2) ↓ |
| 200-175 | நெடுங்கிள்ளி. (கிள்ளி வழியினர் மரபு அற்றுப் போய் விட்டது | சோழன் சேட்சென்னி நலங்கிள்ளி; மாவளத்தான் ↓ ? |
| 175-150 | | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் |
| 150-125 | சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவன் | சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி ↓; சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங் கிள்ளி சேட் சென்னி |
| 125-100 | | சோழன் நல்லுருத்திரன் ↓ |
| 100-75 | | சோழன் செங்கணான் |

# சேரர் காலநிலை

| கி.மு. | | |
|---|---|---|
| 300-275 | சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை | |
| 275-250 | சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை | சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் (எ) பெருஞ் சேரலாதன் |
| 250-225 | சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன்; சேரமான் பாலைபாடிய பெருங் கடுங்கோ; மருதம் பாடிய இளங் கடுங்கோ | சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்; பல்யானைச் செல்கெழு குட்டுவன் |
| 225-200 | ↓ சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை | களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்; சேரமான் கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் |
| 200-175 | ↓ சேரமான் குடக்கோச் சேரல் (இளஞ்சேரல்) இரும்பொறை | ↓ குட்டுவன் சேரல்; ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் |
| 175-150 | ↓ சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை | ↓ சேரமான் கோக்கோதை மார்பன் |
| 150-125 | ↓ சேரமான் மாரிவெண்கோ | ↓ சேரமான் குட்டுவன் கோதை |
| 125-100 | ↓ ? | ↓ சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை |
| 100-75 | ↓ சேரமான் கணைக்கால் இரும்பொறை | ? |
| 75-50 | ↓ ? | ? |
| 50-25 | ↓ சேரமான் வஞ்சன் | ? |

## பதிற்றுப்பத்துச் சேரர்கள்

சங்க இலக்கியத்தில் இருபத்திரண்டு சேரர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சேரமான் எந்தை (குறுந்.22ஆம் பாடல் ஆசிரியர்) சேரமான் இளங்குட்டுவன் (அகம். 153ஆம் பாடலைப் பாடியவர்) என்ற இருசேரர்களைப்பற்றிய வேறு குறிப்புகள் கிடைக்காததால், அவர்கள் காலநிலையை அறிய முடியவில்லை. எஞ்சிய இருபது சேரர்கள் பதிற்றுப் பத்திலும் புறநானூற்றிலும் காணப்படுகிறார்கள்.

பதிற்றுப்பத்துச் சேரர்களின் உறவு முறையை அந்நூலின் பதிகங்கள் தெரிவிக்கின்றன. பதிற்றுப் பத்தின் பதிகங்கள் பிற்காலத்தில் எழுதிச் சேர்க்கப்பட்டவை. என்றபோதிலும் அவற்றில் உண்மைச் செய்திகளே - சற்று உயர்வு நவிற்சியோடு கூறப்படுகின்றன. அதனால் கால நிலையைப் பதிகங்களின் உதவிகொண்டு கணிப்பது தவறாகாது.

பதிற்றுப் பத்திலுள்ளவை சங்கப்பாடல்களல்ல என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். அவ்வாறு கூறுவதற்குக் காரணம், பதிற்றுப்பத்துப் பாடல்களின் நடை மற்ற சங்கப் பாடல்களின் நடைக்குச் சிறிது மாறுபடுவதே யாகும். பதிற்றுப் பத்தில் காணப்படும் மனாலக்கலவை, தொறுத்தவயல், தவாஅ லியரோ, அரிநர் கொய்வாள்[123] போன்ற தொடர்களை மற்ற சங்கப் பாடல்களில் காண முடியாது. மேலும் பதிற்றுப் பத்துப் பாடல்களில் அடிக்கடி கூறப்படும்[124] ஆபரணத்திற்குப் பெயர் பெற்ற கொடுமணம் என்ற ஊரும், முத்துக்குப் பெயர் போன பந்தர் என்ற ஊரும், வேறு சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படவில்லை.

சங்க காலத்திற்குப் பிறகு சேரநாட்டுத் தமிழ் வேறுபடத் தொடங்கி, கி.பி.பத்தாம் நூற்றாண்டளவில் மலையாள மொழியாக மாறியது. பதிற்றுப் பத்துப் பாடல்கள் தொகுக்கப்பட்டு, அப்பாடல்களுக்குப் பதிகம் எழுதிச் சேர்க்கப்பட்ட காலத்தில்[125], பாடல்களின் பொருளை

123. முறையே இச்சொற்கள் குங்குமக் குழம்பு, ஆட்டுக் கடாவைக் கட்டிய வயல், கெடாமல் இருப்பாயாக, பயிர் அறுப்பவரது வாள் என்று பொருள் படும்.

124. பதிற். 51, 56, 67, 74

125. இது கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் நிகழ்ந்திருக்கலாம்

அக்காலத்துச் சேரநாட்டு மக்கள் எளிதில் புரிந்து கொள்வதற்காக, பாடல்களின் சில சொற்களும், தொடர்களும், நடையமைப்பும் தொகுப்பாளரால் மாற்றப்பட்டிருக்கலாம். சேரரின் தலைநகரான வஞ்சி, சங்ககாலத்திலேயே கருவூர் என்று வேறுபெயரால் வழங்கப்பட்டது போல, கொடுமணம், பந்தர் என்பவை சங்ககாலத்து ஊர்கள் பெற்ற புதுப் பெயர்களாக இருக்கலாம்.

பதிற்றுப்பத்துப் பாடல்களையும், அதன் பதிகங்களையும் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்வது அவசியமாகும்.

சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையின் மகன் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்றும், அவனுடைய மகன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையென்றும், அவனுடைய மகன் இளஞ்சேரல் இரும்பொறையென்றும் பதிற்றுப்பத்தின் பதிகங்களால் அறிகிறோம்.[126]




*126.* பதிற். பதிகம் 7,8,9.
அந்துவற்கு... பெருந்தேவி ஈன்றமகன்
செல்வக்கடுங்கோ வாழியாதன் (பதிற். பதி.7)
பொய்யில் செல்வக் கடுங்கோவுக்கு
வேள் ஆவிக் கோமான் பதுமன் தேவி ஈன்ற மகன்...
தகடூர் எறிந்து... பெருஞ்சேரல் இரும்பொறை (பதிற். பதி.8)
குட்டுவன் இரும்பொறைக்கு.. அந்துவஞ்செள்ளை...
ஈன்ற மகன் இளஞ்சேரல் இரும் பொறை (பதிற். பதி.9)

பதிகங்கள், சேரனின் தந்தை பெயரை மட்டுமல்லாமல் தாயின் பெயரையும் சொல்கின்றன. சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் தந்தை செல்வக் கடுங்கோ வாழியாதன் தாய் பதுமன் தேவி (பதுமன் என்பவனின் மகள்). மேற்கூறிய நான்கு சேரர்களை அந்துவன் வழியினர் என்போம்.

உதியஞ்சேரலின் மகன் இமைய வரம்பன் நெடுஞ் சேரலாதன் என்றும், அவன் தம்பி பல்யானைச் செல் கெழுகுட்டுவன் என்றும், நெடுஞ்சேரலாதனின் மக்கள் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகிய மூவர் என்றும், செங்குட்டுவனின் மகன் குட்டுவன் சேரலென்றும் பதிகங்கள் 2-6 ஆல் அறிகிறோம்.[127]




127. உதியஞ் சேரற்கு,
வெளியன் வேண்மாள் நல்லினி ஈன்ற மகன் ...
இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் *(பதிற். ப்தி. 2)*
இமைய வரம்பன் தம்பி
பல்யானைச் செல்கெழு குட்டுவன் *(பதிற். பதி. 3)*
ஆராத்திருவின் சேரலாதற்கு,
வேள் ஆவிக் கோமான் பதுமன் தேவி ஈன்றமகன் ..
களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் *(பதிற். பதி. 4)*
குடவர் கோமான் நெடுஞ்சேரலாதற்குச்
சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன் ..
கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன் *(பதிற். பதி.5)*
குடக்கோ நெடுஞ்சேரலாதற்கு, வே எள்
ஆவிக் கோமான் தேவி ஈன்ற மகன் ...
ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் *(பதிற். ப்தி. 6)*
(செங்குட்டுவன்) தன்மகன் குட்டுவன் சேரல் *(பதிற்.பதி. 5)*

இமையவரம்பனுக்கு இருமனைவியர் இருந்தனர். ஒருத்தி ஆவியர் குடியைச் சேர்ந்த பதுமனின் மகள். அவள் மூலமாகப் பிறந்தவர்கள் நார்முடிச் சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் ஆவர். மற்றொருத்தி, சோழன் மணக்கிள்ளியின் மகள். அவளுக்குப் பிறந்தவன் செங்குட்டுவன் (பதிற். பதி. 5).

செல்வக்கடுங்கோவின் மனைவியும் வேள் ஆவிக் கோமான் பதுமனின் மகள் என்று கூறப்படுகிறாள் (பதிற். பதி.8). நெடுஞ்சேரலாதனின் மனைவியும் வேள் ஆவிக் கோமான் பதுமனின் மகளே (பதிற். பதி.4). பதுமனின் இரண்டு புதல்விகளைச் செல்வக் கடுங்கோவாழியார்தனும் நெடுஞ் சேரலாதனும் மணந்தனர் என்று அறிகிறோம்.




இந்த இணைப்பால் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனும், இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனும், சகலர்கள் என்றும், சம காலத்தில் - ஒரே தலைமுறையில் - வாழ்ந்த இரு சேரர்கள் என்றும் தெரிகின்றன. முறையே இவ்விரு சேரர்களின் தந்தைமாரான அந்துவஞ்சேரலும், உதியஞ் சேரலும் இவர்களுக்கு முந்தைய தலைமுறையில் வாழ்ந் திருக்கவேண்டும். இருவரும் அண்ணன் - தம்பியாக இருக்கலாம். மேலும், செல்வக் கடுங்கோவின் மகனும், நெடுஞ்சேரலாதனின் புதல்வர்களும் இவர்களுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தார்கள் என்று கருதலாம். பதிற்றுப் பத்தில் காணப்படும் சேரர்களை அந்துவன் வழியினர், உதியன் வழியினர் என்று பிரித்து, நான்கு தலைமுறைகளில் வாழந்தவர்களாகக் காட்டலாம்.

| | அந்துவன் வழியினர் | | உதியன் வழியினர் | |
|---|---|---|---|---|
| I. | 1 | அந்துவஞ் சேரல் | 2. | உதியஞ் சேரல் |
| II. | 3 | சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் | 4 | இமையவரம்பன் நெடுஞ் சேரலாதன் |
| | | | 5 | இமையவரம்பன் தம்பி பல்யானைச் செல் கெழு குட்டுவன் |
| III. | 6 | சேரமான் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை | 7 | களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் |
| | | | 8 | கடல் பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன் |
| IV | 9 | சேரமான் இளஞ் சேரல் இரும்பொறை | 10 | ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் குட்டுவன் சேரல் |

நெடுஞ்சேரலாதன் மக்கள் மூவருள், ஆடுகோட்டுச் சேரலாதன் இளையவனாதலால், அவனைச் செங்குட்டு வனுக்கு அடுத்த தலைமுறையில் வைப்பது நல்லது.

செங்குட்டுவன் மகன் குட்டுவன் சேரலைப் பற்றி வேறெந்தக் குறிப்பும் நமக்குக் கிடைக்கவில்லையாதலால், அவனைப் பற்றி மேலும் ஆராய்சசி செய்வதற்கில்லை.

பதிற்றுப் பத்தில் வரும் பத்துச் சேரர்களில் களங்காய்க் கண்ணிநார்முடிச் சேரல், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகிய இருவரைத் தவிர மற்றையோர் புறநானூற்றிலும் பாடப் படுகிறார்கள்.

புறநானூற்றில், சேரமான் அந்துவஞ் சேரல் இரும் பொறையைக் குறிப்பிடும் (புறம். 13) பாடலை யடுத்து, சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் புகழும் (புறம். 14) பாடல் வைக்கப்பட்டுள்ளது. அதனால், அந்துவஞ்சேரலின் மகன் செல்வக்கடுங்கோ என்று பதிற்றுப்பத்தின் 7ஆம் பதிகம் கூறுவது சரி என்று தெரிகிறது.




பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பதிற்றுப் பத்தில் (21-30) பாடிய கோதமனார் என்ற புலவர் (இவரைப் பாலைக் கௌதமனார் என்று பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுகிறது) புறநானூற்றில் அவனை 'அறவோன் மகனே! மறவோர் செம்மால்!' (புறம். 366:6) என்று அழைக்கிறார். அதனால், பாடலின் அடிக்குறிப்பில் 'தரும புத்திரனைக் கோதமனார் பாடியது' என்ற குறிப்புக் காணப்படுகிறது.

புறம். 366இல் பாடப்பாடப்படுபவன் பல் யானைச் செல்கெழு குட்டுவன் என்று கொள்வது பொருத்தமாகும். புறம். 368இல் நெடுஞ்சேரலாதனும், புறம். 369இல் சேரமான் கடல் ஓட்டிய வேல் கெழுகுட்டுவனும் (செங்குட்டுவனும்) பாடப்படுகிறார்கள். பதிற்றுப்பத்தின் பதிகங்களால், பல்யானைச் செல் கெழு குட்டுவனின் அண்ணன் மகன் நெடுஞ்சேரலாதன் என்றும், நெடுஞ் சேரலாதனின் மகன் செங்குட்டுவன் என்றும், அறிகிறோம். புறநானூற்றின் பாடல் அமைப்பு, இதை உறுதி செய்கிறது.



## புறநானூற்றுச் சேரர்கள்

புறநானூற்றில் 17 சேரர்கள் பாடப்படுகிறார்கள். இவர்களுள் எட்டுப் பேர் பதிற்றுப்பத்தில் பாடப்படுவோர். எஞ்சிய 9 சேரர்களை இனிக் காண்போம்.

## சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப் பெருஞ்சேரல் இரும்பொறை

கருவூர் சேரர்களின் தலைநகரமாகும். சங்கப்பாடல்களில் (ஒரு பாடலைத்தவிர) இது வஞ்சி என்று அழைக்கப்படுகிறது. வஞ்சி நகரம் ஆன்பொருநை ஆற்றங்கரையில் அமைந் திருந்தது.[128] குடபுலத்தில் (மேற்குப் பகுதியில்) இருந்தது.[129] செல்வக்கடுங்கோ வாழியாதன், பாலை பாடிய பெருங் கடுங்கோ, இளஞ்சேரல் இரும்பொறை ஆகியோர் வஞ்சியி லிருந்து ஆட்சி செய்துள்ளார்கள்.[130] சேரரின் தலைநகரம் கருவூர் என்று கூறும் நக்கீரர், அது கோதையினுடையது என்றும், ஆன்பொருநை ஆற்றங்கரையில் அமைந்திருந்தது என்றும் கூறுகிறார்.[131] எனவே, வஞ்சியும் கருவூரும் ஒரே நகரம் என்பதை அறிகிறோம். சென்னையில் இருநூறு ஆண்டுகாலம் 'மவுண்ட்ரோடு' என்றழைக்கப்பட்ட நெடுஞ்சாலை, தற்காலத்தில் 'அண்ணாசாலை' என்று பெயர் மாற்றம் பெற்றபின், பழைய பெயர் மறைந்து போனதுபோல, கருவூர் என்று புதுப் பெயரைப் பெற்றபின், சேரர் தலைநகரம் வஞ்சி

---

128. தண் பொருநைப்புனல் பாயும்
விண் பொருபுகழ் விறல் வஞ்சி *(புறம். 11:5-6)*

129. வஞ்சி முற்றம் வயக்களனாக ...
கொண்டனை என்ப குடபுலத்து அதரி *(புறம். 373:24, 26)*

130. செல்வக்கடுங்கோ வாழியாதன் ....
புல்லிலை வஞ்சி *(புறம் 387:30, 33)*
விண் பொருபுகழ் விறல் வஞ்சிப்
பாடல் சான்றவிறல் வேந்தனும்மே *(புறம். 11:6-7)*
*(பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பாடியது)*
வஞ்சி மூதூர் தந்து பிறர்க்கு உதவி....
இன்னிசை முரசின் இளஞ்சேரல் இரும்பொறை *(பதிற். பதி. 9:9,17)*

131. கடும்பகட்டு யானை நெடுந்தேர்க்கோதை
திருமா வியன் நகர்க் கருவூர் முன்துறை
தெண்ணீர் உயர்கரைக் குவைஇய
தண் ஆன் பொருநை மணலினும் பலவே *(அகம். 93.:20-23)*

என்ற பெயரை இழந்து விட்டது. புறநானூற்றுப் பாடல்கள் சிலவற்றில் சோழன் கிள்ளிவளவன் வஞ்சி நகரை முற்றுகை யிட்டான் என்று கூறப்படுகிறது. ஆனால், அப்பாடல்களின் அடிக்குறிப்பில் 'கருவூர்' முற்றுகையிடப்பட்டது என்று தொகுப்பாளர் கூறுகிறார்.[132] எனவே கருவூர், வஞ்சியின் புதுப் பெயர் என்பதை அறிகிறோம். சங்கப் பாடல்களை ஆராய்ந்தால், பாண்டியர் தலைநகரான கூடல் நெடுஞ்செழியன் காலத்தில் (கி.மு. 175-150) மதுரை என்று புதுப்பெயர் பெற்றதையும், அதே காலநிலையில் சேரமான் கோக்கோதை மார்பன் என்பவன் வஞ்சிக்குக் கருவூர் என்று புதுப் பெயர் சூட்டினான் என்றும் தெரிய வருகிறது.

வஞ்சியும், கருவூரும் வெவ்வேறு ஊர்கள் என்றும், வஞ்சி மேற்கேயுள்ள சேரநாட்டின் தலைநகரம் என்றும், கருவூர் திருச்சிக்கு அருகிலுள்ள கரூர் என்றும், அது சேரரில் இரும் பொறை மரபினர் தலைநகரம் என்றும் சில அறிஞர்கள் கூறுகிறார்கள். கோஆதன் செல்லிரும் பொறையின் மகன் பெருங்கடுங்கோன் மகன் இளங்கடுங்கோ, இளவரசு பட்டம் ஏற்றபோது, செங்காயபன் என்ற சமணத் துறவிக்குக் கல்படுக்கை அமைத்துத் தந்தான் என்று குறிப்பிடும் புகலூர் கல்வெட்டு இதற்கு ஆதாரமாகக் காட்டப்படுகிறது. இக் கல் வெட்டில் குறிப்பிடப்படும் மூவர் முறையே செல்வக்கடுங்கோ வாழியாதன், அவன் மகன் பெருஞ்சேரல் இரும்பொறை, பேரன் இளஞ்சேரல் இரும்பொறை என்றும், இக் கல்வெட்டின் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்றும், இக்கல்வெட்டு கரூருக்கு அருகில் காணப்படுவதாலும், கரூர் சேரர்களின் உள் நாட்டுத்தலைநகரம் என்று தாலமி கூறுவதாலும், உரோம

---

*132. தண் ஆன் பொருநை வெண்மணல் சிதைய ...*
*கடிமரம் தடியும் ஓசை (புறம். 36:5,9)*
*அவன் (கிள்ளிவளவன்) கருவூர் முற்றியிருந்தானைப் பாடியது.*
*வாடாவஞ்சி வாட்டும்நின்*
*பீடு கெழு நோன்தாள் பாடுங்காலே*
*அவனை (கிள்ளி வளவனைப்) பாடியது (புறம். 39:17-18)*
*வஞ்சி முற்றம் வயக்களனாக*
*அஞ்சா மறவர் ஆட்போர்பு அழித்துக்*
*கொண்டனை என்ப குடபுலத்து அதரி - கிள்ளி வளவன்*
*கருவூர் எறிந்தானைப் பாடியது (புறம். 373:24-26)*

நாணயங்கள் கருரைச்சுற்றிக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாலும், இன்றைய கருரே சங்க காலச் சேரர் தலைநகரம் என்றும் ஐராவதம் மகாதேவன் கருத்துத் தெரிவித்துள்ளார்.[133]

அந்துவஞ்சேரல் இரும்பொறை மரபினரான செல்வக் கடுங்கோ வாழியாதன், பாலை பாடிய பெருங் கடுங்கோ, இளஞ்சேரல் இரும்பொறை ஆகியோர் வஞ்சியைத் தலநகராகக் கொண்டு ஆட்சி செய்துள்ளனர். (புறம். 387:11; பதிற். பதி. 9). புகலூர் கல்வெட்டுச் சேரர்கள், சங்ககாலத்தில் வாழ்ந்த சேரர்கள் அல்லர். சங்ககால இறுதியில் சேரநாடு சீரழிந்தபோது, சேர மரபினரில் சிலர் சோழநாட்டிற்குச் சென்று அரசுப்பணியில் ஈடுபட்டனர். சோழிய ஏனாதி திருக்குட்டுவன் என்பவன் சோழன் படைத்தலைவனாக இருந்ததைப் புறநானூற்றில் காண்கிறோம் (புறம். 394). இவ்வாறு சோழநாட்டில் சென்று தங்கிய சேரமரபினரில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களையே புகலூர்க்கல்வெட்டு குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும்.

சங்ககாலச் சேரர் தலைநகரம் ஒன்றே. அது சேரநாட்டில் உள்ள வஞ்சியே ஆகும். அதுவே, அகநானூறு 93ஆம் பாடலிலும், புறநானூற்றுத் தொகுப்பாளரின் அடிக்குறிப்பிலும் கருவூர் என்று கூறப்படுகிறது. திருச்சிக்கு அருகிலுள்ள கரூர், சங்ககாலச் சேரரின் தலைநகரம் அன்று.

சேரரின் ஆட்சியை முதன்முதலாக (கருவூர் என்று பிற்காலத்தில் வழங்கிய) வஞ்சியில் நிறுவியவன் கோப்பெருஞ் சேரல் இரும்பொறை யாவான். 'கருவூர் ஏறிய' என்ற அடை மொழியால் இதனை அறிகிறோம்.

சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையும், அவன் வழிவந்ததோரும் கருவூர் எனப்டும் வஞ்சியிலிருந்து ஆட்சிபுரிந்ததைச் சங்கப் பாடல்களால், அறிகிறோம். (புறம். 13, 387, 11) கோப்பெருஞ்சேரல், கருவூரில் சேர அரசை நிறுவியவனாதலால் அவன் அந்துவஞ்சேரலுக்கு முன்பு வாழ்ந்தவனாதல் வேண்டும். கோப்பெருஞ்சேரலுக்கும், அந்துவஞ்சேரலுக்கும் இடைப்பட்ட காலத்தில், கருவூரி லிருந்து வேறு எவரும் ஆட்சி செய்ததாகத் தெரியவில்லை.

133. சங்க கால்த் தமிழ் - பிராமி கல்வெட்டுகள் (ஆங்கிலம்) இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கு (1968) Vol. I. - பக். 94-95.

அதனால் கோப்பெருஞ்சேரலுக்கு அடுத்த தலைமுறையில் அந்துவஞ்சேரல் கருவூரிலிருந்து ஆட்சி செய்தான் என்று கருதலாம். அந்துவஞ்சேரல் கோப்பெருஞ்சேரலின் மகனாக இருக்கலாம்.

அந்துவஞ்சேரலும் உதியஞ்சேரலும் சமகாலத்தில் வாழ்ந்த இரு சேரர்கள் என்பதை மேலே கண்டோம். இருவரும் கோப்பெருஞ்சேரலின் புதல்வர்களாக இருக்கலாம். கருவூரிலிருந்து சேரநாட்டின் அரசியல் நிர்வாகத்தைக் கவனித்துவந்த அந்துவஞ்சேரல் இரும்பொறை, கோப்பெருஞ் சேரல் இரும்பொறையின் மூத்த மகனாகவும், குழுமூரில் இருந்து கொண்டு பெருஞ்சோறு கொடுத்து, சேரநாட்டின் தளபதியாகப் போர்களைச் செய்து சேரநாட்டை விரிவுபடுத்திய உதியஞ்சேரல், கோப்பெருஞ்சேரலின் இளைய மகனாகவும் இருக்கலாம்.




சேரநாட்டுத் தளபதிகளாக வாழ்ந்து, கடல் கொள்ளைக் காரர்களை விரட்டியடித்து, இமயமலை வரை சென்று மீண்டு, சேரநாட்டை வலிமையுள்ள நாடாக்கிய உதியஞ்சேரல் மரபினர், தொகுப்பாளரால் சிறந்தவர்களாகக் கருதப்பட்டதால், அவர்களைப் பற்றிய அதிகமான பாடல்கள் பதிற்றுப்பத்தின் முதலில் வைத்து தொகுக்கப்பட்டன. சேரமன்னர்களாக வஞ்சியிலிருந்து ஆட்சி புரிந்த அந்துவஞ்சேரல் மரபினர்மேல் பாடப்பட்ட பாடல்கள் பின்னால் வைக்கப்பட்டன.

### பாலை பாடிய பெருங்கடுங்கோ

சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ ஒரு கவிஞர் என்றே பலருக்குத் தெரியும். இவரது பாடல்கள் 33 சங்க

இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.[134] காதலர்ப் பிரிவைக் கூறும் பாலைத்திணைப் பாடல்களை அதிகமாகப் பாடிய இவரை, பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று அழைத்தார்கள்.

கலித்தொகையில் பாலைக்கலியை (கலித். 2-36) இவர் பாடியதாகக் கூறுவார்கள். பாலைக்கலியில் கூடலும் (கலித். 27, 30, 31, 35), வையை ஆறும் (27, 28, 30, 35) பலவாறு புகழப்படுவதைக் காண்கிறோம். ஆனால் சேரர் தலைநகரான வஞ்சியோ, அங்கு ஓடும் ஆன்பொருநை ஆறோ எங்கும் குறிப்பிடப்படவில்லை. மேலும், சங்க காலத்தில் வழங்காத புராணக்கதைகள், யாப்பு, உவமைகள், சொல் உருவங்கள் முதலியவற்றைக் கலித்தொகையில் காண்கிறோம். கொடுங்கோலர் ஆட்சியால் நாடும், நாட்டுமக்களும் துன்பப்படுவதைக் கலித்தொகையில் பல பாடல்கள் மீண்டும் மீண்டும் உவமையாக எடுத்தாள்கின்றன. எனவே, பாண்டிய நாடு களப்பிரர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பிற்காலத்தில் கலித்தொகை மதுரையில் எழுதப்பட்டது என்று கருதலாம்.

முற்சங்க காலத்தில் சேரநாட்டை ஆட்சிபுரிநத சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ, பாலைக்கலியை எழுதியிருக்கமுடியாது.

இவர் சேரநாட்டை வஞ்சியிலிருந்து ஆட்சி புரிந்ததை,

தண் பொருநைப் புனல்பாயும்
விண் பொரு புகழ் விறல் வஞ்சி
பாடல் சான்ற விறல் வேந்தனும்மே (புறம். 11:5 - 7)

என்ற பாடல் தெரிவிக்கிறது. இவரைப் பாடும் புறம். 11ஆம் பாடல், செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாடும் புறம். 8ஆம் பாடலுக்குப் பின் வைக்கப்பட்டுள்ளதால், செல்வக் கோவுக்குப் பிறகு இவர் சேரநாட்டை ஆண்டதை அறிகிறோம்.

செல்வக் கடுங்கோ வாழியாதனின் மகன் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை என்று பதிற்றுப்பத்தின் 8ஆம்

134. *அகம். 5, 99, 11, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379*
*நற். 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391,*
*குறுந். 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398*
*புறம். 282*

பதிகம் கூறுகிறது. அவ்வாறிருக்க, பாலை பாடிய பெருங்கடுங்கோ செல்வக்கடுங்கோவுக்குப் பிறகு சேரநாட்டை எப்படி ஆண்டிருக்க முடியும் என்று கேட்கப்படலாம். சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ, செல்வக் கடுங்கோவின் தம்பியாக இருக்கலாம். அந்துவஞ்சேரலுக்கு, பெருந்தேவி (மூத்த மனைவி)யிடம் பிறந்தவன் செல்வக் கடுங்கோ என்று கூறப்படுவதால் (பதிற். பதிகம். 7), அந்துவஞ் சேரலின் இளைய மனைவி மகன் பெருங்கடுங்கோ என்று கருதலாம். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை சிறுவனாக இருந்தபோதே, அவன் தந்தை செல்வக்கடுங்கோ இறந்து போனதால், சில ஆண்டுகள் பெருங்கடுங்கோ சேரநாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கலாம். பெருஞ்சேரல் இரும்பொறை ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் வயதை அடைந்தபின், பெருங்கடுங்கோ அவனிடம் சேரநாட்டின் ஆட்சியை ஒப்படைத்துவிட்டு, கவி பாடுவதில் ஈடுபட்டு, பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று புகழப் பட்டார் என்று தெரிகிறது.




### மருதம்பாடிய இளங்கடுங்கோ

காதலரின் ஊடலைக் கருத்தாகக் கொண்ட மருதத் திணைப்பாடல்களைப் பாடியதால் மருதம் பாடிய இளங்கடுங்கோ (அகம். 96, 176; நற். 50) என்று பெயர் பெற்ற சேரர் சேரநாட்டை ஆண்டதாகத் தெரியவில்லை என்றாலும், செல்வக்கடுங்கோ, (பாலை பாடிய) பெருங்கடுங்கோ, (மருதம் பாடிய) இளங்கடுங்கோ என்ற பெயர்களை நோக்கும்போது, இளங்கடுங்கோ, பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தம்பியாக இருப்பாரோ என்று எண்ணத் தோன்றுகிறது. சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை தன் மூன்று புதல்வர்களுக்குச் செல்வக்

கடுங்கோ, பெருங்கடுங்கோ, இளங்கடுங்கோ என்று பெயரிட்டான் போலும். மருதம் பாடிய இளங்கடுங்கோ, மற்ற இரு கடுங்கோக்கள் (செல்வக்கடுங்கோ, பெருங்கடுங்கோ என்பவர்கள்) வாழ்ந்த காலநிலையில் இருந்திருக்கலாம் என்பதற்கு அவர் எழுதிய அகம். 96 ஆம் பாடலில் ஒரு தடயம் கிடைக்கிறது. தம்காலத்துக்கு முன் நிகழ்ந்த பழைய வரலாற்றுச் செய்திகளைத் தம் பாடல்களில் பரணர் குறிப்பிட்டுச் செல்வதைக் காணலாம். பரணரைச் சங்ககாலத்தில் வாழ்ந்த வரலாற்று ஆசிரியர் என்று கூறலாம். பரணர் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனை நேர்முகமாகப் பாடியுள்ளதால் (புறம். 63). அவன் சகலனான செல்வக்கடுங்கோ வாழியாதன் காலத்தில் வாழ்ந்தவராகிறார். பரணரைப் போலவே பழங்காலத்து வரலாற்றுச் செய்தி ஒன்றை, மருதம் பாடிய இளங்கடுங்கோ அகம். 96 ஆம் பாடலில் குறிப்பிடுகிறார்.

சோழர் முடிமன்னர் ஆவதற்கு முன் - குடியரசுத் தலைவராய் வாழ்ந்தபோது -'சோழர்' என்ற பன்மைப் பெயரால், அழைக்கப்பட்டார்கள். சோழன் என்ற ஒருமைப்பெயர், மன்னராய் முடி சூடிய பின் வழக்கில் வந்த சொல்லாகும். சோழர் குடியரசுத்தலைவர்களாக இருந்தபோது சோழர் குடிமகளான அஃதை என்பவளை இரு பெருவேந்தர்கள் மணஞ்செய்து தருமாறு கேட்டார்கள். சோழர்கள் மறுத்து, பருவூர்ப் போர்க்களத்தில் இருபெருவேந்தர்களைத் தோற்கடித்தார்கள்:

அம்கலுழ் மாமை அஃதை தந்தை
அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்
வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை
இரு பெரு வேந்தரும் பொருது களத்து ஒழிய,
ஒளிறுவாள் நல் அமர்க் கடந்தஞான்றை (அகம். 96:12-16)

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே
(தொல். சொல். எச்சவியல், 65)

என்ற தொல்காப்பிய நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் உரை கூறும் போது

"அஃதை தந்தை,
அண்ணல்யானை அடுபோர்ச் சோழர்

என்புழி, சோழர் எல்லாரும் அஃதைக்குத் தந்தையாம் முறையராய் நிற்றலின், 'தந்தை' என்னும் ஒருமை 'சோழர்'

என்னும் பன்மையோடு.. சென்று கூடுதலின்... வழுவமைத்தார்'' என்று சொல்கிறார்.

சோழர் இருபெருவேந்தரை வென்றார்கள் என்று கூறுவதால், இது பழைய வரலாற்றுச் செய்தியாக இருக்க வேண்டும். சோழன் கரிகால் வளவன் இருபெரு வேந்தரை வென்றான் என்று கூறுவது, சோழர் மன்னர்களாகி முடிசூடியபின் ஏற்பட்ட வழக்காகும். பரணரைப் போல பழைய வரலாற்று நிகழ்ச்சியைத் தம் பாடலில் குறிப்பிடும் மருதம் பாடிய இளங்கடுங்கோ, பரணர் காலத்தை ஒட்டி வாழ்ந்தவராக இருக்க வேண்டும். பரணர் செல்வக்கடுங்கோ வாழியாதன் காலத்தில் வாழ்ந்தவராதலால் மருதம் பாடிய இளங்கடுங்கோவும் அக்காலத்தில் வாழ்ந்தவராகலாம். மருதம் பாடிய இளங்கடுங்கோ, செல்வக்கடுங்கோவின் மற்றொரு தம்பியாக இருக்கலாம்.




### சேரமான் யானைக் கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை

இரும்பொறை என்ற பெயர் இவன் அந்துவஞ்சேரல் இரும்பொறை வழியில் வந்தவன் என்பதைக் காட்டுகிறது. பதிற்றுப்பத்தின் 7,8,9ஆம் பத்துக்கள் முறையே அந்துவஞ் சேரல் மகன் செல்வக் கடுங்கோவையும், செல்வக் கடுங்கோவின் மகன் பெருஞ்சேரல் இரும்பொறையையும் பெருஞ்சேரல் மகன் இளஞ்சேரலையும் பாடுகின்றன. பத்தாம் பத்து, மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாடியிருக்க வேண்டும் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள் (பதிற்றுப்பத்தில் முதல் பத்தும், பத்தாம் பத்தும் இன்று நமக்குக் கிடைக்க வில்லை) இக் கருத்துப் பொருத்தம் என்றே தோன்றுகிறது.

பழையன் மாறன் என்பான் பாண்டியன் நெடுஞ்செழியன் படைத்தலைவன் ஆவான். இவனைப் 'பெரும்பெயர் மாறன்' என்று மதுரைக் காஞ்சி (772) கூறுகிறது. பழையன் மாறன் இளைஞனாக இருந்தபோது, இளஞ்சேரல் இரும்பொறையால் வெல்லப்பட்டான் என்று பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகம் கூறுகிறது.

வித்தையாண்ட இளம் பழையன் மாறனையும்
வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று ....
இன்னிசை முரசின் இளஞ்சேரல் இரும்பொறை

(பதிற். பதி. 9:7-8, 17)

பழையன் மாறன் நெடுஞ்செழியன் படைத்தலைவனாக வாழ்ந்தபோது, பல போர்களை வென்று, பெரும் பெயர் பெற்று, முதியவனாக இருந்தான் என்று கருதலாம். இளஞ்சேரல் இரும்பொறை தலைமுறையில் இளைஞனாக இருந்த பழையன் மாறன், அவனுக்கு அடுத்த தலை முறையில் பெரும் பெயர் மாறனாக - நெடுஞ்செழியன் படைத் தலைவனாக வாழ்ந்தான் என்று கொள்ள வேண்டும், பாண்டியன் நெடுஞ்செழியன் சேரன் இளஞ்சேரல் இரும் பொறைக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்திருந்ததை இது காட்டுகிறது.

நெடுஞ்செழியன், யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையை வென்று, அவனைச் சிறையில் வைத்தான். எனவே, நெடுஞ்செழியனும் மாந்தரஞ்சேரல் இரும்பொறை யும் சமகாலத்தில் வாழ்ந்தவர் ஆகிறார்கள். நெடுஞ்செழியன் இளஞ்சேரலுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்தவன்.

பதிற். 9 — இளஞ்சேரல் இரும்பொறை × (பதிற். பதி. 9) இளம் பழையன் மாறன்

இளஞ்சேரல் இரும்பொறை → மகன் → சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

இளம் பழையன் மாறன் → பெரும்பெயர் மாறனாகி நெடுஞ் செழியன் படைத் தலைவன் ஆனான் → பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

பதிற். 10.? (கிடைக்காத பத்து) — சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை × (புறம். 17) பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

ஆதலால், மாந்தரஞ்சேரலும் இளஞ்சேரலுக்கு அடுத்த தலைமுறையில் வாழ்ந்திருக்கவேண்டும். மாந்தரஞ்சேரல் இளஞ்சேரலின் மகனாக இருக்கலாம். பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பத்து இளஞ்சேரலைப் பாடியுள்ளதால், பத்தாம் பத்து அவன் மகனான மாந்தரஞ்சேரலைப் பாடியிருக்கலாம்.

பாண்டியன் நெடுஞ்செழியன் காலநிலை கி.மு. 175-150 என்று முன்பு பார்த்தோம். சேரமான் மாந்தரஞ்சேரல் காலநிலையும் அதுவேயாகும். இதன் அடிப்படையில், அந்துவஞ்சேரல் வழியினரின் காலநிலையைப் பின்வருமாறு கணிக்கலாம்.



## சேரமான் கோக் கோதை மார்பன்

சேரமான் கோக்கோதை மார்பன் முதலில் தொண்டியில் வசித்தான் என்பதைப் பொய்கையார் (இவர் பொய்கை ஆழ்வார் அல்லர்) எழுதிய பாடலால் அறிகிறோம்.

**கோதை மார்பின் கோதை யானும்**
**கோதையைப் புணர்ந்தோர் கோதையானும்**
**கள் நாறும்மே, கானல் அம் தொண்டி**
**அஃது எம் ஊரே; அவன் எம் இறைவன்** (புறம். 48: 1-4)

பிறகு இவன் வஞ்சிநகரி லிருந்து சேர நாட்டை ஆட்சி செய்தான் என்று தெரிகிறது.

**ஒளிறு வேல் கோதை ஓம்பிக் காக்கும்**
**வஞ்சி அன்ன என்வளநகர்.** (அகம். 263: 11-12)

இப் பாடலை எழுதியவர் கருவூர்க் கண்ணம்பாளனார். சங்கநூல்கள் தொகுக்கப்பட்ட காலத்தில் வஞ்சி, கருவூர் என்று பெயர்மாற்றம் பெற்றுவிட்டதால், வஞ்சிநகரில் வாழ்ந்த புலவர் கண்ணம்பாளனாரை, அகநானூறு தொகுப்பாளர் கருவூர்க் கண்ணம்பாளனார் என்று குறிப்பிட்டுள்ளார்.

வஞ்சி நகரம், கருவூர் என்று பெயர் மாற்றம் பெற்றது கோதை மார்பன் காலத்தில் என்று தெரிகிறது. கருவூர் என்ற பெயர் ஒரே ஒரு சங்கப்பாடலில்தான் வருகிறது. கருவூர் கோதையின் ஆட்சியில் இருந்தது என்றும், அது ஆன் பொருநை ஆற்றங்கரையில் அமைந்த ஊர் என்றும், நெடுஞ்செழியன் தலைமுறையில் வாழ்ந்த நக்கீரர் பாடுகிறார்:

**கடும் பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை**
**திருமா வியல்நகர்க் கருவூர் முன்துறை,**
**தெண்நீர் உயர்கரைக் குவைஇய**
**தண் ஆன் பொருநை மணலினும் பலவே.** (அகம். 93:20-23)

நக்கீரர் கோதை மார்பனை மற்றொரு பாடலிலும் குறிப்பிடுகிறார்.

நெடுஞ்செழியன் படைத்தலைவனான பழையன் மாறன், கூடல் போர்க்களத்தில் கிள்ளிவளவன் படைகளைச் சிதறடித்தபோது, கோதை மார்பன் பெருமகிழ்ச்சி அடைந்தான் என்று இப்பாடல் கூறுகிறது:

இழையணி யானைப் பழையன் மாறன்,
மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்,
வெள்ளத்தானையொடு வேறு புலத்து இறுத்த
கிள்ளி வளவன் நல் அமர் சா அய்,
கடும்பரிப் புரவியொடு களிறு பல வவ்வி,
ஏதில் மன்னர் ஊர்கொள,
கோதை மார்பன் உவகையின் பெரிதே.

(அகம். 346 : 19 - 25)

பாண்டியன் படைத்தலைவன் பழையன் மாறன் சோழன் கிள்ளி வளவனைக் கூடலில் தோற்கடித்தால், சேரன் கோக்கோதை மார்பன் ஏன் மகிழ வேண்டும்? கிள்ளி வளவன் கருவூரை முற்றுகை யிட்டதையும், அதை அழித்ததையும் புறநானூற்றுப் பாடல்கள் நான்கு (புறம். *36, 37, 39, 373*) தெரிவிக்கின்றன.

ஆன்பொருநை ஆற்றின் மணல் சிதையும்படி காவல் மரம் வெட்டப்படும் ஓசை, சேரனின் அரண்மனைக்குள் கேட்ட போதும், வெளியில் வந்து போரிடாமல் அரண்மனைக்குள்ளே ஒளிந்திருக்கும் சேர மன்னனோடு கிள்ளிவளவன் போர் செய்வது வெட்கப்பட வேண்டிய செயலாகும் என்று ஆலத்தூர் கிழார் என்ற புலவர் கிள்ளிவளவனைப் பாடுகிறார் (புகழ்கிறாரா? இகழ்கிறாரா?).

தண் ஆன் பொருநை வெண் மணல் சிதைய
கடிமரம் தடியும் ஓசை தன் ஊர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப,
ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு, ஈங்கு, நின்
சிலைத்தார் முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தகவு உடைத்தே

(புறம். 36:5, 9-13)

இப்பாட்டின் அடிக்குறிப்பு,

''அவன் (சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்) கருவூர் முற்றியிருந்தானை ஆலத்தூர் கிழார் பாடியது'' என்றிருக்கிறது.

''இமயமலையில் வில்லைப் பொறித்தவன் வழியில் வந்த வானவன் (சேரன்) தொலைய அவனது வாடாத வஞ்சி நகரை வாட்டும் உன் தாளைப் பாடும்போது, உன்னை என்ன

வென்று சொல்லிப் புகழ்வேன்?'' என்று கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்பசலையார் என்ற புலவர் பாடுகிறார்;

யாங்கனம் மொழிகோ யானே - ..
இமயம் சூட்டிய ஏம வில் பொறி,
மாண்வினை நெடுந்தேர், வானவன் தொலைய
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடுகெழு நோன்தாள் பாடுங்காலே? (புறம். 39: 13, 15-18)

வஞ்சி நகரைக் கிள்ளிவளவன் அழித்த போது, கோவூர் கிழார்,

"வஞ்சி நகரின் முற்றம்களமாக, அஞ்சாத வீரர்களின் பிணக்குவியலை அழித்து, குடநாட்டின் அதரியைக் கொண்டாய்'' என்று கூறுகிறார்:

வஞ்சி முற்றம் வயக்களனாக,
அஞ்சா மறவர் ஆட்போர்பு அழித்துக்
கொண்டனை என்ப குடபுலத்து அதரி (புறம். 373:24-26)

முற்றுகையிடப்பட்ட சேரனின் தலைநகரம் கருவூர் என்று புறம். 36, 373 பாடல்களின் அடிக்குறிப்பு கூற, வஞ்சி என்ற பெயரால் அந்நகரைப் புறம் 39, 373 பாடல்கள் கூறுகின்றன. அதனால் கருவூரும் வஞ்சியும் ஒன்றே என்று அறிகிறோம்,

தன் தலைநகரை முற்றுகையிட்டு அழித்த கிள்ளிவளவன், பழையன் மாறனால் தோற்கடிக்கப்பட்ட போது கோதை மார்பன் பெருமகிழ்ச்சியடைந்தது இயல்பே யாகும்.

முதலில் தொண்டியில் வாழ்ந்து, பிறகு வஞ்சியிலிருந்து சேரநாட்டை அரசாண்ட கோதைமார்பன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வழியில் வந்தவன் என்பதை,

இமயம் சூட்டிய ஏம வில்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் (புறம். 39:16-17)

என்ற அடிகளால் அறிகிறோம்.

கிள்ளிவளவனால் தோற்கடிக்கப்பட்டு, நக்கீரரால் பாடப்பட்ட கோதைமார்பன் நெடுஞ்செழியன் காலமான கி.மு.175-150 என்ற காலநிலையில் வாழ்ந்திருக்க வேண்டும்.

## கோதை 'மார்பனும் மாந்தரஞ்சேரலும்

சேரமான் கோக்கோதை மார்பனும், சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையும், பாண்டியன் நெடுஞ்செழியன் தலைமுறையில் வாழ்ந்த இரு சேரர்கள் ஆவர்.

| சேரமான் கோக் கோதை மார்பன் | × அகம் 346 | சோழன் குளமுற்றத் துத் துஞ்சிய கிள்ளிவளவன் | × அகம் 346 | பாண்டியன் நெடுஞ் செழியன் படைத் தலைவன் பழையன் மாறன் | × புறம் 17 | சேரமான் மாந்தரஞ் சேரல் இரும் பொறை |
|---|---|---|---|---|---|---|

ஒரே தலைமுறையில் - கி.மு. 175-150 என்ற கால நிலையில் - வாழ்ந்த இவ்விரு சேரர்களில் சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, அந்துவஞ்சேரல் இரும்பொறை வழியில் வந்ததை அவன்பெயரே எடுத்துக் காட்டுகிறது. சேரமான் கோக்கோதை மார்பன், உதியஞ்சேரல் வழியில் வந்தவனாக இருக்கலாம். இவனை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வழி வந்தவன் என்ற பொருள்படும்படி ஒரு பாடல் குறிப்பிடுவதால் (புறம். *39: 16-17*) இதை ஊகிக்கலாம்.

அந்துவஞ்சேரல் வழியினர் வஞ்சியிலிருந்து அரசாட்சி நடத்தியதைச் சங்கப்பாடல்கள் கூறுகின்றன. (புறம். *13, 387, 11*; பதிற். பதிகம். *9*) ஆனால், மாந்தரஞ்சேரல் இரும்பொறை தொண்டியில் வாழ்ந்ததாகப் பாடல்கள் கூறுகின்றன.

'தண் தொண்டியோர் அடுபொருந!' (புறம். *17:13*) என்று குறுங்கோழியூர்கிழார் என்ற புலவர் இவனை அழைக்கிறார்.

> கானல் அம் தொண்டிப் பொருநன், வெண்வேல்
> தெறல் அருந்தானைப் பொறையன் (நற். 18:4-5)

என்று பொய்கையார் நற்றிணையில் இவனைக் குறிப்பிடு கிறார். இவரே, கோதைமார்பன் தொண்டியில் வாழ்ந்தான் என்று வேறொரு பாடலில் குறிப்பிடுகிறார் (புறம். *48*). தொண்டியில் வாழ்ந்த மாந்தரஞ்சேரல் இரும் பொறையின்

மகனாகத் தொண்டியில் வாழ்ந்த கோதை மார்பன் இருக்கக் கூடுமோ என்று ஓர் ஐயம் எழலாம். இது பொருத்தமாகத் தோன்றவில்லை.

உதியன் வழியினர் சேரர் தலைநகரான வஞ்சியில் வாழாமல், வேறு நகரங்களில் வாழ்ந்ததைச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன. அந்துவஞ்சேரல் வஞ்சியிலிருந்து ஆட்சி செய்த போது[135], உதியஞ்சேரல் சேரநாட்டின் தளபதியாகச் சேரநாட்டை விரிவுபடுத்துவதிலும், படைவீரர்களுக்குப் பெருஞ்சோறு கொடுப்பதிலும் ஈடுபட்டுக் குழுமூரில் வாழ்ந்தான்.[136]

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் வஞ்சி நகரிலிருந்து ஆட்சி செய்தபோது[137], அவன் மனைவியின சகோதரியை மணந்த நெடுஞ்சேரலாதன்[138] மாந்தையில் வாழ்ந்ததைக் காண்கிறோம்.[139] அவ்வாறே சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை சேரநாட்டை ஆண்டு கொண்டிருந்த போது, உதியன் வழிவந்த செங்குட்டுவன் தந்தை நெடுஞ்சேரலாதனைப் போலவே, மாந்தையில் வாழ்ந்ததைக் காண்கிறோம். மாந்தை, மரந்தை என்றும் கூறப் படுகிறது.[140] செங்குட்டுவன் வஞ்சியிலிருந்து அரசாண்டான்

---

135. *புறம். 13, அடிக்குறிப்பு.*

136. *நாடுகண் அகற்றிய உதியஞ்சேரல்* *(அகம். 65:5)*
*நல் ஆன் பரப்பின் குழுமூர் ஆங்கண்*
*கொடைக் கடன் ஏன்ற கோடா நெஞ்சின்*
*உதியன்* *(அகம். 168: 5-7)*
*முதியர்ப்பேணிய, உதியஞ்சேரல்*
*பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை* *(அகம். 233: 8-9)*

137. *செல்வக் கடுங்கோ வாழியாதன்... வஞ்சி* *(புறம். 387: 30, 33)*

138. *பதிற். பதிகம் 4,6,7*

139. *வலம்படு முரசின் சேரலாதன்...*
*நல்நகர் மாந்தை முற்றத்து...*
*நிலந்தினத் துறந்த நிதியம்* *(அகம். 127:3,6,10)*

140. *குரங்கு உளைப்புரவிக் குட்டுவன்*
*மரந்தை* *(அகம். 376:17-18)*
*கடும்பகட்டுயானை நெடுந்தேர்க் குட்டுவன்...*
*கடல் கெழு மரந்தை* *(நற். 395:4,9)*
*குட்டுவன் மரந்தை* *(குறுந். 34:6.)*

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.[141] எல்லாச் சேரர்களையும் வஞ்சியின் சேரன் என்று அழைக்கும் மரபை இது காட்டுகிறது.[142]

அந்துவஞ்சேரல் மரபினர் சேரநாட்டின் மூத்தமன்னராக வஞ்சியிலிருந்து ஆட்சி நிர்வாகத்தை நடத்திவர, உதியஞ்சேரல் மரபினர் சேரநாட்டின் இளைய மன்னராக - சேரநாட்டின் தளபதிகளாக - சேரநாட்டுக்காக போர்களில் ஈடுபட்டதைக் காண்கிறோம். போரில் ஈடுபடாத போது உதியன் மரபினர் குழுமூர், மாந்தை (மரந்தை) நறவு[143]. தொண்டி[144] முதலிய ஊர்களில் வாழ்ந்து வந்தனர்.

உதியன் மரபில் வந்த சேரமான் கோக்கோதை மார்பனும் முதலில் தொண்டியில் வாழ்ந்துவந்தான். அப்போது, சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை வஞ்சியிலிருந்து சேரநாட்டை நிர்வாகம் செய்துவந்தான் என்று கருதலாம். வெறும் அரசியல் நிர்வாகம் செய்வதில் விருப்பமில்லாத மாந்தரஞ்சேரல் தொண்டிநகரில் வாழ்ந்த கோதையை வஞ்சிக்கு வரவழைத்து, அவனிடம் அரசியல் நிர்வாகத்தை ஒப்படைத்துவிட்டு, தொண்டிக்குச் சென்று வாழ்ந்து, அங்கிருந்து கொண்டு, பல போர்களில் ஈடுபட்டான் என்று கருதலாம்.

---

*141.* சிலப். *25:9, 148, 149, 173, 174; 27:149, 150, 256; 29:1, 30:173, 174.*

*142.* இமயத்தில் வில்சின்னம் பொறித்து மீண்ட நெடுஞ்சேரலாதனும், வஞ்சியின் சேரன் என்றே அழைக்கப்படுகிறான்:

ஆரியர் அலறத்தாக்கி, பேர் இசைத்
தொன்று முதிர் வடவரை வணங்குவில் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி (அகம். *396:16-19)*

*143.* ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் நறவு என்ற இடத்தில் வாழ்ந்தான்:
துவ்வா நறவின் சாய் இனத்தோனே - பதிற். *60:12*

*144.* அவன் தொண்டியிலும் வாழ்ந்தான் என்று பதிற். பதிகம். 6 கூறுகிறது.

# மாந்தரஞ்சேரல் - கோதைமார்பனுக்குப் பிறகு வாழ்ந்த சேரர்கள்

## சேரமான் மாரி வெண்கோ

மாந்தரஞ்சேரலுக்கும், கோதைமார்பனுக்கும் அடுத்த தலைமுறையில் சேரமான் மாரிவெண்கோ, சேரமான் குட்டுவன் கோதை என்ற இரு சேரர்களைக் காண்கிறோம்.

சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை தனது இறுதிநாளில், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு போர்செய்து தோற்று, பிறகு நோய்வாய்ப்பட்டு இறந்து போனான் (புறம். 125, 229). சேரமான் மாரிவெண்கோ அச்சோழனுடன் நட்பு உடன்படிக்கை செய்துகொண்டு, அவன் இராசசூய யாகம் செய்தபோது அவனுடன் இருந்தான் (புறம். 367). சேரமான் மாரி வெண்கோ, மாந்தரஞ்சேரலின் மகனாக இருக்கலாம். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் காலம் கி.மு.150-125 என்று கண்டோம். சேரமான் மாரி வெண் கோவின் காலமும் அதுவே.

கி.மு. 175-150
சேரமான் யானைக் கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும் பொறை
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்
×
சேரமான் கோக் கோதை மார்பன்
புறம். 125

கி.மு. 150-125
சேரமான் மாரிவெண் கோ
+
புறம் 367
சோழன் இராச சூயம் வேட்ட பெருநற் கிள்ளி
சேரமான் குட்டுவன் கோதை
ஔவையார்

**சேரமான் குட்டுவன் கோதை**

சேரமான் கோதை மார்பன் பெயரிலும், சேரமான் குட்டுவன் கோதை பெயரிலும் கோதை என்ற சொல் வருவதாலும், கோதை மார்பன் தலைமுறைக்கு அடுத்த தலைமுறையில் குட்டுவன் கோதை வாழ்ந்திருந்ததாலும், குட்டுவன் கோதை, கோதைமார்பனின் மகனாக இருக்கலாம் என்று கொள்ளவேண்டும். குட்டுவன் கோதையின் உருவமும் பெயரும் பொறித்த வெள்ளி நாணயம் ஒன்று பொள்ளாச்சிக்கு அருகில் கிடைத்துள்ளது.[145]

சோழன் கிள்ளிவளவனுக்கு அடுத்த தலைமுறையில் அவனுடைய மூன்று புதல்வர்கள் சோழநாட்டைப் பங்கு போட்டு ஆட்சி செய்ததை முன்னரே பார்த்தோம். இம்மூவருள் இருவரைச் சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி, சோழன் குராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவன் என்பவர்களைக் கோனாட்டு எறிச்சிலூர்




145. "The Hindu" dated 24-5-1994

மாடலன் மதுரைக் குமரனார் என்ற புலவர் பாடியுள்ளார். (புறம். 61, 197). இதே புலவர் சேரமான் குட்டுவன் கோதையையும் பாடியுள்ளார் (புறம். 54).

கிள்ளி வளவனின் புதல்வர்கள் வாழ்ந்த தலைமுறையில் குட்டுவன் கோதை வாழ்ந்ததை இதனால் அறிகிறோம். எனவே, கிள்ளிவளவன் தலைமுறையில் வாழ்ந்த கோதை மார்பனின் (அகம். 346) மகன், சேரமான் குட்டுவன் கோதை என்பதை அறிகிறோம்.




குதிரைமலைத் தலைவனான பிட்டங்கொற்றன் என்பவன் குட்டுவன் கோதையின் படைத்தலைவன் என்று சில பாடல்களால் அறிகிறோம் (புறம். 172; அகம். 77, 143). கோதை மார்பனைப் போலக் குட்டுவன் கோதையும் வஞ்சியிலிருந்து சேரநாட்டை ஆண்டிருக்கலாம்.

### சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

கோதை என்ற பெயரைக் கொண்ட இவன், சேரமான் குட்டுவன் கோதையின் மகனாக இருக்கலாம். இவன் எழுதிய இரண்டு பாடல்கள் (புறம். 245, அகம். 168) சங்க இலக்கியத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. ஒரு பாடல், தன் மனைவி இறந்தபோது பாடியதாகும். 'அவள் போய் விட்டாளே! நான் இன்னும் உயிர் வாழ்கிறேன்! என் உயிரைப் போக்கும் வலிமை என் சோகத்துக்கு இல்லையே! எனது சோகம் வெறும் நடிப்பா?' என்று இப் பாடலில் மாக்கோதை கதறி அழுவதைக் காணலாம். மற்றொரு பாடல், உதியன் குழூரில் சமையல் கூடம் வைத்து, எல்லோருக்கும் உணவு வழங்கியதைக் கூறுகிறது. (அகம். 168) இப்பாடலின் அடிக்குறிப்பில், இவன்

பெயர், கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் என்று காணப்படுகிறது.

இவன் காலநிலை கி.மு. 125-100 என்று கொள்ளலாம்.

| காலம் | மன்னன் |
|---|---|
| கி.மு. 175-150 | சேரமான் கோக் கோதை மார்பன் |
| கி.மு. 150-125 | சேரமான் குட்டுவன் கோதை |
| கி.மு. 125-100 | சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை |

**சேரமான் கணைக்கால் இரும்பொறை**

இரும்பொறை என்ற பெயர், இவன் அந்துவஞ்சேரல் இரும்பொறை வழியில் வந்தவன் என்பதைக் குறிப்பிடுகிறது. சங்ககாலச் சேரநாட்டை ஆண்ட கடைசிச் சேரன் இவனாக இருக்கலாம், புறநானூற்றில், மூவேந்தரைப்பாடும் பாடல் பகுதியில், வைக்கப்பட்டுள்ள கடைசிச் சேரன் இவனாக இருப்பதால் (புறம். 74) இவ்வாறு கொள்வதில் தவறு இல்லை. இவனுக்குப் பிறகு சேரநாடு சிதைந்து போக, சேர அரச குடும்பத்தினர் சோழநாட்டிலுள்ள கருவூர் (கரூர்) ப் பகுதியில் குடியேறினர் என்று தோன்றுகிறது. சேரநாட்டின் தலைநகரான கருவூரின் பெயரையே, தாம் குடியேறிய சோழநாட்டுப் பகுதிக்கு இவர்கள் வைத்திருக்கலாம்.

கணைக்கால் இரும்பொறையின் காலநிலையை அறிவதற்கு எவ்விதக் குறிப்பும் சங்கப் பாடல்களில் கிடைக்கவில்லை. இவன் சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறைக்கு மூன்று தலைமுறைகள் கழித்து வாழ்ந்தான் என்று கருதலாம். இது வெறும் ஊகமே. இந்த ஊகத்தின்படி கணைக்காலின் காலநிலை கி.மு. 100-75 ஆகும்.

**சேரமான் வஞ்சன்**

வஞ்சன் சேர மன்னனா, சேரரின் படைத்தலைவனா என்று தெரியவில்லை. அவன் வைநாடு என்று இன்று வழங்கும் பாயல் பகுதியை ஆண்டான் என்று ஒரு பாடல் (புறம். *398*) கூறுகிறது. இவன் காலநிலை கி.மு. 50-25 என்று கொள்வோம். இதுவும் வெறும் ஊகமே.

**சங்ககால மூவேந்தர் அட்டவணை**

| காலம் | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு. 350 - 325 | தெரியவில்லை | தெரியவில்லை | (1) ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் |
| 325 - 300 | தெரியவில்லை | (1) தித்தன் | (2) நெடியோன் |
| 300 - 275 | (1) சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும் பொறை | (2) சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி (என்ற) தித்தன் வெளியன் (என்ற) வெளியன் (3) பெரும் பூண் சென்னி | (3) பசும்பூண் பாண்டியன் |
| 275 - 250 | (2) சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை (3) சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் (என்ற) பெருஞ்சேரலாதன். | (4) சோழன் முடித்-தலைக்கோப் பெருநற்கிள்ளி (5) சோழன் கரிகால் பெருவளத்தான்-(I) | (4) பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி |

| காலம் | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு.<br>250-<br>225 | (4)<br>சேரமான்<br>செல்வக் கடுங்கோ<br>வாழியாதன்<br>(5)<br>சேரமான்<br>பாலை பாடிய<br>பெருங்கடுங்கோ<br>(6)<br>மருதம்பாடிய<br>இளங்கடுங்கோ<br>(7)<br>சேரமான் குடக்கோ<br>நெடுஞ்சேரலாதன்<br>(8)<br>பல்யானைச்<br>செல்கெழு குட்டுவன் | (6)<br>சோழன் உருவப்<br>பல்தேர் இளஞ்-<br>சேட் சென்னி<br>(என்ற)<br>நெய்தலங்கானல்<br>இளஞ்சேட்<br>சென்னி<br>(7)<br>சோழன்<br>வேல்பல்<br>தடக்கைப்<br>பெருநற்<br>கிள்ளி | (5)<br>பாண்டியன்<br>பல்யாகசாலை<br>முதுகுடுமிப்<br>பெருவழுதி<br>(6)<br>கடலுள்<br>மாய்ந்த<br>இளம் பெருவழுதி |
| கி.மு<br>225-<br>200 | (9)<br>சேரமான் தகடூர்<br>எறிந்த பெருஞ்சேரல்<br>இரும்பொறை<br>(10)<br>களங்காய்க்<br>கண்ணிநார்<br>முடிச்சேரல்<br>(11)<br>செங்குட்டுவன் | (8)<br>கோப் பெருஞ்<br>சோழன்<br>(9)<br>சோழன் கரிகால்<br>பெருவளத்தான் (II) | (7)<br>ஆரியப் -<br>படைகடந்த<br>நெடுஞ்செழியன் |
| கி.மு.<br>200-<br>175 | (12)<br>சேரமான்<br>குடக்கோ<br>இளஞ்சேரல்<br>இரும்பொறை<br>(13)<br>ஆடுகோட்பாட்டுச்<br>சேரலாதன்<br>(11-A)<br>குட்டுவன் சேரல் | (10)<br>காரியாற்றுத்<br>துஞ்சிய நெடுங்<br>கிள்ளி<br>(11)<br>சோழன்<br>சேட்சென்னி<br>நலங்கிள்ளி<br>(என்ற) நலங்கிள்ளி<br>(12)<br>மாவளத்தான் | (8)<br>பாண்டியன்<br>அறிவுடை<br>நம்பி |

| காலம் | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு.<br>175<br>150 | (14)<br>சேரமான்<br>யானைக் கண்சேய்<br>மாந்தரஞ்<br>சேரல் இரும்<br>பொறை<br>(15)<br>சேரமான்<br>கோக்கோதை<br>மார்பன் | (13)<br>சோழன்<br>குளமுற்றத்துத்<br>துஞ்சிய<br>கிள்ளிவளவன் | (9)<br>பாண்டியன்<br>தலையாலங்<br>கானத்துச்<br>செரு வென்ற<br>நெடுஞ்செழியன் |
| கி.மு.<br>150<br>125 | (16)<br>சேரமான்<br>மாரிவெண்கோ<br>(17)<br>சேரமான்<br>குட்டுவன்<br>கோதை | (14)<br>சோழன் இராச<br>சூயம் வேட்ட<br>பெருநற்கிள்ளி<br>(15)<br>சோழன் குராப்<br>பள்ளித் துஞ்சிய<br>பெருந்திருமா<br>வளவன்<br>(16)<br>சோழன் இலவந்தி<br>கைப்பள்ளித்<br>துஞ்சிய<br>நலங்கிள்ளி<br>சேட்சென்னி | (10)<br>பாண்டியன்<br>கூடகாரத்துத்<br>துஞ்சிய மாறன்<br>வழுதி<br>(11)<br>பாண்டியன்<br>இலவந்திகைப்<br>பள்ளித்துஞ்சிய<br>நன்மாறன் |
| கி.மு.<br>125-<br>100 | (18)<br>சேரமான்<br>கோட்டம்பலத்துத்<br>துஞ்சிய<br>மாக்கோதை | (17)<br>சோழன்<br>நல்லுருத்திரன் | (12)<br>பாண்டியன்<br>கானப்பேரெயில்<br>கடந்த உக்கிரப்<br>பெருவழுதி<br>(13)<br>பாண்டியன்<br>வெள்ளி அம்பலத்<br>துத் துஞ்சிய<br>பெருவழுதி |

| காலம் | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு. 100 75 | (19) சேரமான் கணைக்கால் இரும்பொறை | (18) சோழன் செங்கணான் | (14) பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் |
| கி.மு. 75-50 | தெரியவில்லை | தெரியவில்லை | தெரியவில்லை |
| கி.மு. 50-25 | (20) சேரமான் வஞ்சன் | | |

# மூவேந்தர் வரலாறு

சேர, சோழ, பாண்டியர் என்று வரிசைப்படுத்துவது இக்கால வழக்கு. சேரர்-பாண்டியர்-சோழர் என்ற வரிசையில் புறநானூற்றுப்பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. மூவேந்தர் காலநிலையைக் கணிக்கும்போது, சங்க காலப் பாண்டியரைப் பற்றிய கல்வெட்டுகளும்,நாணயங்களும் முதலில் கிடைத்த தால் பாண்டியர் காலநிலை முதலிலும் சோழர் காலநிலை அதையடுத்தும், சேரர் கால நிலை இறுதியிலும் இந்நூலில் ஆராயப்பட்டன. அவ்வரிசைப் படியே மூவேந்தர் வரலாற்றைக் காண்போம்.

## 1. பாண்டியர் வரலாறு

சங்கப்பாடல்களில் பதினான்கு பாண்டியர்கள் காணப் படுகிறார்கள். இவர்கள் கி.மு. 350 முதல் கி.மு. 75 வரை - ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள் - பாண்டிய் நாட்டை ஆண்டுள்ளனர். பாண்டிய நாடு என்பது ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தில் கொற்கையைச் சூழ்ந்த சிறு நிலப்பகுதியாகும். அவன்மகன் நெடியோன் கூடலின்மேல் படையெடுத்துச் சென்று, அங்கு ஆட்சி செய்து வந்த அகுதையைத் தோற்கடித்துக் கூடலில் பாண்டிய அரசை நிறுவினான். நெடியோன் மகன் பசும் பூண்பாண்டியன் பல நாடுகளை வென்று பாண்டிய அரசை விரிவாக்கினான். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தில் பாண்டியநாடு பரப்பிலும் செல்வாக்கிலும் வலிமையிலும் உச்சகட்டம் அடைந்தது. நெடுஞ்செழியனுக் குப் பிறகு, அவன் புதல்வர்களும் பேரர்களும் பாண்டிய நாட்டைப் பங்கு போட்டுக் கொண்டு ஆண்டு வந்தார்கள். அவர்கள் ஆட்சிக்குப் பிறகு பாண்டியநாடு களப்பிரர்க்கு அடங்கி வாழ்ந்தது. களப்பிரர் காலத்தில் சேர சோழர் தம் நாட்டை விட்டு ஓடி ஒளிந்து வாழ்ந்தார்கள். ஆனால் பாண்டியரோ, களப்பிரருக்கு அடங்கி, பாண்டிய நாட்டை ஆட்சி செய்தனர். கலித்தொகை, பரிபாடல் ஆகியவை களப்பிரர் காலத்தில் பாண்டிய நாட்டில் எழுதப்பட்ட நூல்களாகும்.

இனி, சங்ககாலப் பாண்டியர் வரலாற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

### ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் (கி.மு. 350-325):

சங்கப் பாடல்களில் வரும் பாண்டியர்களுள் காலத்தால் முந்தியவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் ஆவான். இவன் கூடலில் இருந்து ஆட்சி புரியவில்லை. கொற்கையைச் சூழ்ந்த சிறுநிலப் பகுதியையே ஆண்டு வந்தான். இவன் காலத்தில் கூடலை அகுதை என்ற பெருவேந்தன் ஆண்டு வந்தான். பொதியமலைப் பகுதியை ஆய் அரசனான திதியன் ஆண்டு வந்தான். பூதப் பாண்டியன். நாட்டைவிடப் பொதியில் நாடு மிகப் பெரிதாக இருந்தது. 'பொதியில் செல்வன் பொலந்தேர்த்திதியன்' (அகம். 25) என்று பூதப்பாண்டியனே ஆய் அரசனைப் பாராட்டினான். பூதப்பாண்டியன் நாட்டைச் சூழ்ந்து சின்னஞ்சிறு நாடுகள் பல இருந்தன. இவற்றை ஆண்ட குறுநிலத் தலைவர்களான மையல் கோமான், ஆந்தை, அந்துவஞ் சாத்தன், ஆதன் அழிசி, இயக்கன் என்பவர்கள் பூதப்பாண்டியனின் நண்பர்கள் (புறம். 71).

இராமநாதபுரம் மாவட்டத்தில் இருந்த ஒல்லையூர்க் கூற்றத்தை இவன் வென்றதால் இவனுக்கு 'ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்' என்ற பெயர் வழங்கியது. (ஒல்லையூர் புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள ஒலியமங்கலம் என்று உ.வே.சாமிநாதையர் கூறுகிறார். இக்கருத்து சரியன்று.)

பூதப்பாண்டியன் மனைவி, தனுசுகோடிப் பகுதியை ஆண்டுவந்த கவுரியர் குடியைச் சேர்ந்தவள் என்றும், பூதப்பாண்டியன், ஆட்சிபுரிந்த நிலப்பகுதி அவன் மனைவிக்கு அவள் தந்தையால் தரப்பட்டது என்றும், பாண்டியன் மனைவியான இவளைப் 'பண்டையா' என்று மெகஸ்தனிஸ் தமது இண்டிகாவில்[1] குறிப்பிட்டுள்ளார் என்றும் கருத இடமுண்டு. (திருமணங்கள் மூலம் கவுரியர் குடி பாண்டியர் குடியோடு இணைந்ததால், பிற்காலத்தில் கவுரியர் என்ற சொல் பாண்டியர் என்ற பொருளில் வழங்கலாயிற்று).

---

1. சந்திரகுப்த மௌரியன் அரசவையில் இருந்த கிரேக்க தூதர் மெகஸ்தனீஸ் தாம் இந்தியாவைப் பற்றிக் கேள்விப்பட்ட செய்திகளை இண்டிகாவில் எழுதியுள்ளார். நூலின் காலம் கி.மு. 304.

பூதப்பாண்டியன் காலத்தில் கூடலில் ஆட்சி புரிந்த அகுதை, கூடலுக்கு வடக்கே இருந்த எவ்விநாட்டின்மேல் படையெடுத்து முதலாம் எவ்வியைக் கொன்றான். (புறம். 233, 234). பிறகு பூதப்பாண்டியன் நாட்டின் மேலும் படை யெடுத்து அவனைக் கொன்றான். பூதப் பாண்டியன் மனைவி கணவனோடு உடன்கட்டை ஏறினாள் (புறம். 246, 247).

**நெடியோன் (கி.மு. 325 - 300):**

பூதப்பாண்டியன் இறந்த பிறகு அவன் மகனான நெடுந்தேர்ச் செழியன் கொற்கையின் தலைவனானான். இவன் தன் தந்தையைக் கொன்ற அகுதை ஆண்டுவந்த கூடல் மேல் படையெடுத்து அகுதையை விரட்டி அடித்து, பாண்டிய அரசைக் கூடலில் நிறுவினான் (அகம். 296) அகுதை வேறொரு வேந்தனைப் படைத்துணையாகச் சேர்த்துக் கொண்டு, இழந்த அரசை மீண்டும் பெறக் கூடலின் மேல் படையெடுத்தான். செழியன் இருவேந்தரையும் தோற்கடித்து (அகம். 116), பாண்டிய அரசைக் கூடலில் நிலை நிறுத்திக் கொண்டான். அதன் பிறகு நெடியோன் வேறுபல போர்களைச் செய்து, நாடுகள் பலவற்றைக் கைப்பற்றி, பாண்டிய நாட்டின் எல்லையை விரிவாக்கி, 'நிலந்தரு திருவின் நெடியோன்' என்ற பெயரைப் பெற்றான் (மதுரைக். 763).

நெடியோன் நீர்வளத்தைப் பெருக்கப் பஃறுளி என்ற சிற்றாற்றை அகலப்படுத்தி, ஓர் அணையைக் கட்டினான் (புறம். 9). பஃறுளி ஆறு பறளி ஆறு என்று இப்போது அழைக்கப்படுகிறது.[2]

நெடியோன் புலவர்களைக் கூட்டி அவர்கள் கவிதை களைப் படிக்கச் செய்து, புலவர்களை ஊக்குவித்தான் (மதுரைக். 761-3). பிற்காலத்தில் தமிழ்ச் சங்கம் மதுரையில் உருவாவதற்கு வித்திட்டவன் நெடியோனே என்று கூறலாம்.

பாண்டிய அரசைக் கூடலில் நிறுவிய நெடியோனைச் சுற்றி, காலப்போக்கில் கதைகள் பல எழுந்தன. இவன் காலத்தில்

2. பஃறுளி ஆற்றைப் பற்றிச் சிலப்பதிகாரம், அதன் உரை, தொல் காப்பிய உரைகள் கூறுவன யாவும் வெறும் கற்பனைக் கதைகள். அவ்வாறே நெடியோன் அவையில் தொல்காப்பியம் அரங்கேற்றப் பட்டது என்பதும் தவறான கருத்தாகும்.

பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது என்றும், தொல் காப்பியம் இவன் அவையில் அரங்கேற்றப்பட்டது[3] என்றும், இவனே கடலை வற்றச் செய்த வடிம்பலம்ப நின்ற பாண்டியன் என்றும் வழங்கும் கதைகள் சங்ககால நெடியோன் பெருமையை உயர்த்திக் காட்டுவதற்காக எழுந்தவை என்று கருதவேண்டும்.

**பசும்பூண் பாண்டியன் (கி.மு. 300-275):**

நெடியோனுக்குப் பிறகு கூடலை ஆண்டவன் அவன் மகனான பசும்பூண் பாண்டியன் ஆவான். இவன் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டின் எல்லையும் ஆதிக்கமும் விரிவடைந்தன. பசும்பூண் பாண்டியன் படைகள் பொதிய மலைப் பகுதிக்குள் புகுந்து அதன் தலைவனான அதிகனைச் சரண் அடையச் செய்தன. (அகம். 162). இதன் பிறகு, அதிகன் பசும்பூண் பாண்டியனின் படைத்தலைவனாகப் பணி யாற்றினான். பசும்பூண் பாண்டியன் ஏவலின்படி இவன் கொங்கர்களோடு வாகைப் போர்க்களத்தில் போர்செய்த போது, யானையோடு போர்க்களத்தில் வீழ்ந்து இறந்தான் (குறுந். 393).

கூடலின் வடக்கே நீடூரைத்தலை நகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்த இரண்டாம் எவ்வியும் பசும்பூண் பாண்டியன் மேம்பாட்டை ஒப்புக்கொண்டு, அவனோடு நட்பாக வாழ்ந்தான். ஒரு சமயம் நெடுமிடல் என்பவன் எவ்வியின் ஏவலைக் கேளாமல் எதிர்த்தபோது, பசும்பூண் பாண்டியன் நெடுமிடலைச் சாய்த்தான் (அகம். 266).

தன் படைத்தலைவனான அதிகனைக் கொன்ற கொங்கர்களை அடக்குவதற்கு, பசும்பூண் பாண்டியன் தானே படை நடத்திச் சென்றான். கொங்கர்களை விரட்டி அடித்து வெற்றிவிழா கொண்டாடினான் (அகம். 253).

இவ்வாறு பல போர்களைச் செய்து பாண்டிய அரசை விரிவாக்கிய பசும்பூண் பாண்டியன் அறநெறியைக்

3. மதுரைக் காஞ்சி இவனை 'நிலந்தரு திருவின் நெடியோன்' என்றழைப்பதையும், தொல்காப்பியப் பாயிரம் 'நிலந்தரு திருவின் பாண்டியன்' அவையில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டது என்று கூறுவதையும் இணைத்துப் பார்த்ததால் எழுந்த கதை இது.

கடைப்பிடித்து, செங்கோல் ஆட்சி செலுத்தி, அரசர்களிலே. சிறந்தவன் என்று பலரால் போற்றப்பட்டான் (அகம். 338).

**கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி (கி.மு. 275-250):**

பசும்பூண் பாண்டியனுக்குப் பிறகு கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்தான். இவனைப் பாராட்டும் இரும்பிடர்த்தலையார், இவனை

> **தவிரா ஈகைக் கவுரியர் மருக!**
> **செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ!** (புறம். 3:5-6)

என்று அழைக்கிறார். இவன் கவுரியர் குடியில் பிறந்தவன் என்றும், பாண்டியர் குடியில் பிறந்த பெண்ணை மணந்து பாண்டிய நாட்டின் ஆட்சியைப் பெற்றான் என்றும் கருதுவதற்கு மேற்காட்டிய பாடல் அடிகள் இடந்தருகின்றன.

இவனைப் பாடிய இரும்பிடர்த்தலையார் முதலாம் கரிகால் வளவன் அம்மான் என்றும், கரிகால் வளவன் சோழநாட்டின் அரச உரிமையைப் பெற உதவி புரிந்தார் என்றும் பழமொழிப் பாடல் ஒன்று கூறுகிறது.

**பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி (கி.மு. 250-225):**

கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதிக்குப்பிறகு முதுகுடுமிப் பெருவழுதி பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்தான். வடநாட்டுத் தருமசாஸ்திரங்களிலும் வேதங்களிலும் சொல்லியபடி யாகங்கள் பலவற்றைச் செய்து, யாக சாலைகளில் யூபங்களை (வேள்வித் தூண்களை) நட்டு, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பெயரைப் பெற்றான். தான் வேள்வி செய்ததோடு நில்லாமல் பிறர் வேள்வி செய்வதற்கும் இவன் ஊர்களைத் தானமாக வழங்கினான் என்று வேள்விக்குடி சாசனம் கூறுகிறது. போர்புரியும் போதும் இவன் வடநாட்டுத் தரும சாஸ்திரங்கள் கூறிய அற நெறியைப் பின்பற்றினான் என்று நெட்டிமையார் கூறுகிறார். 'பசு, பார்ப்பனர், பெண்கள், நோயாளிகள், இறந்து போய்த் தென்புலத்தில் வாழும் முதாதையர்க்குப் பிதிர்க் கடன் செய்ய வேண்டிய புதல்வர்களைப் பெறாதவர்கள் - ஆகிய நீங்கள் பாதுகாவலான இடத்தில் சென்று சேருங்கள். நாங்கள் எங்கள்

அம்பை விரைவில் செலுத்தப்போகிறோம்' என்று எச்சரிக்கை செய்தபின்னரே, முது குடுமி போரைத் தொடங்குவானாம்:

ஆவும், ஆன் இயல் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணியுடையீரும், பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறா அதீரும்,
எம் அம்பு கடிவிடுதும், நும் அரண் சேர்மின்' என
அறத்து ஆறு நுவலும் பூட்கை. (புறம். 9:1-6)

இந்து சமயத்தைத் தழுவி, யாகங்கள் செய்த முதல் தமிழ் மன்னன் முதுகுடுமி என்று கருதலாம். (இவனை யடுத்து, இரண்டாம் கரிகால் வளவனும், சேரமன்னர் சிலரும் யாகங்கள் செய்துள்ளனர்.)

'பெருவழுதி' என்ற பெயர் பொறித்த நாணயங்களை, முதுகுடுமி அசுவமேத யாகம் செய்தபோது வெளியிட்டிருக் கலாம் என்று தோன்றுகிறது. இந்த நாணயங்களின் காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டு என்று கருதப்படுவதால், முதுகுடுமியின் காலநிலையை உறுதிப் படுத்திக்கொள்ள இவை உறுதுணையாகின்றன.

**கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி (கி.மு. 250-225):**

அசுவமேத யாகம் செய்த முதுகுடுமியின் மகன், யாகங்களை வெறுத்து, பௌத்த சமயத்தைத் தழுவி, கடல்கடந்து பௌத்த மதப்பிரசாரம் செய்யச் சென்றார் என்று தோன்றுகிறது.

முது குடுமிப் பெரு வழுதி பாண்டிய நாட்டை ஆண்ட கால நிலையில் (கி.மு.250-225இல்), அசோகரின் மகளான சங்கமித்திரை பாண்டிய நாட்டில் பொதியமலைப் பகுதியில் போதி தர்மத்தைப் பிரசாரம் செய்து வந்தாள். பொதிய மலையில் உள்ள சங்கமித்திரை மேடு இதற்குச் சான்றாகும்.

முதுகுடுமியின் மகனான இளம் பெருவழுதி, சங்கமித் திரையின் போதனையால் கவரப்பட்டுப் பௌத்த மதத்தைத் தழுவினார் என்று கருதலாம்.

உயிர்ப் பலி கொடுத்து அசுவமேத யாகம் முதலிய பல வேள்விகளைச் செய்தும், படைபலத்தால் பல ஊர்களையும்

உயிர்களையும் அழித்தும் ஆட்சி புரிந்து வந்த முதுகுடுமியின் போக்கை விரும்பாத இளம் பெருவழுதி, இளவரசுப் பதவியைத் துறந்து பௌத்தரானார்; சங்கமித்ரையோடு சேர்ந்து புத்த தர்மத்தைப் போதிக்க இலங்கைக்குப் புறப்பட்டார்; செல்லும் வழியில் கடல் விபத்தில் இறந்து போனார் என்று நாம் கொள்ள வேண்டியுள்ளது.[4]




### ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் (கி.மு். 225-200):

இளம் பெருவழுதி பௌத்த துறவியான பிறகு, பாண்டிய நாட்டை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆட்சி புரிந்தான். கி.மு. 225 - அளவில் ஆந்திர சாதவாகனர் (ஆரியர்) தமிழ்நாட்டின் மேல் படை யெடுத்தனர்.

4. புறம். *182*ஆம் பாடலில் வரும் 'இந்திரர்' என்ற ஒரு சொல்லை மையமாக வைத்து, இளம்பெருவழுதியையும் சங்கமித்திரையையும் இணைத்து, ஒரு குறுநாவல் போல் அமைந்துள்ள இப்பகுதியை வரலாறு என்று கூற முடியுமா என்று சிலர் கேட்கலாம். வேறு உறுதியான ஆதாரம் கிடைக்கும் வரை இந்த 'வரலாறு' கால இடைவெளியை நிரப்ப உதவும்.

ஆரியர் படை பல பகுதிகளாகப் பிரிந்து தமிழ்நாட்டின் பல பகுதிகளில் புகுந்து தாக்கியது ஒரு பகுதி, சோழநாட்டில் புகுந்து நல்லடி என்பவன் ஆண்டுவந்த வல்லத்தைத் தாக்கியது. சோழர் மழைபோல அம்பை எய்து ஆரியர்படையை உடைத்தனர் (அகம். 356, 336). ஆரியருக்குத் துணையாக வந்த வடுகரைச் சோழன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி முறியடித்தான் (அகம். 375, புறம். 378).

சேரநாட்டுக்குள் புகுந்த ஆரியர் படையை எதிர்த்துச் சேரமான் நெடுஞ்சேரலாதனும், அவன் மகன் செங்குட்டுவனும் யானைப் படை நடத்திச் சென்று, ஆரியப்படையின் முன்னேற்றத்தைத் தடுத்தனர் (அகம், 396; சிலப்பதிகாரம் 25: 156-159). ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆரியப் படையைச் சின்னாபின்னமாக்கித் தோற்கடித்தான். அதனால் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று அழைக்கப் பட்டான் (புறம். 183).

மும்முனைகளிலும் தோற்றுப்போன ஆரியர் படைகள் ஒன்றுகூடி மலையமானின் முள்ளூரைத் தாக்கியது. மலையமான் தன் வேற்படையால் ஆரியரை ஓட ஓட விரட்டினான் (நற். 170). தமிழகத்தை எளிதில் வெல்லலாம் என்று வந்த ஆரியர் படை பெருந்தோல்வியுற்றுத் திரும்பியது.

மூவேந்தர்களும் மலையமானும் முனைந்து ஆரியரை விரட்டிய போதும், நெடுஞ்செழியன் சிறப்பாகப் போர் செய்து ஆரியர் படையைச் சிதைத்ததால், ஆரியப்படைகடந்தவன் என்ற சிறப்புப் பெயர் அவனுக்கு நிலைத்துவிட்டது.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கல்வியின் சிறப்பை ஒரு பாடலில் கூறுகிறான். சங்ககாலத் தமிழகத்தில் நால்வருணப் பாகுபாடு இல்லை. ஆனால் ஆரியரிடையே இந்தப் பாகுபாடு கடுமையாக இருந்தது. இருந்த போதிலும், கீழ் வருணத்தான் ஒருவன் கல்வியில் சிறந்தவனானால், மேல்வருணத்தானும் அவனை நாடிச் செல்வான் என்று ஆரியரிடையே தான் கண்டதை ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் கூறுகிறான்:

வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்,
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்,
மேற்பால் ஒருவனும் அவன் கண் படுமே. (புறம். 183: 8-10)

**அறிவுடை நம்பி (கி.மு.200-175):**

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்குப் பிறகு அறிவுடை நம்பி பாண்டிய நாட்டை ஆட்சி செய்தான். பிசிராந்தையார் இவனிடம் சென்று, "அறிவுடை வேந்தன் நெறி அறிந்து வரி வசூலிக்க வேண்டும்" என்று ஒரு பாடலில் (புறம். 184) கூறுகிறார். வேறொரு பாடலில், தன் வேந்தன் முறையல்லாதவற்றைச் செய்யமாட்டான்; மக்களைப் பாதுகாப்பான் என்று கூறுகிறார் (புறம். 191). பிசிராந்தையார் பாடலில் (புறம். 184) வரும் 'அறிவுடை வேந்தன்' என்ற தொடரால் இவன் அறிவுடை நம்பி என்று அழைக்கப்பட்டான் என்றும், இவனது பெயர் செழியன் என்றோ, வழுதி என்றோ இருந்திருக்க வேண்டும் என்றும் கொள்ளலாம்.

அறிவுடை நம்பி எழுதிய நான்கு பாடல்களைச் சங்க இலக்கியத்தில் காணலாம். அவற்றுள் மூன்று காதல் பாடல்களாகும் (அகம். 28; குறுந். 230; நற். 30). ஒன்று (புறம். 188) மழலைக் குழந்தையின் விளையாட்டை அழகாகச் சித்திரிக்கிறது. இந்தக் குழந்தைதான் தலையாலங்கானத்தில் ஏழு பேரைத் தோற்கடித்த நெடுஞ்செழியன் ஆகும்.

**தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (கி.மு.175-150)**

சங்ககாலப் பாண்டியர்களில் தலைசிறந்தவன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆவான். இவன் அறிவுடை நம்பிக்குப் பிறகு பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்தான்.

இளம் வயதில் ஆட்சிக்கு வந்த நெடுஞ்செழியனை எளிதில் வென்று பாண்டிய நாட்டையும் அதன் செல்வத்தையும் பங்கு போட்டுக்கொள்ளத் திட்டமிட்டுச் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் என்ற எழுவர் கூடிப் பாண்டிய நாட்டின் மேல் படையெடுத்தனர் (அகம்.36). நெடுஞ் செழியன் இளைஞனாக இருந்தாலும் எதிரிகளை விரட்டி அடிப்பேன் என்று வீரசபதம் செய்தான் (புறம்.72). பகைவர்களைப் பாண்டிய நாட்டிலிருந்து ஓடச் செய்ததுமல்லாமல், சோழநாட்டிலுள்ள தலையாலங்கானம்

வரை துரத்திச் சென்று, தன்னை எதிர்த்துவந்த எழுவரையும் முறியடித்தான் (புறம்.19, 23, 76, 78; அகம். 175, நற்.387). ஆலங்கானப் போரில் 'முதுவெள்ளிலை' என்னும் ஊரினர் அவனுக்கு உதவி செய்தார்கள் (மதுரைக்.119-127). தலையாலங்கானத்துப் போரில் நெடுஞ்செழியனோடு போர் செய்த சோழன் நலங்கிள்ளி போர்க்களத்தில் இறந்து போனான் (புறம். 225). சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சிறைப்பட்டான் (புறம். 17). எஞ்சிய குறுநிலத் தலைவர் ஐவர் நெடுஞ்செழியனுக்கு அடங்கி வாழ்ந்தார்கள் (மதுரைக்.775-778).

ஆலங்கானப்போரே நெடுஞ்செழியனின் முதல் போர். அதுவே அவன் செய்த பெரிய போருமாகும். அதன்பிறகு ஆய்குடியினர் ஆண்டுவந்த பொதியமலை அவன் வசமாகியது (மதுரைக்.40-42). எவ்வியின் மிழலைக் கூற்றமும், வேளிரின் முத்தூறும், சாலியூர் என்ற துறைமுகப்பட்டினமும் நெடுஞ் செழியனால் கைப்பற்றப்பட்டன (புறம்.24, மதுரைக்.81-88).

சேரநாட்டிலிருந்த முசிறியை நெடுஞ்செழியன் முற்றுகையிட்டான். அங்கிருந்த முருகன் சிலையைக் கைப்பற்றி, திருப்பரங்குன்றத்துக்குக் கொண்டுவந்து, நிலைநிறுத்தி வழிபாடு செய்தான். (அகம்.57, 149)

போர் செய்வதில் மட்டுமன்றி ஆட்சி நிர்வாகத்திலும் நெடுஞ்செழியன் வல்லவனாக இருந்தான். இக்காலத்தில் அரசின் மூன்று அங்கங்களாக அமைச்சரவை, சட்டப் பேரவை, நீதிமன்றம் ஆகியவை அமைந்திருப்பதுபோல, நெடுஞ்செழியன் காலத்தில் காவிதிமாக்கள் (அமைச்சர்), நாற்பெருங்குழு, அறங்கூறு அவையம் (நீதிமன்றம்) என்ற அமைப்புகள் நாட்டை நிர்வாகம் செய்ய அரசனுக்குத் துணை புரிந்தன. நாட்டுமக்களின் பாதுகாவலுக்காக நகர்க் காவல் படையும், வழிக்காவல் படையும் இருந்தன. மதுரை மாநகர் மக்கள் திருடர் பயமின்றி நன்றாக உறங்க, சிறந்த காவல் படை ஒன்று மதுரை மாநகரில் இயங்கி வந்தது (மதுரைக். 489-499; 507-510; 331-314; 635-653). வணிகர் குழுக்களும், தொழிலாளர் குழுக்களும் நாட்டின் பொருளாதாரத்தை வளர்த்தன (மதுரைக்.500-506, 511-522). மாங்குடி மருதனாரைத் தலைவராகக் கொண்ட புலவர் குழு தமிழை

வளர்த்தது (புறம்.72). நெடுஞ்செழியன் நாடெங்கும் நீர்நிலைகளைத் தோற்றுவித்து நாட்டை வளம் பெறச் செய்தான் (புறம்.18, நற். 340).

நெடுஞ்செழியன் 'கூடல்' என்று வழங்கிய தலைநகரின் பெயரை 'மதுரை' என்று மாற்றினான்.

சேரர்களில் செங்குட்டுவனைப் போலவும், சோழர்களில் கரிகால் வளவனைப் போலவும், சங்ககாலப் பாண்டியர்களில் நெடுஞ்செழியன் தலைசிறந்தவன் ஆவான்.

**கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி (கி.மு.150-125):**

கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி நெடுஞ்செழியனின் மூத்த மகனாக இருக்க வேண்டும். தந்தையைப் போலவே மாறன் வழுதியும், பல போர்களில் ஈடுபட்டான். 'தமிழ்நாடு பிறருக்கும் பொது' என்ற சொல்லைப் பொறுக்காமல், இவன் மற்ற தலைவர்களிடம் திறை பெற்றான் (புறம்.51). எதிர்த்த பகைவரைப் புறமுதுகிட்டு ஓடும்படி செய்தான் (அகம்.312). வடபுல மன்னர் வாடப் போர் செய்வதற்குத் திட்டமிட்டான் (புறம்.52).

மாறன் வழுதி நற்றிணையைத் தொகுப்பித்தான் என்று அத் தொகையின் இறுதியிலுள்ள குறிப்புக் கூறுகிறது. குறுந்தொகையும் இவன் காலத்திலேயே தொகுக்கப் பட்டிருக்கலாம். மாறன் வழுதி எழுதிய பாடல்கள் இவ்விரு தொகை நூல்களிலும் இடம் பெற்றுள்ளன (நற்.97, 301; குறுந்.270)

**இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் (கி.மு.150-125):**

இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் நெடுஞ்செழியனின் இளைய மகனாக இருக்க வேண்டும். மாறன் வழுதி இளவயதிலேயே இறந்து போனதால் நன்மாறன் பாண்டிய நாட்டின் அரசனானான்.

மருதன் இளநாகனார் என்ற புலவர், மூவேந்தர்களில் மேம்பட்டவனான நன்மாறன் அறநெறிப்படி ஆட்சி செய்ய வேண்டுமென்றும், வேண்டியவர்களுக்காகச் சட்டத்தை

வளைத்துச் சலுகைகள் தரக்கூடாது என்றும், வேண்டாதவர்கள் என்பதனால் அவர்கள் நற்குணங்களை ஒதுக்கித் தள்ளித் துன்புறுத்தக் கூடாதென்றும் கேட்டுக் கொள்கிறார் (புறம்.55). நக்கீரரோ நன்மாறனைச் சிவன், முருகன், கண்ணன், பலராமன் என்ற கடவுளரோடு ஒப்பிட்டுப் பாடுகிறார் (புறம்.57). நன்மாறனிடம் பரிசு பெறலாம் என்று நம்பி வந்து ஏமாந்துபோன இரண்டு புலவர்கள் பாடல்களிலிருந்து, இவன் செல்வம் மிகுந்தவன் என்பதும், படைபலம் உடையவன் என்பதும், வளர்ந்த புதல்வர்களை உடையவன் என்பதும், ஈயாத கஞ்சன் என்பதும் புலனாகின்றன (புறம்.196, 198).

இவன் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனோடு போர் செய்து கொண்டிருந்தபோது, காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்ற புலவர் இருவரையும் அமைதி செய்ய முயன்றார் (புறம். 57). புலவர் முயற்சி பலனளிக்கவில்லை. நன்மாறன் சோழனைத் தோற்கடித்து, சோழநாட்டை விட்டு ஓடச் செய்தான். சோழன் மலைய மானின் முள்ளூரில் ஒளிந்திருந்தான். நன்மாறன் இறந்தபின், அவன் மகனான வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி பாண்டிய அரசனானபோது, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் சோழனும் பாண்டியனும் நட்புப் பூண்டு வாழச் செய்தார் (புறம்.174, 58).

### வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி (கி.மு.125-100):

நன்மாறனுக்குப் பிறகு அவனுடைய இரு புதல்வர்கள் பாண்டிய நாட்டைப் பங்கு போட்டுக்கொண்டு ஆட்சி செய்தனர். வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி மதுரையைச் சூழ்ந்த பகுதியை ஆட்சி செய்ய, உக்கிரப் பெருவழுதி கானப்பேரைச் சூழ்ந்த பகுதியை ஆளலானான்.

நன்மாறன் இறந்தபிறகு, பாண்டிய நாட்டில் குழப்பம் ஏற்பட்டது. இக்குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் மலையமான் கண்ணன் உதவியோடு இழந்த அரசை மீண்டும் பெற்றான். வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி சோழனோடு சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டான். உறையூர் தர்பார் மண்டபத்தில் சோழனும் பாண்டியனும் ஒன்றாக வீற்றிருந்து மகிழ்ந்தார்கள் (புறம்.58).

**கானப்பேர் கடந்த உக்கிரப்பெருவழுதி (கி.மு.125-100):**

நன்மாறனின் மற்றொரு மகனாகிய உக்கிரப் பெருவழுதி, வேங்கைமார்பனிடமிருந்து கானப்பேர் கோட்டையைக் கைப்பற்றினான் (புறம்.21). கானப்பேர் இப்போது காளையார் கோயில் என்று வழங்குகிறது. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி செய்த வேள்வியில் சேரமான் மாரிவெண் கோவுடன் உக்கிரப் பெருவழுதியும் கலந்து கொண்டான். அத்தருணம் ஔவையார் மூவேந்தரையும் வாழ்த்திப் பாடினார் (புறம்.367).

உக்கிரப் பெருவழுதி உருத்திர சன்மன் என்பவனைக் கொண்டு அகநானூற்றைத் தொகுப்பித்தான். உருத்திர சன்மன், மதுரை உப்பூரிகுடி கிழான் மகன் என்று கூறப்படுகிறான். குறுந்தொகையைத் தொகுத்தவன் பெயர் பூரிக்கோ என்று காணப்படுகிறது. பூரிக்கோவும், உப்பூரிகுடி கிழானும் உறவினராக இருக்கலாம். அவ்வாறானால் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்று தொகைகளும் உப்பூரிகுடி கிழான் குடும்பத்தவரால் மாறன்வழுதி காலத்திலும், உக்கிரப் பெருவழுதி காலத்திலும் கி.மு.150-100 என்ற காலநிலையில் தொகுக்கப்பட்டிருக்கலாம்.

உக்கிரப்பெருவழுதியின் இரண்டு பாடல்கள் (அகம்.26, நற்.98) சங்கத் தொகைகளில் இடம் பெற்றுள்ளன.

**சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் (கி.மு.100-75):**

சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனின் பேரன் என்பதை நன்மாறன் என்ற பெயரால் அறிகிறோம். வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதிக்குப் பிறகு மதுரைப் பகுதியை இவன் ஆண்டிருக்கலாம்.

இவனைப் பாடிய மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், (புறம்.59) மணிமேகலை ஆசிரியர் அல்லர்.

இவன் காலத்திற்குப் பிறகு பாண்டியநாடு தன் சுதந்திரத்தை இழந்து களப்பிரர்க்கு அடிமைப்பட்டுவிட்டது.

### சங்ககாலப் பாண்டியர்

கி.மு.350-325 — ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்



325-300 — நெடியோன்



300-275 — பசும்பூண் பாண்டியன்



275-250 — கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி



250-225 — பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி



250-225 — கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி



225-200 — ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்



200-175 — அறிவுடை நம்பி



175-150 — தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

150-125 — கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதி | இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்

125-100 — வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி | கானப்பேர் கடந்த உக்கிரப்பெருவழுதி

100-75 — சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்

## 2. சோழர் வரலாறு

கி.மு. நான்காம் நூற்றாண்டுக்கு முன்பு சோழர் குடியைச் சேர்ந்த பல வழியினர் அழுந்தூர், ஆமூர், கழார், குடந்தை, பருவூர், பெருந்துறை, போஒர், வல்லம் முதலிய இடங்களில் சிறுசிறு குடியாட்சிகளை அமைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தனர். ஒவ்வொரு வழியினரும் தங்களுக்குள் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். இத்தலைவன் 'சோழர் பெருமகன்' என்று அழைக்கப்பட்டான். சங்கப் பாடல்களில் காலத்தால் முந்தியவை சோழரைப் பன்மையிலேயே குறிப்பிடுகின்றன. காலப் போக்கில் கிள்ளி, சென்னி என்ற இரு வழியினர் தம் படைத்தால் சோழர் குடியில் செல்வாக்குப் பெற்றவர்கள் ஆயினர்.

### தித்தன் (கி.மு.325-300):

பிற்காலத்தில் சோழநாடு என்று அழைக்கப்பட்ட உறையூர்ப் பகுதியை ஆர்க்காட்டுத் தலைவர்களான அழிசியும் (காலம் கி.மு.375-350) அவன் மகனான சேந்தனும் (கி.மு.350-325) ஆண்டுவந்தார்கள். இவர்களின் பிரதிநிதியாகப் பெருங்கோழி நாய்கன் என்பவன் உறையூரை நிர்வாகம் செய்துவந்தான். (உறையூர், பழங்காலத்தில் பெருங்கோழியூர் என்றும் சுருக்கமாகக்கோழி என்றும் அழைக்கப்பட்டது.) சோழர்கள் உறையூரின் மேல் படையெடுத்துப் பெருங்கோழி நாய்கனிடமிருந்து அதைக் கைப்பற்றினார்கள். பிற்காலத்தவர் உறையூரைத் 'தித்தன் உறந்தை' என்று அழைப்பதைப் பார்த்தால்[5] சோழர்களுக்காக உறையூரைக் கைப்பற்றியவன் தித்தன் என்று கருதலாம்.

''வீரைவேள்மாஅன் வெளியன் தித்தன் மெல்லப் பனிவிழும் ஒருமாலைப் பொழுதில், எக்காளம் ஒலிக்க, (பகைவன் ஊருக்குள் புகுந்து) அவன் போர் முரசைக் கைப்பற்றினான். தோற்றவன் செய்வதறியாது மனங் கலங்கினான்'' என்று முதுகூற்றனார் என்ற புலவர் ஒரு பாடலில் கூறுகிறார்.[6] தித்தன் உறையூரைக் கைப்பற்றியதை இப்பாடல் குறிப்பிடுகிறது என்று கருதலாம்.

---

5. புறம்.352, 395; அகம் 6, 122).
6. வீரை வேள்மான் வெளியன் தித்தன்
   முரசு முதல் கொளீஇய மாலை விளக்கின்
   வெண்கோடு இயம்ப, நுண்பனி அரும்ப,
   கையற வந்தபொழுது (நற். 58:5-8)

உறையூரைக் கைப்பற்றிய தித்தன் பகைவர் மீண்டும் அதைக் கைப்பற்றாமல் இருக்க உறையூரைச் சுற்றிப் பலத்த காவல்காடு ஒன்று அமைத்தான். பகைவர் எளிதில் நுழைய முடியாதபடி பற்பல தடைகள் இக் காவல்காட்டில் அமைக்கப்பட்டன. "தித்தன் உறையூரில் அமைத்த காவல் காட்டைப் போல, எனது காதல் பல தடைகளை யுடையது" என்று காதலி ஏக்கத்தோடு சொல்வதாகப் பரணர் ஒரு பாடலில் கூறுகிறார்.

நொச்சிவேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட்டு அன்ன
பல்முட்டின்றால் - தோழி! நம் களவே. (அகம்.122:21-23)

தித்தனுக்கு ஐயை என்றொரு மகளும் (அகம்.6), தித்தன் வெளியன் என்றொரு மகனும் இருந்தார்கள். தித்தன் வெளியன் பிற்காலத்தில் சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளி என்று அழைக்கப்பட்டான். (புறம்.80, பழைய உரை).

உறையூரை வென்று அங்குச் சோழ அரசை நிறுவிய தித்தன், சோழர் குடியைச் சேர்ந்தவனாகத் தெரியவில்லை. சோழர் குடித் தலைவன், சோழர் மருகன் என்றோ, சோழர் பெருமகன் என்றோ அழைக்கப்படுவான். ஆனால் தித்தனோ 'வீரை வேள்மான்' என்று அழைக்கப்படுகிறான். 'வீரை என்ற கடற்கரைப் பட்டினத்தின் தலைவனான வேள்மகன்' என்பது இத்தொடரின் பொருள். வேள் மகனான தித்தன், சோழர் மகளை மணந்து சோழர்குடியோடு இணைந்தான் என்று கருதலாம்.

**சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி (கி.மு.300-275):**

தித்தனுக்கு அடுத்த தலைமுறையில் இரு சோழர்களைக் காண்கிறோம். ஒருவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த போர்வைக் கோப்பெருநற்கிள்ளி. இவன் கிள்ளிவழிச் சோழன், தித்தனின் மகன் (புறம் 80, பழைய உரை). அதனால் தித்தன் வெளியன் என்றும் அழைக்கப்பட்டான் (அகம்.152, 226). மற்றொருவன் சென்னிவழிச் சோழனான பெரும்பூண் சென்னி. இவன் அழுந்தூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான்

(அகம்.44). சோழர்குடியில் பலவழியினர் இருந்த போதிலும் கிள்ளி, சென்னி வழியினரே தலைமை பெற்றுச் சோழநாட்டை ஆளத்தொடங்கினார்கள்.

சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் இயற்பெயர் தித்தன் வெளியன் (தித்தனின் மகனான வெளியன்) என்பதாகும். கிள்ளிவழிச் சோழர் தலைவனானதால், 'பெருநற்கிள்ளி' என்றும், பழையன் என்பவனுடைய போஒர் எனப்படும் போர்வையை (நற்.10, அகம். 186, 326) வென்றதால் 'போர்வைக் கோ' என்றும் அழைக்கப்பட்டான்.

சிறுசிறு நிலப் பகுதியை ஆண்டுவந்த சோழர்கள் படைபலம் பெற்று உறையூர்ப் பகுதியையும் அழுந்தூர்ப் பகுதியையும் ஆளத் தொடங்கி, மேற்கு நோக்கித் தங்கள் நாட்டை விரிவாக்குவதை நன்னன் என்பவன் விரும்பவில்லை. நன்னன் எழில் மலைப் பகுதியிலுள்ள பாரம் என்ற நாட்டின் தலைவன். பாழி அவனுடைய தலைநகரமாகும். மிஞிலி என்பவன் அவன் படைத் தலைவன் ஆவான். தித்தன் வெளியனின் படைத்தலைவர்கள் நன்னனின் வலிமையை அடக்க முயன்றார்கள். முதலில் பிண்டன் என்ற படைத்தலைவன் நன்னனோடு போர் செய்து தோற்றான் (அகம்.152)[7]. அதையடுத்து ஆஅய்எயினன் என்ற படைத்தலைவன் நன்னன் படைத் தலைவனான மிஞிலியோடு பாழிப்போர்க்களத்தில் போர் செய்து இறந்து போனான் (அகம்.208)[8].

தன் இரு படைத் தலைவர்களும் நன்னனிடம் தோற்றுப் போனபிறகு, பழையன் என்ற படைத்தலைவனைத் தித்தன்

7. சினம் கெழுதானை தித்தன் வெளியன்....
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்
முனைமுரண் உடையக் கடந்த வென்வேல்....
பாரத்துத் தலைவன் ஆர நன்னன் *(அகம். 152:5, 9-10, 12.)*

8. வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அளிஇயல் வாழ்க்கை பாழிப் பறந்தலை
இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு
நண்பகல் உற்ற செருவில் புண்கூர்ந்து
ஒள்வாள் மயங்குஅமர் வீழ்ந்தென *(அகம்.208:5-9)*

வெளியன் பெரும் படையுடன் அனுப்பினான். பழையனைத் தான் தனியே வெல்ல முடியாது என்பதை உணர்ந்த நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்பவரைக் கூட்டுச் சேர்த்துக்கொண்டு பழையனை எதிர்த்தான். பழையன் வீரமாகப் போர் செய்து பகைவர் பலர் உடலைப் பருந்துக்கு இரையாக்கினான். என்றபோதிலும் போர்க்களத்தில் பழையன் இறந்துபோனான். கிள்ளிவழிச் சோழனான தித்தன் வெளியனின் படைத் தலைவர்கள் ஒருவர் பின் ஒருவராக நன்னனிடம் தோற்று இறந்ததைக் காணச் சகிக்காத சென்னிவழிச் சோழனான பெரும்பூண் சென்னி, நன்னன் மேல் படையெடுத்துச் சென்றான். நன்னனின் நண்பனான கணையனின் கழுமலத்தில் போர் நடந்தது. பெரும்பூண் சென்னி கழுமலத்தைக் கைப்பற்றிக் கணையனைச் சிறைப் பிடித்தான் (அகம்.208)[9]. இவ்வாறு கிள்ளிவழிச் சோழனின் கை ஓய்ந்தபோது, சென்னிவழிச் சோழன் கைகொடுத்து, சோழர்களின் பொது எதிரியான நன்னனோடு போர் செய்தான்.

காவிரிப்பூம்பட்டினம் கரிகால் வளவன் காலத்தில் (கி.மு.225-200) சோழரின் சிறந்த துறைமுகப்பட்டினமாக விளங்கியதைப் பட்டினப் பாலையால் அறிகிறோம். ஆனால் தித்தன் வெளியன் காலத்தில் (கி.மு. 300-275 இல்) பெருந் துறை சோழரின் துறைமுகமாக இருந்தது எனத் தெரிகிறது.

"தித்தன் வெளியனின் பெருந்துறையில் பொன்னைக் கொண்டு வரும் கப்பல்கள் சிதையும்படி சிறு இறாக்களின் கூட்டம் தாக்கும்" (அகம்.152) என்றும்,[10] "காவிரி கடலோடு

9. *நன்னன், ஏற்றை, நறும்பூண் அத்தி,*
*துன்அருங் கடுந்திறல் கங்கன், கட்டி,*
*பொன்அணி வல்வில் புன்றுறை, என்று ஆங்கு*
*அன்று அவர் குழீஇய அளப்பு அருங்கட்டூர்*
*பருந்துபடப் பண்ணி, பழையன் பட்டெனை,*
*கண்டது நோனானாகி, திண்தேர்க்*
*கணையன் அகப்பட, கழுமலம் தந்த*
*பிணைஅல்அம் கண்ணி பெரும்பூண் சென்னி* *(அகம். 44:7-14)*

10. *சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்*
*இரங்குநீர்ப் பரப்பின் கானலம் பெருந்துறை*
*தனம்தரு நன்கலம் சிதையத் தாக்கும்*
*சிறுவெள் இறவின் குப்பை* *(அகம். 152:5-8*

கலக்குமிடத்தில் பெருந்துறை உள்ளது. அது சோழருடையது. அங்குக் கடல் அலைகள் இறாக்களைக் கொண்டு வந்து, மாலையோடு திரும்பிச் செல்லும்'' என்றும்[11] பாடல்கள் கூறுகின்றன. எனவே, அயல்நாட்டவர் கப்பல்கள் பொன்னோடு பெருந்துறைக்கு வந்து, தமிழ்நாட்டுப் பண்டங்களை ஏற்றிச் சென்றன என்று அறிகிறோம்.

இனி, சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளியின் குடும்ப வாழ்க்கையைப் பார்ப்போம்.

தித்தன் வெளியன் எனப்படும் இவன் தித்தனின் மகன். ஐயை என்பவள் இவன் தங்கை (புறம்.80, அகம்.6). பெருங்கோழி நாய்கன் மகளான நக்கண்ணை இவன்மேல் காதல் கொண்டு பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன (புறம்.83-86). உறையூரின் முன்னாள் தலைவன் பெருங்கோழி நாய்கனின் ஆதரவு சோழருக்குத் தேவையானபடியால், தித்தன் நக்கண்ணையைத் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைத்திருக்க வேண்டும்.

தித்தன் வெளியனின் மகள் பெயர் நல்லினி என்றும், அவள் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனுக்கு மணம் செய்து வைக்கப்பட்டாள் என்றும், நல்லினிக்கும் உதியஞ் சேரலுக்கும் பிறந்த மகனே இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் என்றும் பதிற்றுப் பத்தின் இரண்டாம் பதிகம் கூறுகிறது.[12]

தித்தன் உறையூரில் சோழர் ஆட்சியை நிறுவினான். என்றால், தித்தன் வெளியன் சோழர் ஆட்சியை அங்கு நிலைபெறச் செய்தான் என்று கூறலாம்.

---

11. மழைமருள் பல்தோல் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடல் மண்டு பெருந்துறை
இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கடல் *(அகம். 123:10-13)*

12. இன்இசை முரசின் உதியஞ்சேரற்கு
வெளியன் வேண்மாள் நல்லினி ஈன்றமகன்...
இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன்




## பெரும்பூண் சென்னி (கி.மு.300-275):

ஒரு கிராமத்தில் அதிகமான நிலங்களை உடையவரைப் பெரிய பண்ணை என்றும், அவருக்குக் குறைவான நிலங்களை உடையவரைச் சிறிய பண்ணை என்றும் சொல்வார்கள். சென்னிவழிச் சோழர்களில் சில ஊர்களை ஆட்சி செய்தவர்கள் சிறுசென்னி, சிறுகோல் சென்னி என்றும்[13], பெரிய நிலப்பகுதியை ஆட்சி செய்தவர்கள் பெருஞ்சென்னி, பெரும்பூண் சென்னி[14] என்றும் அழைக்கப்பட்டார்கள்.

கிள்ளிவழிச் சோழனான போர்வைக் கோப்பெருநற்கிள்ளி உறையூர்ப் பகுதியை ஆட்சிசெய்துவந்தபோது, சென்னி

13. சிறுகோல் சென்னி ஆரேற்று அன்ன★ - நற்.265:6 என்ற தொடருக்குச் ''சிலவாகிய ஊர்களை ஆட்சி கொண்ட செங்கோலை யுடைய சோழனுடைய ஆரேற்றைப் போன்ற'' என்று பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை கூறுகிறார். (★ இத்தொடர் 'சிறுகோல் சென்னியர் சேறறன்ன' என்று வையாபுரிப்பிள்ளை சங்க இலக்கியப் பதிப்பில் காணப்படுகிறது).

14. பெரும்பூண் சென்னி அழும்பில் (அகம். 44:14-15.)
சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி
(அகம். 375:10-11)
இவர்கள் முறையே அழும்பில் (அழுந்தூர்), நெய்தலங்கானல் போன்ற பெரிய நிலப் பரப்பை ஆண்டவர்கள்.

வழிச்சோழனான பெரும்பூண் சென்னி அழுந்தூர்ப் பகுதியை ஆட்சி செய்து வந்தான்.

சங்கப் பாடல்களில் காணப்படும் முதல் சென்னிவழிச் சோழன் பெரும்பூண் சென்னியாவான். சோழர் படைத் தலைவனான பழையன், நன்னன் கூட்டணியோடு வீரமாகப் போர் செய்து இறந்ததைக் காணச் சகிக்காத பெரும்பூண் சென்னி தானே படை நடத்திச் சென்று நன்னனின் நண்பனான கணையனைச் சிறைபிடித்து, அவனுடைய கழுமலத்தைக் கைப்பற்றினான்; அழுந்தூரில் வெற்றிவிழா கொண்டாடினான் (அகம். 44) என்று ஏற்கெனவே பார்த்தோம்.

**சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி (கி.மு.275-250):**

சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளிக்குப் பிறகு அவன் மகன் முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளி உறையூர்ச் சோழன் ஆனான். தித்தனும் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியும் குடியரசுத் தலைவர்களாகவே ஆட்சி செய்தனர். ஆனால் முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளியோ, முடிசூடிக் கொண்டு சோழவேந்தனாகி ஆட்சி செய்தான்.

சேரமான் உதியஞ் சேரலாதனின் மனைவியான நல்லினி இவன் தங்கையாவாள். தன் தங்கைமகன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குத் தன் மகளான நற்சோணையை மணமுடிக்க ச்சோழன் முடித்தலைக்கோ விரும்பினான்.

இந்தக் காலநிலையில், சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை (பிற்காலத்தில் கருவூர் என்று அழைக்கப்பட்ட) வஞ்சியிலிருந்து சேரநாட்டை நிர்வாகம் செய்துவந்தான். அவன் தம்பியான சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் குழுமூரில் இருந்துகொண்டு சேரநாட்டை விரிவாக்குவதிலும், படைவீரர்களுக்குப் பெருஞ்சோறு (விருந்து) கொடுப்பதிலும் ஈடுபட்டிருந்தான். சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி தன் தலைநகர்ப் புலவரான உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரிடம் தன் விருப்பத்தைக் கூறி அந்துவஞ் சேரலிடம் அனுப்பி வைத்தான். புலவர், சோழன் தன் மகளுக்கு மணம் பேசுவதற்காகப் பரிவாரங்களுடன் பின்னால் வருவதைச் சேரனுக்குத் தெரிவித்தார். சோழன் வரவை

எதிர்பார்த்துக் கருவூர் வேள்மாடத்தில் அந்துவஞ் சேரலும் முடமோசியாரும் காத்திருந்தார்கள். சோழன் யானைமேல் அமர்ந்து, வீரர்கள் புடைசூழ கருவூர் அரண்மனையை நெருங்கிக் கொண்டிருந்தபோது, அவன் யானைக்கு மதம் பிடித்து அங்குமிங்கும் ஓடியது. அரண்மனை மாடத்திலிருந்து தூரத்தில் நிகழும் அக்காட்சியைக் கண்ட அந்துவஞ்சேரல், யானைமேல் அமர்ந்து அல்லலுக்கு உள்ளானவன் யார் என்று கேட்டான். புலவர், 'அவன்தான் சோழநாட்டின் தலைவன் யானையின் செயலால் துன்பமடையாமல் அவன் தப்புவானாக!' என்று வேதனையோடு கூறினார்.

> 'இவன் யார்?' என்குவை ஆயின், இவனே...
> மறலி அன்ன களிற்று மிசையோனே;
> களிறே.... ..... .....
> மரீஇயோர் அறியாது, மைந்துபட்டன்றே;
> நோய்இலன் ஆகிப் பெயர்கதில் அம்ம!...
> விழுநீர்வேலி நாடு கிழவோனே.
>
> (புறம். 13:1, 4-5, 8-9, 13)

இந்த நிகழ்ச்சியைப் புறநானூறு 13ஆம் பாடலின் அடிக்குறிப்பு பின்வருமாறு கூறுகிறது:

"சோழன் முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளி கருவூரிடம் செல்வானைக் கண்டு, சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையோடு வேண்மாடத்து மேல் இருந்து, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது."

தன் மகளுக்கு மணம் பேசக் கருவூருக்கு வந்த சோழன் முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளியை மணக்கிள்ளி என்று பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பதிகம் கூறுகிறது.

முடித்தலைக்கோவின் சேரநாட்டு வருகை, திருமணத்தில் முடிந்தது. அவன் மகள் நற்சோணை நெடுஞ்சேரலாதன் மனைவியானாள்; செங்குட்டுவனைப் பெற்றெடுத்தாள்.

> குடவர் கோமான் நெடுஞ் சேரலாதற்குச்
> சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்...
> கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன்" (பதிற்.பதிகம் 5: 2-3, 22)




## முதலாம் கரிகால் வளவன் (கி.மு.275-250):

### கரிகால் வளவர் இருவர்

பதினோரு சங்கப் பாடல்களில்[15] பாடப்படும் கரிகால் வளவன் என்ற பெயருடைய நபர் ஒருவரே என்றும், இருவர் என்றும், மூவர் என்றும் மூவகைக் கருத்துக்கள் நிலவுகின்றன. ஒருசிலர் பட்டினப்பாலையின் தலைவன் திருமாவளவன் என்று அப்பாட்டுக் கூறுவதால், அப்பாட்டுக் கரிகால் வளவன் மேல் பாடப்பட்டதன்று என்று கூறுவார்கள். பட்டினப் பாலையின் அடிக்குறிப்பு அது சோழன் கரிகால் பெரு வளத்தான் மேல் பாடப்பட்டது என்று கூறுவதால் திருமா வளவனும் கரிகால் வளவனும் ஒருவரே என்று கொள்ள வேண்டும்.

கே.என். சிவராச பிள்ளை அவர்கள் தாம் 1932இல் வெளியிட்ட 'முற்காலத் தமிழர் காலநிலை' என்ற ஆங்கில நூலில் (பக்கம் 88-96) கரிகாலர் இருவர் என்ற கருத்தை வெளியிட்டு, அதற்கான காரணங்களையும் கூறுகிறார். அவர்

15. புறம். 65, 66; அகம். 55, 125, 141, 246, 376 ஆகிய ஏழு பாடல்கள் முதலாம் கரிகால் வளவன் மேல் பாடப்பட்டனவென்றும், புறம். 7, 224; பொருநர் ஆற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய நான்கு பாடல்கள் இரண்டாம் கரிகால் வளவன் மேல் பாடப்பட்டன வென்றும் சிவராச பிள்ளை கருதுகிறார். - முற்காலத் தமிழர் காலநிலை பக்.88-96.

கருத்துப்படி முதலாம் கரிகால் வளவன் மேல் பாடப்பட்ட பாடல்களின் கருத்தைக் காண்போம்:

1. சோழன் கரிகால் வளவன் சேரமான் பெருஞ்சேரலாதனை வெண்ணிப் போர்க்களத்தில் வென்றான், சேரனுக்கு முதுகில் புண்பட்டு விட்டது. அதற்கு நாணமடைந்த சேரன் வடக்கிருந்து உயிர் விட்டான். இந்த நிகழ்ச்சியைப் பழங்காலப் புலவர்களான கழாத்தலையாரும், வெண்ணிக் குயத்தியாரும் பாடியுள்ளனர்.[16]

2. கரிகால் வளவன் வாகைப் போர்க்களத்தில் ஒன்பது மன்னர்களை வென்றான்[17]. வெண்ணிப் போர்க்களத்தில் பதினோரு வேளிர்களையும் வேந்தர்களையும் சாய்த்து அழுந்தூரில் வெற்றிவிழா எடுத்தான்.[18]

3. கரிகால் வளவன் நாடோடிகளாகத் திரிந்த ஒரு குடியினரை ஓரிடத்தில் நிலைத்துத் தங்கும் குடிகளாக்கினான்.[19]

---

*16. தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
வாள்வடக்கு இருந்தனன் (புறம். 65: 9-11)
(கழாத்தலையார் பாடியது)
களியியல் யானைக் கரிகால் வளவ!...
வென்றோய்! நின்னினும் நல்லனன்றே!
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே. (புறம். 66:3, 5-8)
(வெண்ணிக்குயத்தியார் பாடியது)*

*17. பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடாவாகைப் பறந்தலை, ஆடுபெற
ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த
பீடுஇல் மன்னர் (அகம். 125: 18-21)
(பரணர்)*

*18. காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணிவாயில்...
பதினொரு வேளிரொடு வேந்தர்சாய
மொய்வலி அறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே! (அகம். 246: 8-9, 12-14)
(பரணர்)*

*19. செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் (அகம். 141:22-23)*

4. ஆட்டன் அத்தியும் அவன் மனைவி ஆதிமந்தியும் நடனமாடும் தம்பதிகள். ஒருநாள் ஆட்டன் அத்தி கழார்துறையில் காவிரி ஆற்றில் இறங்கி நீரில் நடனமாடுவதைக் கரிகால் வளவன் சுற்றத்தோடு அமர்ந்து கண்டு களித்தான். அப்போது காவிரி ஆறு ஆட்டனத்தியை அடித்துச் சென்றது.[20] மருதி என்பவள் அத்தியைக் காப்பாற்றித் தன்னுடன் சிலகாலம் வைத்திருந்து, பிறகு ஆதிமந்தியிடம் ஒப்படைத்து விட்டு, கடலில் விழுந்து தற்கொலை செய்து கொண்டாள்.[21]

இனி, இரண்டாம் கரிகால் வளவன் மேல் பாடப்பட்டவை என்று சிவராச பிள்ளை கருதும் நான்கு பாடல்களின் கருத்து வருமாறு:

### 1. பொருநர் ஆற்றுப்படை

கரிகால் வளவன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியின் மகன். அவன் தாய் வயிற்றில் இருந்தபோதே, தந்தை இறந்து போனான். அதனால் கருவில் இருந்தபோதே கரிகால் வளவன் அரச உரிமை பெற்றான். இளைஞனாக இருந்தபோதே ஆட்சிப் பொறுப்பைத்தன் தோள்களில் சுமந்து சோழநாட்டை நாள்தோறும் வளர்த்து வந்தான். பால்குடிக்கும் சிங்கக் குட்டி யானையைத் தாக்கி வெல்வது போல, தன்மேல் படையெடுத்து வந்த சேரபாண்டியர்களை வெண்ணிப்

20. *கலிகொள் சுற்றமொடு கரிகால் காண,*
*புனல் நயந்து ஆடும் அத்தி அணிநயந்து*
*காவிரி கொண்டு ஒளித்தாங்கு* (அகம். 376: 5, 10-11.)
*(பரணர்)*

21. *கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்...*
*ஆட்டன் அத்தி நலன் நயந்து உரைஇ,*
*தாழ் இருங் கதுப்பின் காவிரி வவ்வலின்,*
*மாதிரம் துழைஇ, மதிமருண்டு அலந்த*
*ஆதிமந்தி காதலற் காட்டி,*
*படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்*
*மருதி அன்ன மாண்புகழ் பெறீஇயர்* (அகம். 222:5, 7-12.)
*(பரணர்)*

போர்க்களத்தில் வென்றான்.[22] இளைஞனான க்ரிகால் வளவன் அவைக்களத்தில் புகுந்த முதியோர்களும் தம் வழக்கில் நல்ல தீர்ப்புப் பெற்று மாறுபாடு தீர்வார்கள். எல்லோரும் போற்றிப் பகழ, அறநெறிப்படி திறமையாகச் செங்கோல் ஆட்சி செலுத்தி, சோழநாட்டை ஒருகுடைக்கீழ்க் கரிகால் வளவன் ஆட்சி புரிந்தான்.

## 2. பட்டினப்பாலை

ப்கைவரால் சிறைப்படுத்தப்பட்ட திருமாவளவன் சிறையிலிருந்து தப்பித் தன் பழைய அரச உரிமையை மீண்டும் பெற்றான். பெற்றது போதும் என்று திருப்தியடையாமல் பகைவர் நாட்டின் மேல் படையெடுத்துப் பாழாக்கினான். 'அவன் மலையையும் அகழ்ந்து எடுப்பான்; கடலையும் தூர்த்துவிடுவான்; வானத்தையும் கீழே கொண்டு வருவான்; காற்றையும் திசைமாறி வீசச் செய்வான்' என்று மக்கள் வியந்து பாராட்ட, எண்ணியதைச் செய்து முடிப்பான்.

ஒளியர், அருவாளர், வடவர், குடவர், தென்னவன், பொதுவர், இருங்கோவேள் ஆகியோரை அடக்கினான். காட்டை அழித்து நாடாக்கினான். நாடெங்கும் குளங்களைத் தோண்டி வளம் பெருக்கினான். மாடங்கள் நிறைந்த உறையூருக்குத் தன் தலைநகரை மாற்றினான். அங்கிருந்த கோயில்களையும் குடிமக்களையும் முன்புபோல நிலை நிறுத்தினான். உறையூர் மதிலை வலுப்படுத்திப் பாதுகாப் புடையதாகச் செய்தான்.

---

22. உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்....
தாய் வயிற்று இருந்து தாயம் எய்தி....
நாடு செகில் கொண்டு நாடொறும் வளர்ப்ப....
இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை
அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்,
ஓங்கு இருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய,
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்,
கண்ஆர் கண்ணி, கரிகால் வளவன்
(பொருநர்: 130, 132, 138, 143-148)

புதல்வர் ஓடி ஆடவும், மகளிர் முலைகள் மார்பில் திளைக்கவும், சிங்கம் போன்ற வலிமையுடைய திருமாவளவன் மகிழ்ந்து வாழ்ந்தான்.

திருமாவளவன் பகைவரை நோக்கி எறிந்த வேலைவிட நான் செல்லவிருக்கும் காட்டுவழி கொடியது. அவன் செங்கோல் ஆட்சியை விட என் காதலியின் தோள்கள் இனிமையானவை.

### 3. புறநானூறு: 7

கருங்குழலாதனார் என்ற புலவர் கரிகால் வளவன் இருந்தபோதும் (புறம்.7), இறந்தபோதும் (புறம்.224) அவனைப் பாடியுள்ளார். கரிகால் வளவன் பகைவர் நாட்டைப் பாழாக்குவதைப் புறம் 7ஆம் பாடலில் பாடுகிறார்:

"பகலென்றும் இரவென்றும் பாராமல் பகைவர் ஊரை நெருப்பூட்டி, மக்கள் அழுது அரற்ற, அவ்வூரை நீ கொள்ளையடிக்கிறாய். அதனல் முன்பு வளம் பல நிறைந்திருந்த பகைவர் நாட்டில், இன்று நல்லவை என்று சொல்ல எவையுமே இல்லை."

### 4. புறநானூறு: 224

கரிகால் வளவன் இறந்தபோது கருங்குழலாதனார் பாடிய இரங்கல் பாடல் இதுவாகும். இதன் கருத்து வருமாறு:

"கரிகால் வளவன் பகைவர் அரண்களை மதிக்காமல் அவற்றைக் கடந்து போரை வென்றான். துணைவர்களோடு சேர்ந்து, மகிழ்ந்து, கள்குடங்களைக் காலி செய்து பாணர் சுற்றத்தைப் பாதுகாத்தான். அறங்கூறு அவையத்தில் (நீதிமன்றத்தில்) முறை செய்வதில் வல்லுநர்களால் சிறந்த நீதிபதி என்று உயர்வாகப் புகழப்பட்டான். பருந்து உருவில் வேள்வித்தூண்களை நாட்டி மனைவியரோடு வேத முறைப்படி வேள்விகள் செய்து முடித்தான்.

இவற்றையெல்லாம் செய்த அறிவுடையாளன் இறந்து போனான். இனி இவ்வுலகம் இரங்கத்தக்கது. பூவும் தழையும் கொய்யப்பட்டு வெறும் கொம்போடு நிற்கும் வேங்கை மரம்போல, அவன் மனைவியர் தங்கள் இழைகளை (அணிகலன்களைக்) களைந்து நின்றார்கள்.

**கரிகால் இருவர் என்பதற்கான காரணங்கள்**

சங்கப் பாடல்களில் கரிகால் வளவன் என்ற பெயருடைய இரு வேறு நபர்கள் பாடப்படுகிறார்கள். இவர்கள் பாட்டனும் பேரனும் ஆவார்கள். முதலாம் கரிகால் வளவன் சோழன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியின் தந்தையாவான். இரண்டாம் கரிகால் வளவன் இளஞ்சேட் சென்னியின் மகனாவான். இவ்வாறு தாம் கருதுவதற்குச் சிவராச பிள்ளை பின்வரும் காரணங்களைத் தருகிறார்.

1. கழாத்தலையாரும் வெண்ணிக்குயத்தியாரும் ஒரு வெண்ணிப் போரைப் பாடியுள்ளனர் (புறம்.65, 66). இந்தப் போரில் சோழன் கரிகால் வளவனிடம் தோற்ற சேரமான் பெருஞ்சேரலாதன், தன் முதுகில் புண் பட்டதற்கு நாணமடைந்து, போர்க்களத்திலேயே வடக்கிருந்தான்.

பொருநர் ஆற்றுப் படையிலும் (143-148) ஒரு வெண்ணிப்போர் பாடப்படுகிறது. இந்தப் போரில், சோழன் கரிகால் வளவன் சேர பாண்டியராகிய இருபெரு வேந்தரும் ஒரு களத்தில் அவிய வெண்ணியில் தாக்கினான் என்று கூறப்படுகிறது.

மேற்கூறிய இரண்டும் ஒரே போரைக் குறிப்பிடும் என்றால், புறம் 65, 66இல் பாண்டியன் பெயர் விடப்பட்டது ஏன் என்று விளக்கப்பட வேண்டும். 248 அடி நீளமுள்ள பொருநர் ஆற்றுப்படையில் சேரன் வடக்கிருந்தது கூறப் படாதது ஏன் என்பதும் விளக்கப்பட வேண்டும். எனவே, இவை இருவேறு கரிகாலர்களால் செய்யப்பட்ட இரு வேறு போர்கள் என்று கொள்ள வேண்டியுள்ளது.

2. கரிகால் வளவன் புரிந்த வேறு இரண்டு போர்களைப் பரணர் குறிப்பிட்டுள்ளார். வெண்ணி வாயிலில் நடந்த போரில் அவன் பதினோரு வேளிரையும் வேந்தரையும் சாய்த்தான் (அகம் 246). வாகைப் பறந்தலையில் நிகழ்ந்த போரில் அவன் ஒன்பது மன்னர்களை விரட்டியடித்தான் (அகம்.125). இந்த இரண்டு போர்களைப் பற்றி நீண்ட பாடல்களான பொருநர் ஆற்றுப்படையிலும் (நீளம் 248அடி) பட்டினப் பாலையிலும் (301 அடி) எதுவுமே சொல்லப்படவில்லை. எனவே,

பரணரால் பாடப்பட்ட, கரிகால் வளவன் வேறு. பொருநர் ஆற்றுப்படையிலும் பட்டினப்பாலையிலும் பாடப்படும் கரிகால் வளவன் வேறு என்று கொள்ள வேண்டியுள்ளது. முன்னவனை முதலாம் கரிகாலன் என்றும், பின்னவனை இரண்டாம் கரிகாலன் என்றும் அழைக்கலாம்.

3. சோழமன்னன் ஒரு போர்க்களத்தில் பதினோரு வேளிரோடும் வேந்தரோடும் (அகம்.246), மற்றொரு போர்க்களத்தில் ஒன்பது மன்னரோடும் (அகம்.125) போரிட வேண்டிய நிர்ப்பந்தம் சோழ அரசு வலுவற்றதாக, சிறிய நிலப்பகுதி கொண்டதாக இருந்த முற்காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும். இவை முதலாம் கரிகால் வளவனால் செய்யப் பட்டவை என்று கொள்ளவேண்டும்.

4. கழாரில் கரிகால் வளவன் கண்முன்னால் ஆட்டனத்தியைக் காவிரி அடித்துச் சென்றது என்று பரணர் கூறுகிறார் (அகம்.376). ஆட்டனத்தி - ஆதிமந்தி - மருதி காதல் கதை பரணரால் பல பாடல்களில் (அகம்.76, 135, 222, 236, 376, 396) பாடப்படுவதால், ஆட்டனத்தி காவிரியால் அடித்துச் செல்லப்பட்ட நிகழ்ச்சி, மக்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கியிருக்க வேண்டும். இந்த நிகழ்ச்சி கரிகால் வளவனைப் பாடும் நீண்ட பாடல்களில் (பொருநர் ஆற்றுப்படை, பட்டினப்பாலை) கூறப்படவில்லை. ஆட்டனத்தி காலத்தில் வாழ்ந்தவன் முதலாம் கரிகால் வளவன் என்று கொள்ள வேண்டும்.

இவ்வாறு சிவராசபிள்ளை கூறுகிறார்.[23]

கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியாரோ சங்க காலத்தில் ஒரு கரிகால் வளவனே வாழ்ந்துள்ளான் என்ற கருத்தில் சோழர் வரலாற்றை எழுதியுள்ளார். நாம் மேலே குறிப்பிட்ட மூன்று வெண்ணிப் போர்களையும் (புறம்.65, 66; பொருநர் 143-148; அகம் 246) ஒரே போர் என்று சாஸ்திரியார் கருதுகிறார். கரிகால் ஒரு வெண்ணிப் போரையும், ஒரு வாகைப் போரையும் (அகம்.125) செய்தான் என்றும், ஒளியர், அருவாளர், பொதுவர், இருங்கோவேள், தென்னவன் முதலியோரை

23. முற்காலத் தமிழர் காலநிலை: பக். 91-93.

ஓடுக்கினான் என்றும் (பட்டினப்பாலை), வேத நெறிப்படி யாகங்கள் செய்து வாழ்ந்தான் என்றும் (புறம்.224) சாஸ்திரியார் கூறுகிறார்.[24]

சங்க காலத்தில் கரிகால் வளவன் என்ற பெயருடன் வாழ்ந்தவர் ஒருவரா? இருவரா? நீலகண்ட சாஸ்திரி ஒருவர் என்கிறார். சிவராச பிள்ளை இருவர் என்கிறார்.

நாம் யார் கருத்தை ஏற்கலாம்?

சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் இருநூறு தலைவர்களைக் காலமுறைப்படி வரிசைப்படுத்தி, அவர்கள் காலநிலையைக் கணிக்க முயலும்போது, இரு கரிகாலர்கள் சங்ககாலத்தில் இருந்தனர் என்றே தோன்றுகிறது. எனவே, நாம் சிவராச பிள்ளையின் கருத்தை ஏற்று, முதலாம் கரிகால் வளவன் வரலாற்றை இனிக் காண்போம்.

**முதலாம் கரிகால் வளவன் வரலாறு**

சோழன் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்த காலநிலையில், சென்னி வழிச் சோழனான முதலாம் கரிகால் வளவன் அழுந்தூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்துவந்தான். இவன் பெரும்பூண் சென்னியின் மகனாவான்.

முதலாம் கரிகால் வளவன் செய்த மூன்று போர்களை சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவன் வெண்ணி வாயிலில் பதினோரு வேளிர்களோடும் வேந்தர்களோடும் போர் செய்து அவர்கள் வலிமையைச் சாய்த்தான் (அகம்.246). வாகைப் பறந்தலையில் ஒன்பது மன்னர்களை ஓடஓட விரட்டியடித்தான் (அகம்.125). சேரமான் பெருஞ்சேரலாதனை வெண்ணிப் போர்க்களத்தில் தோற்கடித்தான். இந்தப் போரில் முதுகில் புண்பட்டதற்கு நாணமடைந்த சேரன் வடக்கிருந்து உயிர் விட்டான் (புறம்.65, 66; அகம்.55) சேரமான் பெருஞ்சேரலாதன், பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்று ஆராய்ச்சியில் தெரிகிறது.

24. சோழர் (1955): பக்.31-36.

முதலாம் கரிகால் வளவன் தலைநகரம் அழுந்தூர் ஆகும். வெண்ணிவாயிலில் பதினோரு வேளிரையும் வேந்தரையும் வென்றபிறகு, மக்கள் அழுந்தூரிலே ஆரவாரமாக வெற்றிவிழா கொண்டாடினார் (அகம்.*246*). இவன் தன் மகனான உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னிக்கு அழுந்தூர்வேளிடம் பெண் கொண்டான்.[25]

இவன் நாடோடி மரபினர் பலரை நாட்டில் நிலைத்து வாழும் குடிமக்களாக்கினான் (அகம்.*141*). ஆதிமந்தி-ஆட்டனத்தி போன்ற கலைஞர்களை ஆதரித்தான். முதலாம் கரிகால் வளவன் முன்னிலையில் கழார்முன்துறையில் காவிரி நீரில் இறங்கி ஆட்டனத்தி நடனமாடியபோது காவிரி நீர் அவனை அடித்துச் சென்றது என்று பரணர் கூறுகிறார் (அகம்.*376*).

கி.மு.300-275 பெரும்பூண் சென்னி



275-250 முதலாம் கரிகால் வளவன்



250-225 உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி



225-200 இரண்டாம் கரிகால் வளவன்

### வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி (கி.மு.250-225):

சோழன் முடித்தலைக் கோப் பெருநற்கிள்ளிக்குப் பிறகு, அவன் மகன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி உறையூர்ப் பகுதியை ஆண்டுவந்தான். சேரன் செங்குட்டுவன் தாயும், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் மனைவியுமான

25. 'மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப' என்ற தொல்காப்பிய நூற்பா உரையில் நச்சினார்க்கினியர் ''உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும், அவன் மகனாகிய கரிகால் பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட் கோடலும் கூறுவார்'' என்கிறார். (தொல். அகத். 30 உரை)

நற்சோணை இவன் தங்கையாவாள். எந்தக் காரணத்தாலோ, மைத்துனர்களுக்குள் போர் மூண்டது. இந்தப் போரில் இரு தரப்புச் சேனைகளிலும் ஒருவர்கூட மிஞ்சாமல் இறந்து போனார்கள். போர்வீரர்கள் மட்டுமல்லாமல் போரில் ஈடுபட்ட குதிரைகளும், யானைகளும், தேர்களும் முற்றிலும் அழிந்து போயின. சோழனும் சேரனும் மட்டுமே போர்க்களத்தில் உயிரோடு எஞ்சி நின்றார்கள். அந்தக் காலப் போர் அறப்படி, இரு வேந்தர்களும் போர் செய்யத் தொடங்கினார்கள். முடிவு? இருவருமே போர்க்களத்தில் மாண்டார்கள். போர்க்களத்தில் மயான அமைதி நிலவியது. ஏறத்தாழ, இதே காலநிலையில் தான் அசோகன் கலிங்கத்தின் மேல் படையெடுத்தான். நூறாயிரக்கணக்கான மக்கள் இறந்தும், படுகாயமுற்றும் கிடந்த போர்க்களக் காட்சியைக் கண்டு கலங்கிய அசோகன், இனிப் போர் செய்வதில்லை என்ற முடிவுக்கு வந்து புத்த மதத்தைத் தழுவினான். சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியும் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் செய்த போரின் விளைவு, சேரநாடும் கிள்ளிவழிச் சோழர் ஆண்ட உறையூர்ப் பகுதியும் சீரழிந்தன. சீரழிந்த சேர நாட்டை, நெடுஞ் சேரலாதனின் மகன் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் சீர்திருத்திப் பாதுகாத்தான். ஆனால் இந்தப் போர் கிள்ளிவழிச் சோழரின் அழிவுக்கு அடிகோலியது. வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியின் மகனான கோப்பெருஞ்சோழன், அசோகனைப் போலப் போரைச் செய்வதில்லை என்று தீர்மானித்து, தன்னைச் சுற்றிச் சான்றோர்களை வைத்துக் கொண்டு 'நல்வினை' செய்வது எப்படி என்று ஆராய்ச்சி செய்யலானான். கோப்பெருஞ்சோழனோடு கிள்ளி வழியினர் ஆட்சி முடிந்துவிட்டது. சென்னிவழிச் சோழனான உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியும் அவன் மகனான இரண்டாம் கரிகால் வளவனும் மெல்ல மெல்ல உறையூர்ச் சோழர் பகுதியைத் தம் வசமாக்கிக் கொண்டனர். கோப் பெருஞ்சோழன் இறந்ததும், இரண்டாம் கரிகால் வளவன் உறையூருக்குத் தன் தலைநகரை மாற்றிக்கொண்டு, சோழ நாடு முழுவதையும் ஆட்சி செய்யலானான்.

கிள்ளிவழிச் சோழரின் அழிவுக்குக் காரணமாயிருந்த போரை நேரில் கணடு வருந்திக் கழாத்தலையாரும், பரணரும் பாடியுள்ளார்கள்.

## உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி (கி.மு.250-225)

சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி உறையூரிலிருந்து சோழநாட்டின் ஒரு பகுதியை ஆண்டு கொண்டிருந்தபோது, சென்னி வழிச் சோழனான உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி, நெய்தலங்கானல் எனப்படும் சோழநாட்டின் கடற்கரைப் பகுதியை ஆண்டு வந்தான். இவன் முதலாம் கரிகால் வளவனின் மகன் ஆவான். இவன் மனைவி அழுந்தூர் வேளின் மகளாவாள். இவன் மகன் இரண்டாம் கரிகால் வளவன் ஆவான்.

அழுந்தூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த சென்னிவழிச் சோழர்களின் சிறிய நிலப்பகுதியை, இவன் பல போர்கள் செய்து விரிவாக்கினான். சோழநாட்டுக் கடற்கரைப் பகுதியான நெய்தலங்கானல் இவன் ஆட்சியின் கீழ் வந்தது. சேரமானின் பாமுளூரை இவன் வென்றான் (புறம். 223). தென் பரதவர்களின் வலிமையைச் சாய்த்தான் (புறம். 378). ஆரியர் தமிழ்நாட்டின் மேல் படையெடுத்தபோது, அவர்களுக்குத் துணையாக வந்த வடுகரை இளஞ்சேட் சென்னி தோற்கடித்தான் (அகம். 375, புறம். 378). நன்னனின் பாழி நகரை அழித்ததுதான் இவன் பெற்ற வெற்றிகளில் பெருமிதத்துக்கு உரியதாகும். இளஞ்சேட் சென்னி பாழிநகரை வென்றதால் சோழர்குடி செய்ய வேண்டிய கடமையைச் செய்து முடித்தான் என்று ஒரு புலவர் பாடுகிறார்.

> எழாஅத் திணிதோள் சோழர் பெருமகன்
> விளங்குபுகழ் நிறுத்த இளம் பெருஞ்சென்னி
> குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்
> செம்பு உறழ் புரிசைப் பாழிநூறி (அகம். 375; 10-13)

இளஞ்சேட் சென்னியின் முன்னோர்களான பெரும்பூண் சென்னியும் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியும் தம் படைத்தலைவர்களை அனுப்பிப் பாழிநகரை வெல்ல முயற்சி செய்து தோல்வியடைந்தார்கள். முதலாம் கரிகால் வளவன் தன் ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்ள ஒன்பது மன்னர்களோடும், பதினோரு வேளிரோடும் போர் செய்ய வேண்டியிருந்ததால், பாழிநகரை வெல்வது பற்றி அவன் நினைக்க முடியவில்லை. அவர்கள் குறையாக விட்டுச் சென்ற கடமையை இளஞ்சேட் சென்னி பாழிநகரை வென்று செய்து முடித்தான்.

அழகிய உருவமுடைய பல தேர்களை வைத்திருந்ததால் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி என்றும்.[26] பெரும்பூண் சென்னியின் பேரனாதலால் இளம் பெருஞ்சென்னி என்றும்,[27] சேரமானுடைய பாமுளூரை வென்றதால், சேரமான் பாமுளூர் எறிந்த இளஞ்சேட் சென்னி என்றும்,[28] நெய்தலங்கானல்[29] எனப்படும் சோழநாட்டுக் கடற்கரைப் பகுதியைக் கைப்பற்றி ஆட்சி செய்ததால் நெய்தலங் கானல் இளஞ்சேட் சென்னி என்றும்[30], நன்னனின் பாழிநகரைப் போர் செய்து அழித்ததால் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி என்றும்[31] இவன் அழைக்கப்பட்டான். இளஞ்சேட் சென்னி என்ற பெயருடைய பலர் இருந்தனர் என்று சிலர் கூறுவது பொருந்தாது.

## கோப்பெருஞ்சோழன் (கி.மு.225-200)

கோப்பெருஞ்சோழன் வரலாறு ஒரு சோகக் கதையாகும். சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியும் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் புரிந்த போரில் இரு தரப்புப் படைகளில் ஒருவரும் மிஞ்சாமல் இறந்ததோடு, இரு வேந்தர்களும் போர்க்களத்தில் மாண்டது கோப்பெருஞ் சோழன் உள்ளத்தில் ஓர் ஆழமான காயத்தை ஏற்படுத்தி விட்டது. போர் நெறியை வெறுத்து, அசோகனைப் போல அறநெறியிலும் அன்பு நெறியிலும் ஈடுபாடு கொண்டு, தத்துவஞானிகளோடு ஆத்மவிசாரம் செய்யலானான். பொத்தியார், பூதநாதனார், கண்ணகனார், எயிற்றியனார் என்ற அறிஞர்கள் இவனுடன் இருந்தார்கள். பாண்டிய நாட்டில் பிசிர் என்ற ஊரில் வாழ்ந்த பிசிராந்தையார் என்ற தத்துவ ஞானியைக் காணாதபோதும், அவரிடம் பெருநட்பு கொண்டு கடிதம் மூலம் அவரோடு தொடர்பு கொண்டு பழகிவரலானான்.

---

*26. உருவப்பல்தேர் இளையோன் (பொருநர். 130)*
*பொலந்தேர் மிசைப் பொலிவுதோன்றி (புறம் 4:14.)*

*27. அகம்.375*

*28. புறம்.203*

*29. சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளிக்கு உரியதாக இப்பகுதி இருந்திருக்க வேண்டும்.*

*30. புறம். 10*

*31. புறம். 370, 378.*

'நல்வினை' செய்வதில் முழு மூச்சோடு ஈடுபட்ட கோப்பெருஞ் சோழன் நாட்டு நிர்வாகத்தில் சரிவரக் கவனம் செலுத்தவில்லை. கிள்ளி, சென்னி வழிச் சோழர்களில், உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த கிள்ளி வழியினரே சோழநாட்டின் பெரும் பகுதியை ஆண்டவர்கள். சென்னி வழியினர் அழுந்தூரைச் சுற்றியிருந்த சிறிய நிலப்பகுதியை ஆண்டுகொண்டிருந்தனர். சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி இறந்தபிறகு, கிள்ளி வழியினரின் சோழநாடு சீரழிந்தது. அவனுக்குப் பிறகு ஆட்சி பொறுப்பேற்ற கோப்பெருஞ்சோழன் நாட்டின் சீரழிவைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்யவில்லை. 'நல்வினை'யைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு அறிஞர்களோடு அளாவளாவுவதில் காலங்கழித்த கோப்பெருஞ்சோழனை, எதிரிகள் எளிதில் வென்றனர். உறையூர்ச் சோழரின் கடற்கரைப் பகுதியான நெய்தலங் கானலைச் சென்னி வழிச் சோழனான இளஞ்சேட் சென்னி வென்று தன் நாட்டோடு இணைத்துக் கொண்டான். அழுந்தூரிலிருந்து காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சென்னி வழிச் சோழர் தங்கள் தலைநகரை மாற்றிக் கொண்டார்கள். மேலும், சேரமான் இளஞ்சேரல் இரும்பொறையும் கோப்பெருஞ் சோழனை வென்றதாகப் பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகம் கூறுகிறது. தங்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த நிலப்பகுதிகள் மெல்ல மெல்ல அடுத்தவர் கைக்குப் போவதைக் கோப் பெருஞ்சோழனின் இரு புதல்வர்களும் விரும்பவில்லை. தந்தையின் கையாலாகாத் தன்மையை எதிர்த்துக் கலகம் விளைவித்தனர். கோபங்கொண்ட கோப்பெருஞ்சோழன் புதல்வர்களோடு போர் செய்வதற்கு எழுந்தான். அப்போது புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற புலவர் அவனைத் தடுத்தார்.

"உன்னை எதிர்த்து வந்த இருவர் உன் பகைவர் அல்லர், நீயும் அவர்களுக்குப் பகைவன் அல்லன். நீ உயர்ந்தோர் உலகம் சென்றபிறகு, நீ விட்டுச் செல்லும் அரச உரிமை அவர்களுக்கு உரியதல்லவா? அவர்கள் உன்னிடம் தோற்றால் உன் பெருஞ்செல்வத்தை யாருக்குத் தரப் போகிறாய்? நீ அவர்களிடம் தோற்றால், உன் பகைவர் மகிழ, உனக்குப் பழிதான் மிஞ்சி நிற்கும். அதனால் புதல்வர்களோடு போர் செய்யும் எண்ணத்தை விடுவாயாக! உனக்கு ஒரு தீங்கும் வராமல் இருக்க வேண்டுமென்றால், உடனடியாக நல்வினையைச் செய்யத் தொடங்குவாயாக!" (புறம் 213)

கோப்பெருஞ்சோழன் மேலும் ஆட்சிபுரிவது நாட்டுக்கு நல்லதன்று என்று புலவர் குறிப்பால் உணர்த்தினார். கோப்பெருஞ்சோழன் ஆட்சியைத் துறந்து 'நல்வினை' செய்வதில் ஈடுபட்டான். அவனைச் சூழ்ந்து சான்றோர் சிலரும் இருந்தார்கள்.

எத்தனைச் சான்றோர்கள் சூழ்ந்திருந்தபோதும், கோப்பெருஞ்சோழன் மனம் பிசிராந்தையாருக்காகவே ஏங்கியது. கோப்பெருஞ்சோழன் உறையூரின் அரசனாக இருந்தபோது, பிசிராந்தையார் அன்னச் சேவலைத் தூது விடுவதுபோல ஒரு பாடலை எழுதி அனுப்பினார் (புறம். 67). பாண்டிய நாட்டில் தாம் வாழ்ந்தபோதும் கோப்பெருஞ் சோழனே தம்முடைய அரசன் என்று கூறிக்கொண்டார்:

"உம் அரசன் யார்? என்று கேட்பீரானால், என் அரசன் கோப்பெருஞ்சோழன் ஆவான். பாணர் சுற்றத்தின் பசிக்குப் பகைவனாகி உறையூரில் அவன் ஆட்சி செய்கிறான். குற்றமற்ற நட்புக்கொண்ட பொத்தியாரோடு கூடி, வாய்நிறைந்த பெருஞ்சிரிப்புச் சிரித்துக்கொண்டு, நாள்தோறும் மகிழ்ச்சியோடு வாழ்கிறான்' என்று பிசிராந்தையார் ஒரு பாடலில் கூறுகிறார்.[32]

கோப்பெருஞ்சோழன் அரசு துறந்து அல்லல் பட்ட போதும், பிசிராந்தையாரையே எண்ணிக் கொண்டிருந்தான். அவனைச் சூழ்ந்திருந்த சான்றோர், "நீங்கள் உறையூரில் ஆட்சி செலுத்தியபோதே பிசிராந்தையார் உங்களை வந்து பார்க்கவில்லை. இப்போது எங்கே வரப்போகிறார்?" என்றனர். கோப்பெருஞ்சோழனோ, "நான் செல்வத்தில் வாழ்ந்தபோது அவர் வரவில்லை என்றாலும், நான் துன்பப்படும் இப்போது நிச்சயம் வருவார். அவர்தான் என் உயிரைக் காப்பவர்" என்றான்.[33]

---

32. *'நும்கோ யார்?' என வினவின், எம்கோ*
*..... ..... ..... பாணர்*
*பைதல் சுற்றத்துப் பசிப்பகை ஆகி,*
*கோழியோனே, கோப்பெருஞ்சோழன் -*
*பொத்துஇல் நண்பின் பொத்தியொடு கெழீஇ,*
*வாய்ஆர் பெருநகை வைகலும் நக்கே* (புறம். 212:1, 6-10)

33. *தென்னம் பொருப்பன் நல்நாட்டுள்ளும்*
*பிசிரோன் என்ப, என் உயிர் ஓம்புநனே',*
*செல்வக் காலை நிற்பினும்*
*அல்லற் காலை நில்லலன் மன்னே* (புறம். 215:6-9)

அரசு துறந்து 'நல்வினை' செய்வதில் ஈடுபட்ட சோழன் இறுதியில் வடக்கு நோக்கி இருந்து உண்ணாநோன்பால் உயிர்விடத் தீர்மானித்தான். அவனைச் சூழ்ந்திருந்த சான்றோரும் அவனோடு வடக்கிருக்க முடிவு செய்தார்கள், ஒவ்வொரு சான்றோர்க்கும் வடக்கிருக்க ஒவ்வோர் இடம் ஒதுக்கப்பட்டது. பொத்தியார் வடக்கிருக்க முனைந்தபோது கோப்பெருஞ்சோழன் தடுத்துவிட்டான். பொத்தியார் மனைவி கருவுற்றிருந்தாள். 'உமக்குப் புதல்வன் பிறந்த பிறகு நீர் வடக்கிருக்கலாம்' என்று சோழன் கூறினான். 'பிசிராந்தை யாரும் வடக்கிருக்க ஓர் இடம் ஒதுக்குங்கள்' என்று கோப்பெருஞ் சோழன் சொன்னபோது, சான்றோர்கள் திடுக் கிட்டார்கள்.

"பிசிராந்தையாரும் நீங்களும் ஒருவரை ஒருவர் இதுவரை பார்த்ததில்லை. ஒருவரைப்பற்றி ஒருவர் கேள்விப் பட்டிருக்கிறீர்கள். அவ்வளவே! பல ஆண்டுகள் நெருங்கிப் பழகியவர்களே, இறுதிக்காலத்தில் நட்புக்கேற்ப நடப்பது அரிது" என்று கூறினார்கள். கோப்பெருஞ்சோழனோ, "பிசிராந்தையார் அப்படிப்பட்டவர் அல்லர். இப்படி நான் துன்பப்படும் காலத்தில் அவர் வாராமல் இருக்கமாட்டார். அதனால் அவரும் வடக்கிருக்க இங்கோர் இடம் ஒதுக்கிவையுங்கள்" என்று பிடிவாதமாகச் சொன்னான்.[34]

கோப்பெருஞ்சோழன் எண்ணம் வீணாகவில்லை. பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கும் இடத்தைத் தேடிவந்தார். ஆற்றின் நடுவே இருந்த நிலப்பகுதியில், மரநிழலில் அமர்ந்து, உண்ணா நோன்பிருந்து கோப்பெருஞ்சோழன் தன் உடலை வாட்டிக் கொண்டிருந்தான்.[35] பிசிராந்தையாரும் தனக்கென்று கோப்பெருஞ்சோழனால் ஒதுக்கப்பட்ட இடத்தில் அமர்ந்து

---

*34. ஐயம் கொள்ளன்மின், ஆர் அறிவாளீர்!...*
*இன்னது ஓர் காலை நில்லலன்;*
*இன்னே வருகுவன்; ஒழிக்க, அவற்கு இடமே!*

*(புறம். 216: 5, 11-12.)*

*35. உள் ஆற்றுக் கவலைப் புள்ளி நீழல்,*
*முழூஉ வள்ளூரம் உணக்கும் மள்ள!* *(புறம். 219:1-2.)*

வடக்கிருந்தார். இக்காட்சியைக் கண்ட பொத்தியார் வியப்படைந்தார்.

"பிசிராந்தையார் வருவார்' என்று சொன்ன கோப் பெருஞ்சோழனின் பெருமையும், அவன் சொல் பழுதாகாமல் வந்த பிசிராந்தையின் அறிவும் வியக்குந்தோறும் வியக்குந்தோறும் வியப்பைக் கடந்து செல்கிறது. தன் செங்கோல் செல்லாத தேசத்தில் வாழும் சான்றோனின் நெஞ்சைக் கவர்ந்த புகழுடையவன் கோப்பெருஞ்சோழன்" என்று கூறினார்.[36]

பிசிராந்தையார் வந்ததைக் கண்டு வியப்படைந்தவர்களில் கண்ணகனார் என்பவரும் ஒருவர். அவர் தம் வியப்பைப் பின்வருமாறு தெரிவித்தார்:

"பொன்னும் பவழமும் முத்தும் மாணிக்கமும் வெவ்வேறிடத்தில் தோன்றுவனவாயினும், அணிகலனைச் செய்யும்போது கோவையாகத் தொடுக்கப்பட்டு ஓரிடத்திலே தோன்றும். அதுபோல, சான்றோர் சான்றோர் பக்கமே சார்வர். சாலாதவர் சாலாதவர் பக்கமே சேர்வர்."[37]

"புதல்வன் பிறந்த பிறகு வருக!" என்று கோப் பெருஞ்சோழனால் உறையூருக்குத் திருப்பி அனுப்பப்பட்ட பொத்தியார், உறையூரில் கோப்பெருஞ்சோழன் வீற்றிருந்த மன்றம் பாழாகிக் கிடந்ததைக் கண்டு புலம்பினார்:

---

36. நினைக்கும் காலை மருட்கை உடைத்தே...
'வருவன்' என்ற கோனது பெருமையும்,
அது பழுது இன்றி வந்தவன் அறிவும்,
வியத்தொறும் வியத்தொறும் வியப்பு இறந்தன்றே
... தன்கோல் இயங்காத் தேயத்து உறையும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்று இசை
அன்னோன். (புறம். 217:1,7-12.)

37. பொன்னும் துகிரும் முத்தும், மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய ஆயினும், தொடை புணர்ந்து;
அருவிலை நன்கலம் அமைக்கும் காலை,
ஒருவழித் தோன்றியாங்கு - என்றும் சான்றோர்
சான்றோர் பாலர் ஆகுப;
சாலார் சாலார் பாலர் ஆகுபவே (புறம்: 218.)

"யானையை இழந்து வருந்தும் யானைப்பாகன், அது தங்கியிருந்த யானைக் கூடத்தில் கம்பம் வறிதே நிற்பதைக் கண்டு கலங்கியது போல, தேர்வண்கிள்ளி (கோப் பெருஞ்சோழன்) இல்லாத தலைநகரின் மன்றத்தைக் கண்டு நான் கலங்கினேனே!"[38]

வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனும், பிசிராந்தையாரும், பிற சான்றோர்களும் இறந்தனர். கோப்பெருஞ்சோழன் இறந்த இடத்தில் நடுகல் எழுப்பப்பட்டது. அந்த நடுகல்லைக் கண்ட பொத்தியார் பின்வருமாறு இரங்கிப் பாடினார்:

"இவன் பாடுவோர்க்குக் கொடுத்துப் பல புகழ் கொண்டவனாயிற்றே! ஆடுவோர்க்குக் கொடுத்த பேரன்புடையவனாயிற்றே? அறவோர் புகழும்படி நீதிநூலை ஆராய்ந்து செங்கோல் செலுத்தியவனாயிற்றே! போரில் திறமைமிக்கவர் புகழ்ந்த செறிந்த நட்புடையவனாயிற்றே! மகளிர்க்கு மென்மையும், வலியோருக்கு வன்மையும் உடையவனாயிற்றே! பழுதில்லாக்கேள்வி ஞானமுடைய சான்றோருக்குப் புகலிடமாயிற்றே! இத்தகையவனின் இனிய உயிரைக் கூற்றம் எடுத்துச் சென்றதே! வாய்மொழிப் புலவர்களே! வாருங்கள், துன்பமுறும் சுற்றத்தவரோடு சேர்ந்து அந்தக் கூற்றத்தை வைவோம், வாருங்கள்! உலகம் துன்பமுற, கேடில்லாத புகழைச் சூடிக்கொண்டு, நம்மைப் பாதுகாக்கும் மன்னன் நடுகல் ஆகிவிட்டானே!" (புறம். 221).

புதல்வன் பிறந்த பிறகு, பொத்தியார் கோப்பெருஞ் சோழன் நடுகல்லிடம் வந்து, தான் வடக்கிருப்பதற்கு ஓர் இடத்தைத் தேடினார். சோழன் நடுகல்லுக்கு அருகிலேயே ஓர் இடம் கிடைத்தது (புறம். 222-223). பொத்தியார் அங்கு அமர்ந்து வடக்கிருந்து உயிர்நீத்தார்.

புறநானூற்றுப் பாடல்கள் கூறும் கோப்பெருஞ்சோழன் வரலாறு இதுவாகும்.

---

*38.* பெருங்களிறு இழந்த பைதற்பாகன்...
வெளில் பாழாகக் கண்டு கலுழ்ந்தாங்கு,
கலங்கினன் அல்லனோ, யானே - பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேர் இசை மூதூர் மன்றம் கண்டே (புறம். 220:2,4-7)

**இரண்டாம் கரிகால் வளவன் (கி.மு. 225 - 200):**

இரண்டாம் கரிகால் வளவன் தாய் வயிற்றில் இருந்தபோதே அவனது தந்தை இறந்து போனான்[39] அவன் சிறுவனாக இருந்தபோது, அவனது அரச உரிமையைக் கவர அவன் குடியைச் சேர்ந்தவர்களே அவனைச் சிறையி லிட்டார்கள். கரிகால் வளவன் தன் திறமையால் சிறையிலிருந்து தப்பி அரச உரிமையைப் பெற்றான் (பட்டினப். 221-227). தன் அரசைப் பெற்றதோடு அமையாமல் பகைவர் நாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அவற்றை அழித்தான் (பட்டினப்.229 - 269). சேர பாண்டியர்களை வெண்ணிப் போர்க்களத்தில் தோற்கடித்தான் (பொருநர். 139-148). ஒளியர், அருவாளர், வடவர், குடவர், தென்னவன், இருங்கோவேள் முதலியோரை அடக்கிவைத்தான். அவன் வலிமையைக் கண்டு மக்கள் வியந்தார்கள். 'கரிகால் வளவன் மலையையும் எடுப்பான்; கடலையும் தூர்ப்பான்; வானத்தைக் கீழே கொண்டு வருவான்; காற்றையும் திசை மாறி வீசச் செய்வான்' என்று பேசிக் கொண்டார்கள் (பட்டினப். 269-282).

போர் செய்வதில் மட்டுமன்றி, அற நெறிப்படி முறை தவறாமல் ஆட்சி செய்வதிலும் கரிகால் வளவன் சிறந்தவன். அறங்கூறு அவையத்தோரே புகழும்படி மக்கள் வழக்குகளைத் திறமையாகத் தீர்த்துவைத்தான் (பொருநர். 230- 231, 187-188; புறம். 224).

கரிகால் வளவன் காடுகளை அழித்துக் கழனிகள் ஆக்கினான். நாடெங்கும் நீர்நிலைகளைப் பெருக்கி வளம் பெருகச் செய்தான் (பட்டினப். 283-284).

கோப்பெருஞ்சோழன் இறந்த பிறகு காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து உறையூருக்குத் தலைநகரை மாற்றிய கரிகால் வளவன், பகைவர் தாக்காதவாறு உறையூரைப் பாதுகாப்புடையதாகச் செய்தான் (பட்டினப்.285-291).

மனைவி மக்களோடு வாழ்வாங்கு வாழ்ந்த கரிகால் வளவன் வேதமுறைப்படி வேள்விகள் பல செய்து இவ்வுலகை நீத்துச் சென்றான் (பட்டினப்.295-296; புறம்.224).

39. தாய் வயிற்றிலிருந்து தாயம் எய்தி - பொருநர். 132.

**கரிகால் வளவனைப் பற்றிய பிற்காலத்துக் கதைகள்**

காலப்போக்கில் கரிகால்வளவனைச் சுற்றிப் பல கதைகள் எழுந்தன. இவற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

1. *சிறையிலிடப்பட்ட கரிகால் வளவன் சிறையிலிருந்து தப்பியபோது நெருப்பிலே கால் சிக்கிக் கரிந்துவிட்டதால் 'கரிகாலன்' என்ற பெயரைப் பெற்றான்.*[40]

மூன்று உலகங்களையும் அளப்பதற்கு நீட்டிய காலில் நெருப்பு பட்டுவிட்டதால் கரிகாலன் கால் இவ்வுலகம் ஒன்றையே அளந்தது.[41]

சோழநாட்டுக்கு ஒரு அரசனைத் தேர்ந்தெடுக்கச் சான்றோர்கள் கழுமலத்திலிருந்து ஒரு யானையை அனுப்பினார்கள். யானை நேரே கருவூருக்குச் சென்று, அங்கிருந்த கரிகால்வளவனைச் சுமந்துகொண்டுவர, அவனையே சான்றோர்கள் சோழநாட்டு மன்னன் ஆக்கினார்கள்.[42]

இரும்பிடர்த் தலையார் என்ற புலவர் கரிகால் வளவனின் தாய் மாமன் ஆவார். அவர் உதவியோடு கரிகால் வளவன் ஆட்சியைப் பெற்றான்.[43]

---

*40, 41. முச்சக்கரமும் அளப்பதற்கு நீட்டிய கால்
இச்சக்கரமே அளந்ததால் - செய்ச்செய்
அரிகால்மேல் தேன் தொடுக்கும் ஆய்புனல்நீர் நாடன்
கரிகாலன் கால் நெருப்பு உற்று.
(பொருநர், பட்டினப்பாலை தனி வெண்பா., கி.பி.பத்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது)*

*42. கழுமலத்து யாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென்றதனால் - விழுமிய
வேண்டினும் வேண்டாவிடினும், உறற்பால
தீண்டா விடுதல் அரிது (பழமொழி, 62)
(விழுமியோன் = கரிகால் வளவன் - பழைய உரை; கி.பி.750இல் எழுதப்பட்டது)*

*43. சுடப்பட்டு உயிர்உய்ந்த சோழன் மகனும்
பிடர்த்தலைப் பேரானைப் பெற்றுக் - கடைக்கால்
செயிர்அறு செங்கோல் செலீஇயினான்; - இல்லை
உயிர் உடையார் எய்தா வினை (பழமொழி, 105; கி.பி. 750)
(சோழன் மகன் = கரிகால் வளவன் - பழைய உரை)*

2. கரிகால் வளவன் அவையில் தம் வழக்கைத் தீர்த்துக்கொள்ள வந்த முதியவர்கள் அவன் இளைஞனாக இருப்பதைக் கண்டு, 'நம் வழக்கை முடிவு செய்யும் தகுதி இவனுக்கு உண்டா? என்று ஐயமுற்றார்கள். மறுநாள் கரிகால் வளவன் நரை தாடி கட்டி முதியவன்போல வேடம் பூண்டு அவையில் அமர்ந்தான். தன் வாதத் திறமையால் முதியோர் கொண்டுவந்த வழக்கைச் சிறப்பாக முடிவு செய்தான்.[44]

3. காவிரிக்கு அணை கட்டுவதற்காக இலங்கையிலிருந்து பன்னீராயிரம் ஆட்களைச் சிறைபிடித்து வந்தான்.[45]

4. கரிகால் வளவன் இமயமலை வரை சென்று அங்குத் தன் புலிச்சின்னத்தைப் பொறித்து மீண்டான். திரும்பி வருகையில் வச்சிரம், மகதம், அவந்தி நாட்டு வேந்தர்கள் அவனுக்குப் பரிசுப் பொருளைத் தந்தனர்.[46]

5. ஆதிமந்தி கரிகால் வளவன் மகள், ஆட்டனத்தி என்ற சேரமன்னனை மணந்திருந்தாள். ஆட்டனத்தியைக் காவிரி வெள்ளம் அடித்துச் செல்ல, ஆதிமந்தியும் அவன் பின்னே சென்று அழைக்க, கடல் தெய்வம் அவனைக் காப்பாற்றி அவளிடம் தந்தது.[47]

---

44. 'உரைமுடிவு காணான்; இளமையோன்' என்ற
நரைமுது மக்கள் உவப்ப, - நரைமுடித்து,
சொல்லால் முறை செய்தான் சோழன், குலவிச்சை
கல்லாமல் பாகம் படும் (பழமொழி, 21)
இளமை நாணி, முதுமை எய்தி,
உரை முடிவு காட்டிய உரவோன் (மணிமேகலை 4:107-108)

45. South India and Sri Lanka - K.K. Pillai (1975), p.134.

46. செருவெங் காதலின் திருமாவளவன்....
இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலை
கொடுவரி ஒற்றி, கொள்கையின் பெயர்வோற்கு
மாநீர் வேலி வச்சிர நல்நாட்டுக்
கோன்இறை கொடுத்த கொற்றப்பந்தரும்,
மகத நல்நாட்டு வாள்வாய் வேந்தன்
பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்,
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபின் தோரண வாயிலும் (சிலப். 5:90, 97-104)

47. மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ள, தான் புனலின்பின் சென்று,
'கல்நவில் தோளாயோ!' என்னக் கடல் வந்து
முன் நிறுத்திக் காட்ட, அவனைத் தழீஇக் கொண்டு
பொன்அம் கொடிபோலப் போதந்தாள். (சிலப். 21:11-15)

இந்தக் கதைகளுக்குச் சங்கப் பாடல்களில் ஆதாரம் இல்லை. இரும்பிடர்த்தலையார், பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதியைப் பாடியுள்ளார்.[48] அவருக்கும் கரிகால் வளவனுக்கும் என்ன உறவு என்பதைச் சங்கப் பாடல்கள் கூறவில்லை.

ஆதிமந்தியும் ஆட்டனத்தியும் நடனமாடும் தம்பதிகள். கழார்த் துறையில் முதலாம் கரிகால் வளவன் முன்னிலையில் காவிரி நீரில் இறங்கி ஆட்டனத்தி நடனமாடியபோது, காவிரி வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டான். மருதி என்பவள் அவனைக் காப்பாற்றி ஆதிமந்தியிடம் ஒப்படைத்தாள்.[49] ஆதிமந்தி கரிகால் வளவன் மகள் என்றோ, ஆட்டனத்தி சேரமன்னன் என்றோ மருதி கடல் தெய்வம் என்றோ சங்கப் பாடல்கள் கூறவில்லை.

பிற்காலத்தில் ஆந்திரத்தில் வாழ்ந்த தெலுங்கு ரேனாடு சோழர்கள் தங்களைக் கரிகால் வளவன் சந்ததியினர் என்று சொல்லிக் கொண்டார்கள். வேறு பலரும் தங்களைக் கரிகால் வளவனோடு தொடர்புபடுத்திக் கொண்டு பேசினார்கள். இடைக்காலச் செப்பேடுகளிலும்[50] இலக்கியங்களிலும்[51] கரிகால் வளவன் புகழப்பட்டான். இவையெல்லாம் சங்ககாலச் சோழர்களில் கரிகால் வளவன் தலைசிறந்தவன் என்பதைக் காட்டுகின்றன.

### சேட்சென்னி நலங்கிள்ளி (கி.மு.200-175):

சேட்சென்னி நலங்கிள்ளி, உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியின் பேரன். இரண்டாம் கரிகால் வளவன் மகன். சேட்சென்னி நலங்கிள்ளி என்ற இவன் பெயரில் சென்னி,

---

48. புறம்.3
59. அகம்.76, 135. 222, 236, 376, 396
50. புண்யகுமாரன் மாலேபாடு செப்பேடு - E.I.XI-35 (கி.பி.7-8ஆம் நூற்றாண்டு)
51. தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
 பத்தொடு ஆறு நூறாயிரம் பெறப்
 பண்டு பட்டினப்பாலை கொண்டதும் (கலிங்கத்துப்பரணி 8:21)
 மண்கொண்ட பொன்னிக்கரைகட்ட வாராதான்
 கண் கொண்ட சென்னிக் கரிகாலன்
 (குலோத்துங்க சோழனுலா, 17.)

கிள்ளி என்ற இரு வழிச் சோழர்களின் பெயரும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சென்னிவழிச் சோழனான இரண்டாம் கரிகால் வளவன், கிள்ளிவழியினருக்குரிய உறையூர்ப் பகுதியையும் சேர்த்து ஆளத் தொடங்கிய பின் இரு வழியினரின் பெயரையும் இணைத்துத் தன் மகனுக்குச் சேட்சென்னி நலங்கிள்ளி என்ற பெயரை வைத்தான். 'சேட் சென்னி நலங்கிள்ளி' என்று பாடல்கள் (புறம். 27, 225) இவனை அழைத்தபோதும், பாடலின் அடிக்குறிப்புச் 'சோழன் நலங்கிள்ளி' என்றே அழைக்கின்றது.

இரண்டாம் கரிகால் வளவன் உறையூரிலிருந்து ஆட்சி செய்தவரையில், கோப்பெருஞ் சோழன் மகனான நெடுங்கிள்ளி அடங்கியிருந்தான். கரிகால் வளவன் இறந்து நலங்கிள்ளி ஆட்சிக்கு வந்ததும், நெடுங்கிள்ளி கலகம் விளைவித்தான். குடிமக்களிடம் சென்று தனது பழைய உரிமையை எடுத்துக்கூறி, அவர்களிடம் பணமும் படையும் பெற்று நலங்கிள்ளியை எதிர்த்தான்.[52]

நலங்கிள்ளிக்குரிய ஆவூர்க்கோட்டையைக் கைப்பற்றி, கோட்டையை அடைத்துக்கொண்டு உள்ளே இருந்தான். கோபங் கொண்ட நலங்கிள்ளி, 'நெடுங்கிள்ளியை அழிப்பேன்!' என்று வீரசபதம் செய்தான்.

"மெல்ல வந்து என் காலில் விழுந்து, 'ஈவாயாக!' என்று இரந்திருந்தால் அவனுடைய பழைய அரச உரிமையை மட்டுமல்லாமல், என் உயிரையும் கொடுத்திருப்பேன். ஆனால் என் ஆற்றலை மதிக்காமல் என் உள்ளத்தை நோகச் செய்த அறிவில்லாதவன், தூங்கும் புலியை இடறிய குருடனைப் போலப் பிழைத்துப் போவது அரிதாகும். யானையின் காலில் அகப்பட்ட மூங்கில் முளையைப் போல், அவனை நான் அழிக்காவிட்டால், அன்பில்லாத விலைமகளிரை அணைத்தவன் ஆவேனாக!" (புறம்.73).

---

52. *'மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்*
*பால்தர வந்த பழவிறல் தாயம்*
*எய்தினம் ஆயின், எய்தினம் சிறப்பு' எனக்*
*குடிபுரவு இரக்கும் கூர்இல் ஆண்மைச்*
*சிறியோன்.* *(புறம்.75:1-5)*
*என்று நலங்கிள்ளி நெடுங்கிள்ளியை இகழ்கிறான்.*

வீரசபதம் செய்த நலங்கிள்ளி ஆவூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். முற்றுகை நெடுநாள் நீடித்தது. நெடுங்கிள்ளி வெளியில் வரவில்லை. கோட்டைக்குள் அகப்பட்ட குடிமக்கள் உணவும் நீரும்கூட இன்றித் துன்புறலாயினர். இந்நிலையில் கோவூர் கிழார் என்ற புலவர் கோட்டைக்குள் சென்று நெடுங்கிள்ளிக்கு அறிவுரை கூறினார்:

"யானைகள் குளத்தில் இறங்கி நீராடாமலும் நெற் கவளமும் நெய்ச்சோறும் பெறாமலும் பெருமூச்சு விட்டுப் பிளிறுகின்றன. பால் இல்லாமல் குழந்தைகள் அலறுகின்றன. மகளிர் பூவில்லாமல் வெறுந்தலையை முடிக்கின்றனர். தண்ணீர் இல்லாமல் தவிக்கும் வீடுகளில் துன்பக்குரல் கேட்கிறது. தலைவனே! நீ அறவோன் ஆனால், 'இக்கோட்டை உன்னுடையது' என்று கூறி நலங்கிள்ளிக்குத் திறந்துவிடு. மறவோன் (வீரன்) ஆனால் வெளியில் வந்து அவனோடு போர் செய். அறவோனும் மறவோனும் ஆகாமல் கோட்டைக் கதவை அடைத்துக்கொண்டு உள்ளே பதுங்கியிருப்பது வெட்கப்படத்தக்க செயலாகும்" (புறம்.44).

ஆவூர்க் கோட்டையை விட்டுவிட்டு நெடுங்கிள்ளி உறையூர்க் கோட்டையைக் கைப்பற்றினான். உறையூர் நெடுங்கிள்ளி தந்தையான கோப்பெருஞ்சோழன் ஆண்ட ஊராகும். எனவே, நெடுங்கிள்ளிக்கு உறையூரில் உரிமையும் ஆதரவும் இருந்தது. நலங்கிள்ளியின் தந்தையான கரிகால் வளவன் உறையூரைக் கைப்பற்றி அங்கு ஆட்சி செய்ததால் நலங்கிள்ளி தன் உரிமையை நிலைநாட்ட உறையூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். உறையூரைப் பொறுத்தவரை இருவர் பக்கமும் நியாயம் இருந்தது. எனவே, கோவூர் கிழார் இருவருக்கும் சமாதானம் செய்துவைக்க முயன்றார்.

"உன் பகைவன் பனந்தோடு அணிந்த சேரன் அல்லன்; வேப்பமாலை அணிந்த பாண்டியன் அல்லன். உன் மாலையும் ஆத்திப்பூவால் தொடுக்கப்பட்டுள்ளது. உன்னோடு போர் செய்பவன் மாலையும் ஆத்திப் பூவாலேயே தொடுக்கப் பட்டுள்ளது. ஒருவர் தோற்றாலும் தோற்பது உங்கள் சோழர் குடியே அல்லவா? நீங்கள் இருவருமே போரில் வெற்றி

பெறுவது இயற்கை அல்லவே! அதனால் உங்கள் செய்கை உங்கள் குடிப்பெருமைக்கு உகந்தது அல்ல. நீங்கள் கொண்ட பகை மற்ற வேந்தர்களுக்கு உவகையே தரும்'' (புறம்.45).

கோவூர் கிழாரின் அறிவுரையை இருவருமே ஏற்கவில்லை. உறையூர் முற்றுகை தொடர்ந்தது. இந்நிலையில் இளந் தத்தன் என்ற புலவர் நலங்கிள்ளியைப் பார்த்துவிட்டு, நெடுங்கிள்ளியைக் காண உறையூருக்குள் நுழைந்தார். இளந்தத்தன் நலங்கிள்ளியின் ஒற்றனாக இருக்கலாம் என்று ஐயுற்ற நெடுங்கிள்ளி புலவரைக் கொல்லப் போனான். கோவூர்கிழார் குறுக்கிட்டு, 'பரிசிலர் வாழ்க்கை பிறருக்குத் தீமை செய்ய அறியாதது' என்று கூறி இளந்தத்தனைக் காப்பாற்றினார் (புறம்.47).

நெடுங்கிள்ளியின் கலகம் 'உட்பகை' என்று கூறப் படுகிறது (புறம்.68). இந்த உட்பகை (உள்நாட்டுக் கலகம்) நீடித்த வரை, நலங்கிள்ளி சிக்கனமாக நாட்டை நடத்திச் சென்றான். உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்ற புலவர் அவனை உலோபி, கருமி, நெஞ்சமுத்தம் உள்ளவன் என்று மறைமுகமாகத் தாக்குவதைச் சில பாடல்களில் காண்கிறோம்:

''செல்வத்தைப் படைத்து என்ன பயன்? அறம்பொருள் இன்பங்களை ஆக்கவல்ல செல்வத்தை வெறுமனே பூட்டி வைக்கலாமா?''[53] என்ற கருத்து ஒரு பாடலில் தொனிக்கிறது. நலங்கிள்ளியை நாடி வரும் பரிசிலர் - அவர்கள் திறமை சாலிகளோ திறமையற்றவர்களோ - அவர்கள் வயிற்றுப் பசியை அவன் தீர்க்க வேண்டாவா? என்று கேட்பதுபோல ஒரு பாடல் அமைந்துள்ளது.[54] நலங்கிள்ளியின் போர்களில் ஈடுபட்டு அவனுக்கு வெற்றி தேடித் தரும் வீரர்களைக்கூட அவன் வறுமையில் வாடச் செய்கிறானே! நாலுகால் பந்தல்

---

*53. ..... ..... ..... கூத்தர்*
*ஆடுகளம் கடுக்கும் அகநாட்டையே;*
*அதனால், அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்*
*ஆற்றும், பெரும! நின் செல்வம்;*
*ஆற்றாமை நின் போற்றாமையே* (புறம். 28:13-17)

*54. வல்லார் ஆயினம் வல்லுநர் ஆயினும்*
*வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி*
*அருள வல்லை ஆகுமதி* (புறம். 27:15-17.)

போட்ட சிறு குடிசையில் அல்லவா அவர்கள் வாழ்கிறார்கள்! என்று மற்றொரு பாடல் சுட்டிக் காட்டுகிறது.[55] நலங்கிள்ளி ஆழமான குணமுடையவன். அவனைப் புரிந்து கொள்வது கடினம் என்று வேறொரு பாடல் கூறுகிறது.[56] நெடுங்கிள்ளியின் உட்பகையை ஒழித்துக் கட்டுவதற்காக, நாட்டின் வருவாயைப் போருக்குச் செலவிட வேண்டியிருந்தபடியால், நலங்கிள்ளி சிக்கனமாக இருக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்று கொள்ள வேண்டும்.

நெடுங்கிள்ளி காரியாற்றில் இறந்து போனான். சோழநாட்டின் 'உட்பகை' (உள்நாட்டுக் கலகம்) ஒருவழியாக முடிந்துவிட்டது. நலங்கிள்ளி மீண்டும் உறையூரில் அமர்ந்து ஆட்சி செய்யலானான். உலோபியாக இருந்தவன் பரிசிலர்க்கு வாரி வழங்கலானான்.[57]

சோழநாட்டின் வயல் வளமும், அயல்நாட்டு வாணிகமும் நலங்கிள்ளிக்குச் செல்வத்தை வாரிக் கொடுத்தன. பாய்மரம் கட்டிய கப்பல்கள் வெளிநாடுகளிலிருந்து நேராகப் புகாருக்குள் நுழைந்தன.[58] புகாரிலே இறக்குமதி செய்யப்பட்ட பொருட்கள்

---

55. .... நின் படை கொள் மாக்கள்
பற்றா மாக்களின் பரிவு முந்துறுத்துக்
கூவைதுற்ற நாற்கால் பந்தர்ச்
சிறுமனை வாழ்க்கையின் ஒரீஇ, வருநர்க்கு
உதவி ஆற்றும் நண்பின் பண்புடை
ஊழிற்றாக, நின் செய்கை (புறம். 29:17-22.)

56. அறி அறிவு ஆகாச் செறிவினை ஆகி,
களிறு கவுள் அடுத்த எறிகல் போல
ஒளித்த துப்பினை (புறம். 30:8-10.)

57. மன்பதை புரக்கும் நல்நாட்டுப் பொருநன்,
உட்பகை ஒரு திறம் பட்டென....
உறந்தை யோனே குரிசில்;
பிறன் கடை மறப்ப, நல்குவன், செலினே
(புறம். 68:10-11, 18-19.)

58. .... .... .... கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரம் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடல்பல் தாரத்த நாடுகிழவோயே (புறம். 30:11-15)

படகுகளில் பல இடங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டன.[59] கடற்படை கொண்டு பெரும்பொருளை நலங்கிள்ளி கொண்டு வந்தான் என்று ஒரு பாடல் கூறுகிறது.[60] ரோமாபுரியிலிருந்து புறப்பட்ட கப்பல்கள் சேரநாட்டு முசிறித் துறைமுகத்துக்கு வந்ததுபோல, சீனாவிலிருந்தும் தென்கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்தும் புறப்பட்ட கப்பல்கள் நேரே காவிரிப்பூம் பட்டினத்திற்கு வந்தன என்று கருதலாம்.

நெடுங்கிள்ளியின் 'உட்பகை' ஒழிந்தபின், நலங்கிள்ளி பிற நாடுகளின் மேல் படையெடுத்துச் சோழநாட்டின் எல்லையையும் பொருளாதாரத்தையும் விரிவுபடுத்தினான். பொருளும், இன்பமும் அறத்தின் பின்னே எண்ணப்படுவது போலச் சேரபாண்டியர் குடைகள் அவன் குடைக்குப் பிற்பட்டன என்றும்,[61] நலங்கிள்ளி எங்கே தங்கள் நாட்டின் மேல் படையெடுப்பானோ என்று வடபுலத்தரசர் உறக்கம் இழந்தார்கள் என்றும்,[62] சேரன் வஞ்சியையும், பாண்டியன் மதுரையையும் நலங்கிள்ளி வென்று பரிசலர்க்குத் தரும் ஆற்றலுடையவன் என்றும்,[63] போர்க்களங்களில் பலமுறை பெருஞ்சோறு கொடுத்தான் என்றும்[64] கோவூர் கிழார் நலங்கிள்ளியின் புகழைப் பாடுகிறார்.

நெடுங்கிள்ளியின் வீழ்ச்சிக்குப் பிறகு, நலங்கிள்ளி பெற்ற பெருவெற்றி ஏழெயில் கதவம் எறிந்ததாகும். பாண்டிய

---

59. *புறம்.400; 20-23*
60. *கடற்படை அடல்கொண்டி.,*
*நலங்கிள்ளி* (*புறம்:382:1, 5.*)
61. *சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்*
*அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல,*
*இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை* (*புறம்.31:1-3*)
62. *குணகடல் பின்னதாக, குடகடல்....*
*வலமுறை வருதலும் உண்டு என்று அலமந்து*
*நெஞ்சு நடுங்கு அவலம் பாய,*
*துஞ்சாக் கண்ண, வடபுலத்து அரசே* (*புறம் 31:13, 15-17*)
63. *கடும்பின் அடுகலம் நிறையாக, நெடுங்கொடிப்*
*பூவா வஞ்சியும் தருகுவன்; ஒன்றோ? ....*
*ஒள்நுதல் விறலியர் பூவிலை பெறுக! என*
*மாட மதுரையும் தருகுவன்* (*புறம் 32:1-2, 4-5*)
64. *ஊன் சோற்று அமலை பாண்கடும்பு அருத்தும்*
*செம்மற்று அம்ம, நின் வெம்முனை இருக்கை* (*புறம். 33:14-15*)

நாட்டிற்குள் ஏழு கோட்டைகள் கட்டிக்கொண்டு சுதந்திரமாக வாழ்ந்த ஒரு குறுநிலத் தலைவன் மேல் படையெடுத்து, அவன் நிலப்பகுதியைக் கைப்பற்றி, அவன் மதில் கதவுகளில் நலங்கிள்ளி சோழரின் புலிச் சின்னத்தைப் பொறித்தான்.[65] (சிவகங்கையைச் சார்ந்த ஏழுபொன் கோட்டை, ஏழெயிலாக இருக்கலாம்.[66])

அத்தருணம் பாண்டியன் இறந்துபோக, இளைஞனாக இருந்த அவன் மகன் நெடுஞ்செழியன் ஆட்சிக்கு வந்தான். "இவனோ இளைஞன். இவனை வென்றால் பெறும் செல்வமோ பெரிது" என்று நினைத்த நலங்கிள்ளி சேரனையும் ஐந்து குறுநிலத் தலைவர்களையும் படைத்துணையாகச் சேர்த்துக் கொண்டு பாண்டிய நாட்டின் மேல் படையெடுத்தான். எதிர்பார்த்ததற்கு மாறாக, நெடுஞ்செழியன் எழுவர் கூட்டணியைத் தலையாலங்கானத்தில் நடந்த போரில் முறியடித்தான். சேரனைச் சிறைபிடித்தான். குறுநிலத் தலைவர் ஐவர் நெடுஞ்செழியனிடம் சரணடைந்தார்கள். சோழன் நலங்கிள்ளி போர்க்களத்தில் இறந்து போனான். (புறம்.77, 78; அகம்.36; புறம்.225)

### காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி (கி.மு.200-175):

நெடுங்கிள்ளி கோப்பெருஞ்சோழனின் மகனாவான். தந்தையின் கையாலகாத தனத்தால் கிள்ளி வழியினரின் ஊர்களை மெல்ல மெல்லச் சென்னி வழியினர் கைப்பற்றுவதைப் பொறுக்காமல், தந்தையை எதிர்த்துக் கலகம் விளைவித்தான். மனம் வெறுத்த கோப்பெருஞ்சோழன், அரசைத் துறந்து வடக்கிருந்து உயிர் நீத்தான். கோப்பெருஞ் சோழன் இறந்ததும், இரண்டாம் கரிகால் வளவன் உறையூரைக் கைப்பற்றி, அங்கிருந்து சோழநாடு முழுவதையும் தானே ஆட்சி புரிந்தான். அவனுக்குப் பின் சேட்சென்னி நலங்கிள்ளி சோழ மன்னனானான். அதுவரை ஒடுங்கியிருந்த நெடுங்கிள்ளி, ஆவூர்க் கோட்டையையும், அதன் பிறகு

65. தென்னம் பொருப்பன் நல்நாட்டுள்ளும்
ஏழ்எயில் கதவம் எறிந்து, கைக்கொண்டு, நின்
பேழ்வாய் உழுவை பொறிக்கும் ஆற்றலை (புறம். 33:7-9)

66. புறநானூறு - உ.வே.சா. பதிப்பு (1963), பக்கம் 87

உறையூர்க் கோட்டையையும் கைப்பற்றினான். நலங்கிள்ளி இக்கோட்டைகளை முற்றுகையிட்டான். கோஹூர்கிழார் இருவருக்கும் சமாதானம் செய்துவைக்க முயன்றும் பயனில்லை. இறுதியில் காரியாறு என்னுமிடத்தில் நெடுங்கிள்ளி இறந்தான். அவனோடு கிள்ளி-சென்னி வழியினர் உட்பூசல் மறைந்துவிட்டது. கிள்ளி வழியினர் ஆட்சியும் அற்றுப் போயிற்று.

மணிமேகலையில் *(19:124-127)*, நெடுமுடிக்கிள்ளி என்பவன் தன் இளங்கோனால் சேரபாண்டியரைக் காரியாற்றில் வென்றான் என்று ஒரு பகுதி வருகிறது. இதன் அடிப்படையில் நெடுமுடிக்கிள்ளியே நெடுங்கிள்ளி என்றும், அவன் இளங்கோன் நலங்கிள்ளி என்றும், இருவரும் கரிகால் வளவன் புதல்வர்கள் என்றும் ஓர் அறிஞர் கூறுவது பொருந்தாது.

### மாவளத்தான் (கி.மு.200-175):

மாவளத்தான் சோழன் நலங்கிள்ளியின் தம்பியாவான். மாவளத்தானும் தாமப்பல் கண்ணனார் என்ற பார்ப்பனப் புலவரும் ஒருநாள் வட்டு (சூது) ஆடிக் கொண்டிருந்தார்கள். விளையாட்டினிடையே புலவர் வட்டு (சூதாட்டக் காய்) ஒன்றை ஒளித்து வைத்துக்கொண்டார். கோபங் கொண்ட மாவளத்தான் மற்ற வட்டை வீசி எறிந்து புலவரை அடித்துவிட்டான். அடிபட்ட புலவர் சீறினார்:

''நீ சோழனுக்குப் பிறந்தவன்தானா? உன் பிறப்பிலே எனக்கு ஐயம் ஏற்படுகிறது. உன் முன்னோர்கள் பார்ப்பனர் நோகும்படியான செயல்களைச் செய்ததில்லை.[67] நீயோ என்னை அடித்துவிட்டாய். இச்செயல் உனக்குத் தகுமா?'' என்று கடுஞ் சொற்களால் அவனை இகழ்ந்தார். மாவளத்தான் தன் தவற்றை உணர்ந்து தலைகுனிந்து நின்றான். புலவர் மனம் இளகிவிட்டது. மாவளத்தானைப் புகழ்ந்து பாட ஆரம்பித்தார். ''உலகில் வாழ்பவர் துன்பம் தீர, சூரியனின் வெம்மையைத் தாங்கி, காற்றை உணவாகக் கொண்டு அச் சுடருடனே சுற்றிவரும் முனிவர்களும்[68] அதிசயிக்க, பருந்தினிடமிருந்து

67. கரிகால் வளவனும் நலங்கிள்ளியும் பார்ப்பனர்களைக் கொண்டு யாகங்கள் செய்தது இங்குக் குறிப்பிடத்தக்கது. (புறம். 224, 400)

68. 'விண்செலன் மரபின் ஐயர்' (முருகு.107), 'சுடரொடு திரிதரும் முனிவர்'. (சிலப். 12: உரைப்பாட்டு மடை 17)

தப்பிவந்த புறாவைக் காப்பாற்றத் துலாக்கோலில் புகுந்த சிபியின் மரபில் வந்தவனே![69] நலங்கிள்ளியின் தம்பியே! மறவர் பெருமானே! 'உன் பிறப்பிலே ஐயம் உடையேன். உன் முன்னோரெல்லாம் பார்ப்பார் நோவன செய்ய மாட்டார். இது உனக்குத் தகுமோ?' என்று வெறுப்புண்டாகக் கூறி உனக்கு நான் பிழை செய்ததற்கு நோக மாட்டாய். என்னைவிட நீ பெரிய பிழையைச் செய்தவன் போல மிகவும் நாணமடைந்தாய். 'தமக்குப் பிழை செய்தவரைப் பொறுக்கும் பண்பு இக்குடியில் (சோழர் குடியில்) பிறந்தவர்க்கு எளிது காணீர்!' என்று காட்டினாய். ஆகையால் பிழை செய்தவன் நானே! உனது ஆயுள் வளர்வதாக! காவிரி ஆற்று மணலைவிடப் பலவாக உனது வாழ்நாள் வளர்வதாக!'

### கிள்ளி வளவன் (கி.மு.175-150):

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் சோழன் நலங்கிள்ளியின் மகனாவான். உட்பூசல் எதுவுமில்லாத சோழநாடு முழுவதற்கும் இவன் அரசனானான். உட்பகை இல்லாததால் வெளிப்பகையைத் தேடிப் போர் புரிவதில் ஈடுபட்டான்.

கிள்ளிவளவன் சோழநாட்டை ஆண்டு கொண்டிருந்த போது, நெடுஞ்செழியன் பாண்டிய நாட்டை ஆட்சி செய்தான். நெடுஞ்செழியன் படைத்தலைவனான பழையன் மாறனின் கீழ் கோசர் குடியைச் சேர்ந்த போர்வீரர்கள் பணியாற்றி

---

69. சிபியின் கதையைக் கூறும் முதல் தமிழ்ப் பாட்டு இது. கிள்ளி வளவனைப் பாடும் மூன்று பாடல்களில் (புறம், 37, 39, 46) சிபி கூறப்படுகிறான். இந்த நான்கு பாடல்களிலும் சிபி சோழர்களின் முன்னோன் என்று கூறப்படுகிறான். சிபி இராமனின் மூதாதை என்று இராமாயணம் கூறுகிறது. (இராமன் சூரிய குலத்தவன்)

'இவர் குலத்தோன், மென்புறவின் மன் உயிர்க்கு, தன் உயிரை மாறாக வழங்கினனால்'. (கம்ப ராமாயணம், பால காண்டம் 12:9)

வடநாட்டுப் பார்ப்பனரை வரவேற்றுக் கரிகால் வளவனும், நலங்கிள்ளியும் வேள்விகள் செய்துள்ளனர். (புறம்.224, 400). சோழ இளவரசனுடன் சூதாடும் பார்ப்பனனின் செல்வாக்கை புறம்.43 தெரிவிக்கிறது. கிள்ளிவளவன் மகன் ஒருவன் இராசசூய யாகம் செய்துள்ளான் (புறம்.367). சோழர் சூரிய குலத்தவர் என்றும், சிபியின் வழி வந்தவர் என்றும் பார்ப்பனர் கதைகள் கூறித் தம் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டார்கள்.

வந்தனர். சேரநாட்டின் தலைநகரான கருவூரில் சேரமான் கோக்கோதை மார்பன் என்பவன் சேரநாட்டின் ஆட்சியை நிர்வகித்தான். சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பவன் தொண்டி நகரில் இருந்துகொண்டு சேரநாட்டுக்காகப் போர்களைச் செய்வதில் ஈடுபட்டிருந்தான். மூவேந்தர்களில் யாராவது ஒருவருக்குப் போரில் படைத்துணை புரிந்துவந்த மலையமான் குடியினர் முள்ளூர் மலைப்பகுதியில் வாழ்ந்து வந்தனர்.

மலையமான் குடியினர் சோழருக்கு மட்டுமே படைத்துணை புரிய வேண்டும் என்று கிள்ளிவளவன் விரும்பினான். தேர்வண் மலையன் என்பவனைத் தன்னுடைய நிரந்தரப் படைத்தலைவனாக இருக்கும்படி கேட்டுக் கொண்டான். தேர்வண் மலையன் மறுக்கவே, கிள்ளிவளவன் அவனை வென்று, அவன் மக்களை உறையூருக்குக் கொண்டுவந்து, யானையை ஏவி அவர்களைக் கொல்லும்படி உத்தரவிட்டான். கோவூர்கிழார் கிள்ளி வளவனுக்கு அறிவுரை கூறி மலையமான் மக்களைக் காப்பாற்றினார் (புறம்.46). இதன் பிறகு தேர்வண் மலையன் சோழருக்கு மட்டும் படைத்துணை புரிந்தான். அவன் மகனான திருக்கண்ணன் என்பவன் அடுத்த தலைமுறையில் சோழனின் சேனாதிபதி என்ற பட்டத்தைத் தாங்கி, மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் என்று அழைக்கப்பட்டான். மலையமான்கள் முள்ளூர்க் கோட்டையில் சோழரின் புலிப்பொறி பொறிக்கப்பட்டது (புறம்.174).

ஒருசமயம் சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பவன் சோழநாட்டின் மேல் படையெடுத்தான். கிள்ளிவளவன் , தன் மகன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைச் சேரனுடன் போர் புரிய அனுப்பினான். போரில் சேரனின் கை ஓங்கியது. சோழன் தோற்றுவிடும் நிலையில் இருந்தான். அப்போது தேர்வண் மலையன் பெரும் படையோடு வந்து சோழனுக்குத் துணைபுரிந்து சேரனைத் தோற்கடித்தான். தேர்வண் மலையன் வீரத்தை வென்ற சோழனும், தோற்ற சேரனும் பாராட்டினார்கள். 'போரை வென்றவன் மலையனே!' என்று சோழன் கூறினான். 'மலையன் மட்டும் வாராமல் இருந்தால் போரை எளிதில் வென்றிருப்பேன்' என்று சேரன் கூறினான் (புறம்.125).

இந்தப் போருக்குப் பிறகு சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை நோய்வாய்ப்பட்டு இறந்து போனான். (புறம்.229) சேரமான் கோக்கோதை மார்பன் என்பவன் கருவூரிலிருந்து சேரநாட்டை ஆண்டு வந்தான் (அகம்.93). மாந்தரஞ் சேரல் உயிரோடு இருந்த வரை சேர நாட்டின் மேல் படையெடுக்கத் துணியாத கிள்ளிவளவன், அவன் இறந்ததும் பெரும் படை திரட்டிக் கொண்டு, கருவூரின் மேல் படை யெடுத்தான். கிள்ளிவளவனோடு போர் செய்ய அஞ்சிய கோதைமார்பன் கோட்டைக்குள் பதுங்கியிருந்தான். கிள்ளி வளவன் கருவூர்க் கோட்டையை முற்றுகை யிட்டான். கருவூரைச்சுற்றியிருந்த காவல் காட்டை அழித்தான். கோட்டை அகழியையும், குடிநீர்க் குளத்தையும் மதிலையும் சிதைத்தான். சேரனுக்குத் துணையாக வந்த கொங்கரைப் புறங்காட்டி ஓடச் செய்தான். கோதைமார்பன் போரிலே தோற்று ஓடிப் போனான். கிள்ளிவளவன் சேரனின் அரண்மனையைக் கொள்ளையடித்து, அதிலிருந்த பொருட்களைக் கைப்பற்றிய பின் கருவூரைத் தீயிட்டுக் கொளுத்தினான் (புறம்.36, 37, 39. 373).

சேரனை வென்று கருவூரை அழித்தபின், எவரையும் தன்னால் வெல்ல முடியும் என்ற தலைக்கனம் கிள்ளி வளவனுக்கு ஏற்பட்டுவிட்டது. பாண்டியன் நெடுஞ்செழியன் படைத்தலைவனான பழையன்மாறன் கீழ் பணியாற்றிய இளங்கோசர்களுக்கு (மதுரைக்.772-774) படைச் சேவகத்துக் காக நிலங்கள் அளிக்கப்பட்டன. அந்த நிலங்களைக் கைப்பற்றக் கிள்ளிவளவன் முயற்சி செய்தான். ஆனால் கோசர் படையை அழிக்க முடியவில்லை. கிள்ளிவளவன் ஆசை நிராசை ஆயிற்று (அகம்.205).

கிள்ளிவளவன் செய்த இறுதிப்போர் கூடல் போராகும். வெள்ளம் போன்ற பெரும்படையைத் திரட்டிக் கொண்டு கிள்ளிவளவன் கூடலின்மேல் படையெடுத்தான். பாண்டியன் படைத் தலைவனான பழையன் மாறன் தேர்ப்படையையும் யானைப் படையையும் நடத்திச் சென்று, கிள்ளிவளவன் படையைத் தாக்கிச் சிதறடித்தான். அப் படையிலிருந்த ஏராளமான குதிரைகளையும் யானைகளையும் கைப் பற்றினான். கிள்ளிவளவனிடம் முன்பு தங்கள் ஊர்களை

இழந்த மன்னர்கள், தங்கள் ஊர்களை மீண்டும் கைப்பற்றிக் கொண்டார்கள். சேரமான் கோக்கோதை மார்பன் கிள்ளி வளவன் வீழ்ச்சியைக் கேட்டுப் பேருவகை கொண்டான் (அகம்.346).

கூடல் போருக்குப் பிறகு கிள்ளிவளவன் இறந்து போனான். அவன் உடல் பெரிய தாழியில் வைத்துப் புதைக்கப்பட்டது (புறம்.226-228). சோழநாட்டைக் கிள்ளி வளவனின் மூன்று புதல்வர்கள் தங்களுக்குள் பங்கு போட்டு ஆட்சி செய்யலானார்கள். மூத்த மகனான குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு திருச்சி மாவட்டப் பகுதியையும், இரண்டாம் மகனான இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி வெண்ணியைத் தலைநகராகக் கொண்டு தஞ்சாவூர் மாவட்டப் பகுதியையும், மூன்றாம் மகனான இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி புதுக்கோட்டை மாவட்டப் பகுதியையும் ஆட்சி செய்யலானார்கள்.

### குராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமா வளவன் (கி.மு.150-125):

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவன், கிள்ளி வளவனின் மூத்த மகனாவான். கிள்ளி வளவன் விட்டுச் சென்ற சோழநாட்டின் ஒரு பகுதியை இவன் ஆட்சி செய்யலானான். உறையூரைத் தலைநகராகக் கொண்டு இவன் ஆட்சி செய்தபோது, பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் இவன்மேல் படையெடுத்தான். சோழ்னையும் பாண்டியனையும் சமாதானம் செய்துவைக்க காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் செய்த முயற்சி பலிக்கவில்லை. பெருந்திருமா வளவன் உறையூரை விட்டு ஓடவேண்டியதாயிற்று. மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் தன்னுடைய முள்ளூர் மலைமேல் பெருந்திருமாவளவனைப் பாதுகாப்பாக ஒளித்து வைத்தான். நன்மாறன் இறந்த பிறகு, அவன் மகன் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி பாண்டிய மன்னனானான். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் முயற்சியாலும், மலையமான் கண்ணனின் படைபலத்தாலும் வெள்ளி

அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி பெருந்திருமா வளவனோடு நட்பு உடன்படிக்கை செய்துகொள்ள, பெருந்திருமா வளவன் மீண்டும் உறையூரின் அரசனானான். சோழனும் பாண்டியனும் என்றும் நண்பர்களாக இருக்க வேண்டுமென்று காரிக்கண்ணனார் கேட்டுக் கொண்டார் (புறம்.57, 58, 174).

## இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி (கி.மு.150-125):

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி கிள்ளிவளவனின் இரண்டாவது மகன் ஆவான். வெண்ணியைத் தலைநகராகக் கொண்டு இவன் சோழநாட்டில் கடற்கரைப் பகுதியை ஆட்சி செய்தான்.

கிள்ளிவளவன் சோழநாடு முழுவதையும் ஆட்சி செய்த காலத்தில் சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சோழநாட்டின் மேல் படையெடுத்தான். சேரனுடன் போர் புரிய தன் மகன் பெருநற்கிள்ளியைக் கிள்ளிவளவன் அனுப்பிவைத்தான். சேரன் வென்று விடுவான் போலத் தோன்றியது. அப்போது தேர்வண் மலையன் பெரும் படையுடன் வந்து பெருநற்கிள்ளிக்கு வெற்றியைத் தந்தான் (புறம்.125). கிள்ளி வளவனுக்குப் பிறகு அவன் புதல்வர்கள் ஆட்சிக்கு வந்தபிறகு, மலையமான் படைத்துணை பெருநற்கிள்ளிக்குத் தேவைப்படவில்லை. நால்வகைப் படைகளையும் தானே நடத்திச் சென்று பகைவர் நாடுகளை அழித்தான். 'வேறொரு படைத் துணை வேண்டாமலே போரில் வெற்றி பெறுபவனே!'[70] என்று ஒரு புலவர் இவனைப் புகழ்கிறார் (புறம்.16). மலையமான், இவன் சகோதரன் பெருந்திருமாவளவனின் நிரந்தரப் படைத்தலைவன் ஆனான் (புறம்.174).

காவிரி ஆற்றின் கிளை ஆறான அரிசில் ஆற்றின் கரையில் அம்பர் என்ற ஊர் இருந்தது. அது கிள்ளி வளவனின்

70. புலம்கெட இறுக்கும் வரம்பு இல் தானை,
துணை வேண்டாச் செருவென்றி....
முருகற் சீற்றத்து உருகெழு குரிசில்!...
நாம நல் அமர் செய்ய
ஓராங்கு மலைந்தன பெரும! நின் களிறே
(புறம். 16:9-10, 12, 18-19)

தலைமுறையில் அருவந்தை என்ற கிழான் வசம் இருந்தது.[71] பெருநற்கிள்ளி தன் யானைப் படையை ஏவி, பகைவரின் தேர்ப்படையை அழித்து அம்பரைக் கைப்பற்றினான். புதிதாக அலங்கரித்து உயர்த்தப்பட்ட அவனுடைய கொடி அம்பர் நகரில் பறந்தது.[72]

அம்பர் தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம் ரயில் நிலையத்திற்குத் தென்கிழக்கே நான்கு கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது.

'கைவண் கிள்ளி வெண்ணி' (நற்.390:3) என்று ஔவையார் கூறுகிறார். பெருநற்கிள்ளி வெண்ணியிலிருந்து ஆட்சி செய்ததை இதனால் அறிகிறோம். பெருநற்கிள்ளி இராசசூய யாகம் செய்ததை ஔவையார் பாடல் ஒன்றால் அறிகிறோம். இந்த வேள்விக்குச் சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும் வந்திருந்தனர். ஒன்றாக வீற்றிருந்த மூவேந்தரையும் வாழ்த்தி ஔவையார் பாடினார்:

"நாகலோகம் போன்ற நாட்டுக்கு உரியவரே ஆனாலும் அவர் இறந்தபின் அந்நாடு அவரோடு செல்வதில்லை. அவரது உறவினரல்லாத வேற்றோர் ஆயினும் அரச உரிமை நோற்றவர்க்கே சென்று சேரும். அதனால், இவ்வுலகில் வாழும் நாள்வரை, பார்ப்பார்க்குப் பூவும் பொன்னும் நீர் வார்த்துத் தானமாகக் கொடுத்து, மகளிர் தரும் மதுவை உண்டு மகிழ்ந்து, இரவலர்க்குப் பொருளைக் குறைவில்லாமல் கொடுத்து வாழவேண்டும். நம்மை வாழச் செய்த நல்வினையை அன்றி, இறக்கும்போது நமக்குத் துணையாவது வேறில்லை. ஒன்றையே (கடவுள் ஒருவனையே) விரும்பி அடங்கி வாழும்

---

71. *காவிரி அணையும் தாழ்நீர் படப்பை*
*நெல்விளை கழனி அம்பர்கிழவோன்*
*நல் அருவந்தை, வாழியர்* *(புறம்.385:8-10)*
*(கல்லாடனார் பாடியது)*

72. ..... ..... ..... *பருந்துபடப்*
*பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை*
*ஏந்து கோட்டு யானை இசைவெம் கிள்ளி*
*வம்பு அணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த*
*அரிசில்* *(நற்.141:7-11)*

இரு பிறப்பாளர் (பார்ப்பனர்) மூட்டிய மூன்று வேள்வித் தீயைப் போல, அழகாக அமர்ந்திருக்கும் மூவேந்தர்களே! நான் அறிந்த அளவு இதுதான். வானத்து மீன்களைவிட, வானத்திலிருந்து பொழியும் மழைத்துளிகளைவிட உயர்ந்து மேம்பட்டு உங்கள் வாழ்நாள் விளங்குவதாக!'' (புறம்.367).

இராசசூய யாகம் செய்ததால் பெருநற் கிள்ளி வலிமை மிக்க வேந்தனாகத் திகழ்ந்திருக்க வேண்டும் என்று நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார்.[73] இக்கருத்து பொருத்தமாகத் தோன்றவில்லை. பெருநற்கிள்ளி தலைமுறையில் அவனைப் போல வலிமை மிகுந்த பல தலைவர்களைச் சந்திக்கிறோம். இவர்கள் பெருநற்கிள்ளியின் தலைமையை ஒப்புக் கொண்டதால், அவன் இராசசூய யாகம் செய்தான் என்று கொள்வது தவறாகும். வடநாட்டுப் பார்ப்பனரின் மதக் கருத்துக்களை ஆதரித்து யாகங்கள் செய்வது சோழர்களின் வழக்கமாகி விட்டது. சோழன் கரிகால் வளவன் வேள்விகள் செய்து வேள்வித்தூண்கள் நட்டதைப் புறம்.224 கூறுகிறது.

> எருவை நுகர்ச்சி, யூப நெடுந்தூண்,
> வேத வேள்வித் தொழில் முடித்ததூஉம் (புறம் 224:8-9)

சோழன் நலங்கிள்ளியும் வேள்விகள் செய்ததை, 'கேள்வி மலிந்த வேள்வித்தூணத்து'(புறம் 400:19) என்ற தொடரால் அறிகிறோம். மேலும், சோழர் சூரிய குலத்தவரே என்றும், சிபியின் வழியில் வந்தவரென்றும் கூறிக் கிள்ளி வளவனைப் புலவர்கள் புகழ்கிறார்கள் (புறம்.37, 39, 46). ஆலத்தூர் கிழார் 'நான் நீ செய்த நன்றியை மறவேன்' என்று கிள்ளிவளவனிடம் கூறும்போது வடநாட்டுத் தரும சாஸ்திரத்திலிருந்து ஒரு பகுதியை மேற்கோள் காட்டி, 'அறம் பாடிற்றே ஆயிழை கணவ!' (புறம்.34:1-7) என்கிறார். சோழர்கள் வேள்வி செய்வதை ஒரு மதச் சடங்காகவே மற்ற தலைவர்கள் கருதினார்கள். இராசசூய யாகமும் ஒரு வேள்வியே ஆதலால், மற்ற தலைவர்கள் அதைப் பெரிதுபடுத்தவில்லை. இராசசூய யாகம் செய்ததால், பெருநற் கிள்ளி மற்ற தலைவர்களை விட வலிமை மிகுந்தவன் என்று கொள்வது தவறாகும்.

73. சோழர், பக்.48

## இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி (கி.மு.150-125):

சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, கிள்ளிவளவனின் மூன்றாவது மகனாவான். கிள்ளிவளவனின் தந்தையான சேட்சென்னி நலங்கிள்ளியின் பெயரை இவனுக்குக் கிள்ளிவளவன் வைத்தான். நலங்கிள்ளி சேட்சென்னி சோழநாட்டின் புதுக்கோட்டை மாவட்டப் பகுதியை ஆட்சி செய்தான்.

இவன்மேல் பாடப்பட்ட புறம் 61இல், இவனோடு போர் செய்தவர் வாழக் கண்டதுமில்லை. இவன் அடிபொருந்தியவர் வருந்தக் கண்டதுமில்லை என்று கூறப்படுகிறது.

## நல்லுருத்திரன் (கி.மு. 125-100):

சோழன் நல்லுருத்திரன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் மகனாக இருக்கலாம். சிவபெருமான் பெயரைத் தாங்கிய முதல் சோழன் இவனே. இவனுக்கு முன்பு வாழ்ந்த சோழர்கள் கிள்ளி, சென்னி, வளவன் என்ற பெயருடையவர்களே யன்றிக் கடவுள் பெயரைக் கொண்டவர்களல்லர்.

சோழநாட்டின் சின்னஞ்சிறு பகுதியை இவன் ஆண்டதால், நாட்டை விரிவாக்கப் பெருமுயற்சியுடைய நல்ல நண்பர்கள் தனக்குத் தேவை என்று புறம்.190இல் கூறுகிறான்.

இவன் கலித்தொகையில் உள்ள முல்லைக் கலியைப் பாடினான் என்று அண்மையில் முளைத்த ஒரு வெண்பா கூறுவது தவறான செய்தியாகும்.

## செங்கணான் (கி.மு.100-75):

சங்கப் பாடல்களில் காணப்படும் கடைசிச் சோழனான செங்கணான், நல்லுருத்திரனின் மகனாக் இருக்கலாம். இவன் சேரமான் கணைக்கால் இரும்பொறையைப் போரில் வென்று, குடவாயில் சிறைச்சாலையில் வைத்தான். சிறைக்காவலர் சேரனை அலட்சியப்படுத்தி, தாமதமாகத் தண்ணீர் கொண்டு வந்ததால், அவன் அதை அருந்தாமல், உண்ணா நோன்பிருந்து உயிர் விட்டான் (புறம்.74).

சங்கப் பாடலில் வரும் செங்கணான் வேறு. தேவாரப் பாடல்களிலும், திருமங்கையாழ்வார் பாடல்களிலும் போற்றப்படுபவனும், . சிவபிரானுக்கும் திருமாலுக்கும் கோயில்கள் கட்டியவனும், அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவனாகப் பெரியபுராணத்தில் கூறப்படுபவனுமான கோச்செங்கண் சோழன் வேறு. சங்க காலத்துச் செங்கணான் கி.மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவன். சிவபக்தன் செங்கண் சோழன் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். இருவரையும் ஒருவர் என்று கருதிக் குழம்பக் கூடாது.

'களவழி நாற்பது' என்ற நூலின் அடிக்குறிப்பில் காணப்படும் சோழன் செங்கணான், அடிக்குறிப்பு எழுதியவரால் புனையப்பட்ட கற்பனைப் பெயராகும். இந்நூல் இடைக்காலத்தில் வாழ்ந்த தஞ்சை விசயாலயன் (கி.பி.850-907) மேல் பாடப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**சங்க காலத்திற்குப் பிறகு சோழர்நிலை**

சங்ககால முடிவில் களப்பிரர் சோழநாட்டைக் கைப்பற்றினார்கள். களப்பிர குல மன்னன் அச்சுத விக்கிராந்தன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து ஆட்சி புரிந்தான். சோழர்களில் சிலர் உறையூரில் ஒடுங்கி வாழ்ந்தார்கள். மற்றும் சிலர் ஆந்திர மாநிலத்தில் உள்ள கடப்பை, கர்நூல் அனந்தபூர் மாவட்டங்களில் குடியேறித் தம்மைக் கரிகால் வளவன் வழியினர் என்று கூறிக் கொண்டனர். தமக்கென்று ஒரு ஆட்சியை அமைத்துக்கொண்டார்கள். இவர்களை ரேனாண்டுச் சோழர் என்பார்கள்.

களப்பிரருக்குப் பிறகு பல்லவர் சோழநாட்டைக் கைப்பற்றினார்கள். பல்லவர்க்குக் கீழ்ப்படிந்து முத்தரையர்கள் தஞ்சாவூர், திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்கள் அடங்கிய சோழநாட்டுப் பகுதியை ஆண்டு வந்தார்கள். கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் விசயாலய சோழன் (கி.பி.850-871) என்பவன் தஞ்சையைக் கைப்பற்றி முத்தரையர்களை வீழ்த்தினான். விசயாலயன் சந்ததியினர் பல்லவரை வீழ்த்தி, தமிழ்நாடு முழுவதையும் சோழர் ஆட்சிக்குள் கொண்டு வந்தனர்.


சங்காலச் சோழர்
கி.மு.
கிள்ளி வழியினர்
சென்னி வழியினர்
325-300
தித்தன்
?
300-275
போர்வைக்கோப் பெருநற்கிள்ளி
பெரும்பூண் சென்னி
275-250
முடித்தலைக்கோப் பெரு நற்கிள்ளி
கரிகால் வளவன் I
250-225
வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளி
உருவப் பல்தேர் இளஞ்சேட்சென்னி
225-200
கோப்பெருஞ் சோழன்
கரிகால் வளவன் II
200-175
நெடுங்கிள்ளி
சேட்சென்னி நலங்கிள்ளி
மாவளத்தான்
175-150
(இவனோடு கிள்ளி வழியினர் ஆட்சி முடிந்துவிட்டது)
குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
150-125
குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவன்
இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி
இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி
125-100
நல்லுருத்திரன்
100-75
செங்கணான்

# 3. சேரர் வரலாறு

***சங்ககாலச் சேரநாடு***

இந்திய தீபகற்பத்தின் தென்மேற்கு மூலையில் அரபிக்கடலுக்கும் மேற்குமலைத் தொடருக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி சங்க காலத்தில் சேரநாடு எனப்பட்டது. சேரநாட்டின் தலைவன் 'சேரர்மகன்', சேரமான் என்று அழைக்கப்பட்டான். சேரமான் நாடு, அசோகர் கல்வெட்டில் கேரளபுத்ர நாடு என்று குறிப்பிடப்படுகிறது. சேரநாடு இன்று கேரள மாநிலமாகத் திகழ்கிறது.

சங்ககாலச் சேரர் சிறப்புற்று விளங்கிய காலகட்டத்தில், சேரநாட்டின் வடக்கு எல்லை துளுநாட்டில் ஏழில்மலை (இன்றைய எலிமலை) வரை பரவியிருந்தது. கிழக்கு எல்லை கொங்குநாடு என்று கொள்ளலாம். தெற்கிலும் மேற்கிலும் கடல் எல்லையாக இருந்தது. ஆன்பொருநை, காஞ்சி, வானி என்ற ஆறுகள் சேரநாட்டில் ஓடின. அயிரை மலை, நேரிமலை, ஆனைமலை, கொல்லிமலை என்பன அந்நாட்டின் சிறந்த மலைகளாகும். ஆன்பொருநை ஆற்றங்கரையில் அமைந்த வஞ்சி சேரநாட்டின் தலைநகரமாகும். சங்க நூல்கள் தொகுக்கப்பட்ட பிற்காலத்தில் வஞ்சி, கருவூர் என்றழைக்கப்பட்டது. முசிறி சேரநாட்டின் சிறந்த துறைமுகமாகும். மாந்தை (மரந்தை), நறவு, தொண்டி என்பன சேரநாட்டுக் கடற்கரைப் பட்டினங்களாகும். கொடுமணம் உயர்ந்த ஆபரணங்களுக்கும், பந்தர் முத்துக்களுக்கும் பெயர்போன இடங்களாகும். மிளகு சேரநாட்டிலிருந்து மிகுதியாக மேல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. யவனரின் அழகிய கப்பல்கள் பொன்னோடு முசிறி துறைமுகத்துக்குள் வந்து கறியோடு (மிளகு) திரும்பிச் சென்றன என்று ஒரு பாடல் கூறுகிறது:

..... ..... ..... சேரலர்<br>
சுள்ளி அம் பேரியாற்று வெண்நுரை கலங்க<br>
யவனர் தந்த வினைமாண் நன்கலம்<br>
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்<br>
வளம்கெழு முசிறி. (அகம். 149: 7-11)

சங்ககாலத் தொடக்கத்தில் சேரர் குடி ஏரிகளும் கழிகளும் நிறைந்த குட்டநாட்டில் (திருவாங்கூர் பகுதியில்) வாழ்ந்து வந்தனர். அதனால் சேரர் குட்டுவர் எனப்பட்டனர். மக்கள் தொகை அதிகரிக்கவே, சேரர் வடக்கு நோக்கிப் பரவிக் குடநாட்டில் (கொச்சிப் பகுதியில்) குடியேறினர். அதற்குப் பின், சேரமன்னன் 'குடவர்கோ' என்று அழைக்கப்பட்டான். குடநாட்டிலும் இடம் போதவில்லை என்ற நிலை ஏற்பட்டபோது, சேரமன்னன் ஒருவன், குன்றுகளும் மலைகளும் நிறைந்த வஞ்சியின் (கருவூரின்)மேல் படையெடுத்துச் சென்று அங்கிருந்த அரசனை வீழ்த்திவிட்டு, சேர அரசை வஞ்சியில் நிறுவினான். அன்றிலிருந்து, வஞ்சி சங்ககாலச் சேரரின் தலைநகரமாக அமைந்தது. மலைகள் நிறைந்த கருவூர்ப் பகுதியை வென்றபின் 'இரும்பொறை' (பெரியமலை) என்ற பட்டத்தைச் சேரமன்னர் தம்பெயரோடு சேர்த்துக் கொண்டனர். வானளாவும் மேற்கு மலைத் தொடர்ப் பகுதியில் வாழ்ந்ததால், சேரரை 'வானவர்' என்றும் சில பாடல்கள் அழைக்கின்றன.

**சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை (கி.மு.300-275):**

வஞ்சி நகரில் சேரர் அரசை நிறுவியவன் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை ஆவான். இவனது நீளமான பெயரில் இருக்கும் 'கருவூர் ஏறிய' என்ற தொடர், இவன் வஞ்சி நகரில் அரியணை ஏறியதைக் குறிப்பிடுகிறது. கோப்பெருஞ்சேரல் வஞ்சியை வென்று அங்குத் தன் ஆட்சியை நிலைநாட்டியபின், முன்பு வஞ்சியை ஆண்ட குடியினரையும் நாட்டு மக்களையும் கொடுமைகள் செய்து துன்புறுத்தினான். பகைவர் வஞ்சியைத் தாக்கி, அதைத் தன்னிடமிருந்து பறித்து விடுவார்களோ என்ற அச்சம் இதற்குக் காரணமாக இருந்திருக்கலாம். இந்த அச்சத்திற்குத் தூபம் போடும் சிலர் அவனைச் சுற்றி இருந்தார்கள். "இவர்கள் அன்பும் அருளும் இல்லாதவர்கள். இவர்கள் பேச்சைக் கேட்காதே. உனது அச்சம் பொருளற்றது. காட்டை அரணாகக் கொண்ட உனது நாட்டைப் பகைவர் தாக்குவது கடினம். எல்லோரையும் பகைவர் என்று எண்ணிக்கொண்டு நாட்டு மக்களைத் துன்புறுத்தாதே. உன் குழந்தைகளைப் போலக்

குடிமக்களைப் பாதுகாப்பாயாக!'' என்று நரிவெரூஉத்தலையார் என்ற புலவர் கோப்பெருஞ்சேரலுக்கு அறிவுரை கூறினார் (புறம். 5).

கோப்பெருஞ்சேரலின் கொடுங்கோன்மையைக் கண்டிக்காமல், அவனுக்கு 'ஆமாம்' போட்ட சான்றோர்களையும் நரிவெரூஉத்தலையார் சாடினார்; ''நல்லதைத்தான் உங்களால் செய்ய முடியவில்லை. தீமையையாவது செய்யாமல் இருங்கள்''[74] என்று அவர்களைக் கண்டித்தார் (புறம்.195).

கோப்பெருஞ் சேரலுக்கு அந்துவஞ்சேரல், உதியஞ்சேரல் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர். கோப்பெருஞ் சேரலுக்குப்பின் மூத்த மகனான அந்துவஞ் சேரல் வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை நிர்வாகம் செய்துவர, இளைய மனான உதியஞ் சேரல் குழுமூரில் இருந்துகொண்டு சேரநாட்டை விரிவு செய்யும் பணியில் ஈடுபட்டு, போர்கள் புரிந்தும் வீரர்களுக்குப் பெருஞ்சோறு (விருந்து) கொடுத்தும் வாழ்ந்து வந்தான். அந்துவஞ்சேரல் சந்ததியினரும் அவனைப் பின்பற்றி வஞ்சியிலிருந்து கொண்டு ஆட்சியை நிர்வாகம் செய்து வரலாயினர். உதியஞ் சேரல் சந்ததியினரும் அவனைப் போலவே வஞ்சியில் வாழாமல் மாந்தை, நறவு, தொண்டி முதலிய இடங்களில் வாழ்ந்துகொண்டு, சேரநாட்டின் தளபதிகளாகப் போர்களில் ஈடுபட்டு, நாட்டை விரிவாக்கினார்கள். அந்துவஞ் சேரல் வழியினரும் உதியஞ் சேரல் வழியினரும் ஒற்றுமையாகச் செயல்பட்டுச் சேரநாட்டைத் தத்தும் நெறியில் நின்று ஆட்சி புரிந்தனர்.

**சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை (கி.மு.275-250):**

கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறைக்குப் பிறகு, அவனது மூத்த மகனான அந்துவஞ்சேரல் இரும்பொறை வஞ்சியிலிருந்து ஆட்சி புரியலானான். நாட்டின் நிர்வாகத்தை அந்துவஞ் சேரல் கவனித்துக் கொண்டான். அவன் தம்பியான உதியஞ்சேரல் சேரநாட்டின் தளபதியாகச் சேரநாட்டுக்காகப் போர்கள் பல புரிந்து சேரநாட்டை விரிவாக்கினான்.

74. நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் (புறம். 195:6-7)

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன், சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ, மருதம் பாடிய இளங் கடுங்கோ ஆகிய மூவரும் அந்துவஞ் சேரலின் புதல்வர்கள் ஆவர்.

**சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் எனப்படும் பெருஞ்சேரலாதன் (கி.மு.275-250):**

உதியஞ் சேரலாதன், கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையின் இளைய மகனாவான். அந்துவஞ் சேரல் வஞ்சி நகரிலிருந்து கொண்டு சேரநாட்டின் நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டிருந்தபோது, உதியஞ் சேரலாதன் குழுமூரிலிருந்து கொண்டு பெருஞ்சோறு கொடுப்பதிலும், சேரநாட்டை விரிவுபடுத்துவதிலும் ஈடுபட்டான்.

உதியஞ் சேரல் போர்களைச் செய்து சேரநாட்டின் எல்லையை விரிவாக்கினான் என்பதை நாடுகண் அகற்றிய உதியஞ்சேரல் (அகம்.65:5) என்ற தொடர் குறிப்பிடுகிறது. கொண்கானத் தலைவன் நன்னனை உதியன் வென்று, அவனைத் தனக்கு அடங்கி வாழச் செய்தான். அதனால் நன்னன், நன்னன் உதியன் என்று அழைக்கப்பட்டான் (அகம்.258:1).

உதியஞ்சேரல் தன்னைப் பாடிவந்த பரிசிலர் மகிழும்படி பரிசுகள் தந்தான் (அகம்.65). குழுமூரில் பெரிய சமையல் கூடம் ஒன்றை வைத்து எல்லோருக்கும் உணவு வழங்கினான் (அகம்.168). தன் முன்னோரின் நினைவு நாளன்று பெருஞ்சோறு (விருந்து) கொடுத்தான். அதனால் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்று அழைக்கப்பட்டான் (அகம்.233).

பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் சுருக்கமாகப் பெருஞ்சேரலாதன் என்று சில பாடல்களில் குறிப்பிடப் படுகிறான். பெருஞ்சேரலாதன் முதலாம் கரிகால் வளவனோடு வெண்ணியில் செய்த போரில் தோற்று ஓடி முதுகில் புண் பெற்றான். அதற்கு நாணமடைந்து போர்க்களத்திலேயே வடக்கிருந்து உயிர் விட்டான் (புறம்.65, 66; அகம்.55).

உதியஞ் சேரலின் மனைவியான நல்லினி, வெளியன் எனப்படும் சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் மகளாவாள். உதியஞ் சேரலுக்கும் நல்லினிக்கும் பிறந்த மகன் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவான் (பதிற். பதிகம்.2). இமைய வரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் ஆவான் (பதிற். பதிகம்.3).

உதியஞ் சேரலாதன் பாரதப் போரில் பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் உணவு அளித்தான் என்றும், அதனால் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்று பெயர் பெற்றான் என்றும் கூறுவது பொருந்தாது. இக் கருத்துக்கு அடிப்படையாக அமைந்த புறநானூற்றின் இரண்டாம் பாடல் உதியஞ் சேரலாதன் காலத்தில் எழுதப்பட்டதன்று. புறநானூற்றுப் பாடல்கள் நூலாகத் தொகுக்கப்பட்ட பிற்காலத்தில், உதியஞ் சேரலை நேர்முகமாகப் பாடும் பாடல்கள் இல்லாததைக் கண்ட முரஞ்சியூர் முடிநாகராயர் என்ற புலவர் புறம். 2ஆம் பாடலை எழுதி, புறநானூற்றின் தலைப்புப் பாடலாக வைத்தார்.

**சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் (கி.மு.250-225):**

சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறைக்கு அவன் முதல் மனைவி பெருந்தேவியிடம் பிறந்தவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் ஆவான் (பதிற். பதிகம்.7). செல்வக் கடுங்கோ ஆவியர் தலைவன் பதுமனின் மகளை மணந்து, தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைப் பெற்றான் (பதிற்.பதிகம் 8). உதியஞ் சேரலின் மகனான இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பதுமனின் மற்றொரு மகளை மணந்துகொண்டபடியால், செல்வக் கடுங்கோ வாழியாதனும் நெடுஞ்சேரலாதனும் சகலர் ஆகிறார்கள் (பதிற்.பதிகம் 4, 6).

செல்வக் கடுங்கோ வாழியாதன் வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை அரசாண்டு வந்தான் (புறம்.387). அயிரை மலையும், நேரி மலையும், பூழி நாடும் இவன் நாட்டில் இருந்தன (பதிற், 67, 70; புறம். 387). இவன் ஆட்சிக்குட்பட்ட கொடுமணம் முத்துக்குப் பேர்போனது; பந்தர் என்ற நகர் ஆபரணத்துக்குச் சிறந்தது. (பதிற். 67)

செல்வக் கடுங்கோ தன்னைப் பாடிய கபிலருக்கு நூறாயிரம் பொற்காசுகள் கொடுத்ததோடு, நன்றா என்னும்

குன்றின்மேல் ஏறிக் கண்ணுக்குத் தென்பட்ட ஊர்களை யெல்லாம் அவருக்குப் பரிசாகத் தந்தான் (பதிற். பதிகம், 7).

## சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ (கி.மு.250-225):

சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறையின் இளைய மனைவிக்குப் பிறந்தவர் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆவார். இவர் செல்வக் கடுங்கோ வாழியாதனின் தம்பியாவார். செல்வக் கடுங்கோவின் மகனான பெருஞ்சேரல் இரும்பொறை சிறுவனாக இருந்தபோதே செல்வக் கடுங்கோ இறந்து போனான். அதனால் செல்வக் கடுங்கோவிற்குப்பிறகு சேரமான் பாலை 'பாடிய பெருங் கடுங்கோ சேர வேந்தராகச் சில காலம் வஞ்சியிலிருந்து ஆட்சி செலுத்தினார்.

> தண் பொருநைப் புனல் பாயும்
> விண்பொரு புகழ் விறல் வஞ்சி
> பாடல் சான்ற விறல் வேந்தனும்மே (புறம். 11: 5-7)

என்று பேய்மகள் இளவெயினி என்ற பெண்மணி இவரைப் பாடுகிறாள்.

பெருஞ்சேரல் இரும்பொறை ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் வயதை அடைந்த பிறகு, பெருங்கடுங்கோ அவனிடம் சேரநாட்டின் ஆட்சியை ஒப்படைத்துவிட்டுக் கவி எழுதுவதில் ஈடுபட்டார். இவர் எழுதிய பாடல்களில் முப்பத்து மூன்று சங்கத் தொகைகளில் காணப்படுகின்றன. காதலர் பிரிவைப் பாடும் பாலைத்திணைப் பாடல்களை மிகுதியாகப் பாடியதால் இவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று அழைக்கப்பட்டார்.

## மருதம் பாடிய இளங்கடுங்கோ (கி.மு.250-225):

மருதத்திணைப் பாடல்களைப் (அகம்.96, 176; நற்.50) பாடியதால் மருதம் பாடிய இளங்கடுங்கோ என்று அழைக்கப்பட்டவர் சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறையின் மூன்றாவது மகனாவார். அந்துவஞ் சேரலின் மூத்த மனைவிக்குப் பிறந்தவன் செல்வக் கடுங்கோ; இரண்டாவது மனைவிக்குப் பிறந்த இருவரில் பெரியவன் பெருங்கடுங்கோ, இளையவன் இளங் கடுங்கோ.

செல்வக் கடுங்கோவும் பெருங் கடுங்கோவும் வஞ்சி நகரைத் தலைநகராகக் கொண்டு சேரநாட்டை ஆட்சி செய்ததைப் பாடல்கள் கூறுகின்றன (புறம். 387, 11). ஆனால் மருதம் பாடிய இளங் கடுங்கோ சேரநாட்டை ஆண்டதாகத் தெரியவில்லை.

**சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் (கி.மு.250-225):**

சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனின் மகன் குடக்கோ நெடுஞ்சேரலாதன் ஆவான். சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை ஆண்டுவந்தபோது (புறம்.387), நெடுஞ் சேரலாதன் மாந்தை (மரந்தை) நகரில் வசித்து வந்தான் (அகம்.127). சேரநாட்டுக் காகப் பல போர்களில் ஈடுபட்டான். சேரநாட்டுக்கு வரும் வணிகக் கப்பல்களை வழிமறித்துக் கொள்ளை யடிக்கும் கடற் கொள்ளைக்காரர்களான கடம்பரை முறியடித்தான் (பதிற். 11, 17, 20; அகம். 127, 347). யவனர்களைச் சிறை செய்து, கைகளைப் பின்புறமாகக் கட்டி, தலையில் எண்ணெயை ஊற்றி அவமானப்படுத்தி, அணிகலமும் வயிரமும் பெற்ற பிறகு, விடுதலை செய்தான் (பதிற். பதிகம்.2). இமயமலை வரை சென்று, அம்மலையின் மேல் வில் அடையாளத்தைப் பொறித்தான் (பதிற். 11, அகம். 127, 396). இறுதியில் தன் மைத்துனனான சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற் கிள்ளியுடன் போர் செய்தான். அந்தப் போரில் இரு வேந்தர்களின் படைகள் முற்றிலும் அழிந்துபோக இரு வேந்தர்களும் தம்முள் போர் செய்து மடிந்தார்கள் (புறம். 62, 63, 368).

நெடுஞ்சேரலாதன் மனைவியர் இருவரில், ஆவியர்குடி மகளுக்குக் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் பிறந்தனர்; சோழர்குடி மகளுக்குச் செங்குட்டுவன் பிறந்தான் (பதிற். பதிகம் 4, 5, 6).

**பல்யானைச் செல்கெழு குட்டுவன் (கி.மு.250-225):**

'யானைச்செல்' என்ற தொடர் யானைக் கூட்டத்தைக் குறிப்பிடும். பல யானைக் கூட்டங்களை வைத்திருந்ததால் இவன் - பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்று

அழைக்கப்பட்டான். யானைக்கூட்டங்களை வரிசையாக நீளமாக நிற்க வைத்து, அவற்றின் மூலம் இரு கடல் நீரையும் தன் இருப்பிடத்திற்குக் கொண்டு வரச் செய்து ஒரு பகலிலே குளித்தான் என்று பதிற்றுப்பத்தின் மூன்றாம் பதிகம் கூறுகிறது.

பல்யானைச் செல்கெழு குட்டுடன் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் தம்பியாவான் (பதிற். பதிகம் 3). ஆனைமலையைச் சூழ்ந்த உம்பற்காட்டுப் பகுதியை இவன் ஆட்சி செய்தான். அகப்பாவை அழித்துக் கொங்கர் நாட்டைக் கைப்பற்றினான். அயிரை மலையின் தலைவன், பூழியர் கோமான், மழவரின் கவசம் என்று இவன் போற்றப்படுகிறான் (பதிற். 21, 22). பாலைக் கௌதமனாருக்காகப் பத்துப் பெருவேள்விகள் செய்தான். முடிவில் துறவு பூண்டு காட்டிற்குச் சென்றான் (பதிற். பதிகம் 3).

புறம்.366ஆம் பாடலில் கோதமனாரால் பாடப்பட்ட 'தருமபுத்திரன்' பல்யானைச் செல்கெழு குட்டுவனே என்று கருதப்படுகிறது.

**சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை (கி.மு.225-200):**

பெருஞ்சேரல் இரும்பொறை, சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனின் மகன் ஆவான் (பதிற்.பதிகம் 8). இவன் இடையர் தலைவன் கழுவுளை அடக்கினான் (பதிற்.71). குதிரைமலைப் பகுதியையும், தகடூரையும் ஆண்டுவந்த அதியமான் எழினியைப் போரில் கொன்றான் (பதிற். 78, புறம்.230). இதன் பிறகு குதிரைமலை சேரர் வசமாயிற்று.

பெருஞ்சேரல் இரும்பொறையின் போர் வெற்றிகளை விட, அவன் மோசிகீரனார் என்ற புலவருக்குக் கவரி வீசியது மறக்க முடியாத செயலாகும். பெருஞ்சேரல் இரும் பொறையைத் தேடிவந்த மோசிகீரனார் வழிநடைக் களைப்பால் முரசு கட்டிலில் படுத்து உறங்கிவிட்டார். முரசு கட்டிலை மாசுபடுத்தியவனை வெட்டுவதற்குப் பெருஞ்சேரல் இரும்பொறை வாளை உயர்த்தினான். உறங்குபவர் புலவர் என்று உணர்ந்ததும் வாளைத் தூர எறிந்தான். சாமரத்தைத்

தானே எடுத்துத் தன் கைகளால் சில்லென்ற காற்று எழும்படி புலவருக்கு வீசினான். இந்த நிகழ்ச்சியை மோசிகீரானாரே ஒரு பாடலில் நெகிழ்ச்சியோடு வருணிக்கிறார் (புறம்.50).

இவன் புத்திர காமேஷ்டி யாகம் செய்து புதல்வனைப் பெற்றான் என்று ஒரு பாடல் கூறுகிறது (பதிற்.74). அந்தப் புதல்வன் சேரமான் இளஞ்சேரல் இரும்பொறையாவான் (பதிற்.பதிகம்.9).

**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் (கி.மு.225-200):**

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியோடு போர் புரிந்தபோது இரு தரப்புப் படைகளோடு இரு வேந்தரும் போர்க்களத்தில் மாண்டனர். இறந்து கிடக்கும் சேர சோழ மன்னர்களைக் கண்டு கதறிய பரணர், 'இவர்கள் நாடு இனி என்ன ஆகுமோ?' என்று அஞ்சினார் (புறம்.63). அவர் அஞ்சியது போலவே சேரநாடு பாழாயிற்று. சேரநாட்டின் ஒருபகுதியை நன்னன் கைப்பற்றிக் கொண்டான். எஞ்சிய பகுதி பாதுகாப்பவர் இல்லாமல் சீரழிந்தது. நாடெங்கும் வழிப்பறிக் கள்வர் பெருகினர். சேரநாட்டின் செல்வந்தர்கள் வறுமையுற்றனர். போர்வீரர்கள் சிதறுண்டு போயினர். போர்முரசை அடிப்பவர் இல்லாமையால் ஒரு மூலையில் கிடந்தது. வழிப்பறி செய்வோருக்கு அஞ்சி மக்கள் கோயிலுக்குச் செல்வதைக்கூட நிறுத்திக் கொண்டார்கள்.

நெடுஞ்சேரலாதன் தலைமுறையில் வஞ்சியிலிருந்து ஆட்சிபுரிந்த சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் நெடுஞ்சேரலாதனுக்கு முன்பே சிக்கற்பள்ளி என்ற இடத்தில் இறந்து போனான். செல்வக் கடுங்கோ இறந்தபோது அவன் மகன் பெருஞ்சேரல் இரும்பொறை வஞ்சி நகரிலிருந்து ஆட்சி செய்யக்கூடிய வயதை அடையவில்லை; சிறுவனாக இருந்தான். அதனால் செல்வக் கடுங்கோவின் தம்பி பாலை பாடிய பெருங்கடுங்கோ வஞ்சி நகரின் வேந்தனானான். பெருங்கடுங்கோவுக்குக் கவிபாடும் திறமையிருந்த அளவுக்கு ஆட்சி நடத்தும் திறமை இல்லை. இந்நிலையில் சீரழிந்த சேரநாட்டைத் திருத்தும் பணி நெடுஞ்சேரலாதனின் மூத்த

மகனான களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் தோள்களில் விழுந்தது

சேரநாட்டை மீண்டும் சிறந்த நிலைக்குக் கொண்டுவர நார்முடிச் சேரல் பெரும்பாடு பட்டான். முதலில் வழிப்பறிக் கள்வரைத் தொலைத்துச் சேரநாட்டுப் பெருவழிகளில் மக்கள் அச்சமின்றி நடமாடச் செய்தான். நெடுநாள் இடைவெளிக்குப் பிறகு மக்கள் திருமால் கோயிலுக்குத் திரளாகச் சென்று கடவுளை வழிபட்டு மகிழ்ச்சியோடு பாதுகாப்பாக வீடு திரும்பினர். அடுத்தபடியாக, சிதைந்துபோன பொருளா தாரத்தை நார்முடிச்சேரல் சீர் செய்து, வறுமையுற்ற குடி மக்களை மீண்டும் செல்வந்தர்களாக்கினான். சிதறுண்டு போன போர்வீரர்களை ஒன்றுதிரட்டி உற்சாகப்படுத்தினான். மூலையில் கிடந்த போர்முரசு மீண்டும் முழங்கலாயிற்று (பதிற்.31, 32, 37).

நார்முடிச் சேரல் படை நடத்திச் சென்று வாகைப் போர்க்களத்தில் நன்னனை வென்று, அவனிடம் இழந்த சேர நாட்டின் பகுதிகளை மீட்டான் (அகம்.199, பதிற். 40).

சேரநாட்டைச் செப்பனிடும் பணியில் ஈடுபட்ட நார்முடிச்சேரல், பொன்முடியைச் சூடாமல் நாரால் ஆன முடியைச் சூடி, களங்காயால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தான். அதனால் அவன் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் என்று அழைக்கப்பட்டான்.

### சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் (செங்குட்டுவன்) (கி.மு.225-200):

நெடுஞ்சேரலாதன் மனைவியர் இருவர். ஒருத்தி ஆவியர் குடியைச் சேர்ந்தவள். பதுமனின் மகள். இவளுக்குப் பிறந்தவர்கள் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் ஆவர் (பதிற்.பதிகம்.4, 6). நெடுஞ்சேரலாதனின் மற்றொரு மனைவி சோழர் குடியைச் சேர்ந்தவள். சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியின் மகள். (முடித்தலைக்கோ, மணக்கிள்ளி என்று பதிற்றுப்பத்து ஐந்தாம் பதிகத்தில் கூறப்படுகிறான்.) சோழன் மகள் பெயர் நற்சோணை என்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார் (சிலப்.

பதிகம் 1-2, உரை). நெடுஞ் சேரலாதனுக்கு நற்சோணையிடம் பிறந்தவனே செங்குட்டுவன்.[75] இவன் பெயர் சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் என்று புறநானூற்றில் காணப்படுகிறது (புறம்.369).

நெடுஞ்சேரலாதன் இறப்பால் சீரழிந்த சேரநாட்டைக் களங்காய்க்கண்ணி சீர்திருத்தியபின், நேரிமலையில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டான் (புறம்.40).

சிறுவனாக இருந்த பெருஞ்சேரல் இரும்பொறை பெரியவனாகி வஞ்சியின் அரசனானான். சில போர்களையும் செய்தான். கழுவுளை அடக்கினான் (பதிற்.71). அதியமான் எழினியை வென்றான் (பதிற்.78, புறம்.230). என்ற போதிலும் தந்தையைப் போல மாந்தை (மரந்தை)யில் வாழ்ந்து வந்த[76] செங்குட்டுவனே சேரநாட்டிற்காகப் பல போர்களைப் புரிந்து அதை வலிமைமிக்க நாடாக்கினான். இமயமலையில் கல்லெடுத்துப் பத்தினிச் சிலையை வடித்து வஞ்சியில் (கொடுங்கோளூரில்) கோயில் கட்டி அச்சிலையைப் பிரதிஷ்டை செய்தான்.

இனி, செங்குட்டுவன் வரலாற்றைச் சற்று விரிவாக ஆராய்வோம்.

### செங்குட்டுவன் செய்த போர்கள்

1. நெடுஞ்சேரலாதன் கடல் கொள்ளையரான கடம்பர்களை வென்றதைக் கண்டோம். செங்குட்டுவன்

---

75. செங்குட்டுவனுக்கு இளங்கோவடிகள் என்றொரு தம்பி இருந்தார் என்பதற்குச் சங்கப் பாடல்களிலோ சிலப்பதிகாரக் காப்பியப் பகுதியிலோ சான்றில்லை. இந்தக் கதையைக் கூறும் பகுதி (சிலப். 30:171-183) பிற்காலத்தவரால் எழுதப்பட்டு, சிலப்பதிகாரத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டதாகும்.

76. குரங்கு உளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை (அகம். 376:17-18)
கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்....
கடல்கெழு மரந்தை (நற். 395: 4, 9)
யானையங் குருகின் கானல் அம் பெருந்தோடு
அட்ட மள்ளர் ஆர்ப்பு இசை வெரூஉம்
குட்டுவன் மரந்தை (குறுந். 34:4-6)

தலைமுறையிலும் கடல் கொள்ளையர் மேலைக் கடலில் வரும் வணிகக் கப்பல்களுக்குத் தொல்லை கொடுத்து வந்தனர். செங்குட்டுவன் பெரும்படையோடு சென்று கடல் கொள்ளையரைச் சிதறடித்தான். அதன் பிறகு நீண்ட காலம் வரை கடல் கொள்ளையரின் அச்சமின்றி வணிகக் கப்பல்கள் மேலைக் கடலில் சென்றன (பதிற்.41, 45, 46, 48; அகம் 212; சிலப். 23:119; 29:38).

2. அறுகை என்பவன் செங்குட்டுவனின் நண்பன். மோகூர் மன்னன், அறுகையை நாட்டை விட்டு விரட்டிவிட்டான். அறுகை நெடுந்தூரத்தில் உள்ள ஒரு நாட்டில் ஒளிந்திருந்தான். அறுகையின் தீராத வருத்தத்தைத் தீர்த்து வைக்க, செங்குட்டுவன் மோகூர் மேல் படையெடுத்து, மோகூர் மன்னனையும் அவனுக்குத் துணையாக வந்த வேந்தரையும் வேளிரையும் வென்று, மோகூர் மன்னனின் காவல் மரமான வேப்பமரத்தை வெட்டினான். அம்மரத்தினால் போர் முரசு செய்து கொண்டான் (பதிற். 44, 49; சிலப்., 27:124-126).

3. செங்குட்டுவன் தலைமுறையில் சோழநாட்டின் கடற்கரைப் பகுதியைக் கரிகால் வளவன் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து ஆண்டுவந்தான். கரிகால் வளவன் செங்குட்டுவனுக்கு மைத்துனன் முறையாகிறான். சோழநாட்டின் உள்நாட்டுப் பகுதியை உறையூரிலிருந்து கிள்ளிவழிச் சோழனும், பெருங்கோக்கிள்ளி என்று அழைக்கப்பட்டவனுமான கோப்பெருஞ்சோழன் ஆண்டு வந்தான். வளவனும் கிள்ளியும் சோழநாடு முழுவதையும் பங்கு போட்டுக்கொண்டு ஆள்வதை விரும்பாத சோழர் குடியைச் சேர்ந்த ஒன்பது பேர் கலகம் விளைவித்தார்கள். இளவரசர்களாக இருப்பதோடு திருப்தியடையாமல், வளவன்-கிள்ளி ஏவலைக் கேளாமல் உட்பூசலால் சோழ வளநாட்டை அழிப்பதில் ஈடுபட்டார்கள். செங்குட்டுவன் தலையிட்டுக் கலகம் விளைவித்த ஒன்பதின்மரை நேரிவாயில் என்னுமிடத்தில் வென்று சோழநாட்டைக் காப்பாற்றினான் (பதிற்,பதிகம் 5; சிலப்.27:117-123; 28:116-117).

4. ஆரிய அரசர் கூட்டணி ஒன்று தமிழ்நாட்டின் மேல் படையெடுத்தபோது, தமிழ்ப் படைகளின் சார்பில்

யானைப்படை நடத்திச் சென்று ஆரியரை முறியடித்தான் (சிலப். 25:156-159). தன் தாயைக் கங்கையாற்றில் புனித நீராட அழைத்துச் சென்றபோது, தடுத்து நிறுத்திய ஆரிய மன்னரை வென்றான் (சிலப்.25:160-163). பத்தினிக் கடவுளின் சிலைக்குக் கல்லெடுக்க இமயமலைக்குச் சென்றபோது, வழியில் குறுக்கிட்ட கனகவிசயர் கூட்டணியை வென்றான் (பதிற், பதிகம் 5; சிலப். 26:176-254.).

5. இடும்பில், கொடுகூர், வியலூர் என்ற ஊர்களில் நிகழ்ந்த போர்களில் வெற்றி பெற்றான் (பதிற். பதிகம் 5).

மேலே குறிப்பிட்ட போர்களில் முதல் இரண்டு போர்களையே பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. எஞ்சிய போர்களைப் பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பதிகமும் சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றன.

**செங்குட்டுவனின் வடநாட்டுப் பயணம்**

செங்குட்டுவன் வடநாடு சென்றதுபற்றி சங்கப் பாடல்களில் எவ்விதக் குறிப்பும் இல்லை. பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பதிகத்தில், 'பத்தினிக் கடவுள் சிலை செய்வதற்குத் தேவையான கல்லை எடுப்பதற்காக, காடுகளைக் கடந்துசென்று, ஆரியர் தலைவனை வென்று, (இமய மலையில்) கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டினான்' என்ற குறிப்புக் காணப்படுகிறது.

> கடவுள் பத்தினிக் கற்கோள் வேண்டி,
> கான்நவில் கானம் கணையில் போகி,
> ஆரிய அண்ணலை வீட்டி, பேர்இசை
> இன்பல் அருவிக் கங்கை மண்ணி (பதிற். பதிகம் 5:4-7)

இந்தச் சிறுகுறிப்பைப் பெரிதாக்கி, இளங்கோவடிகள் ஒரு காண்டமே எழுதிவிட்டார். செங்குட்டுவன் வடநாட்டின் மேல் படையெடுத்ததாக இளங்கோவடிகள் கூறவில்லை. மாறாக, பத்தினிக் கடவுளின் சிலை செய்யக் கல் எடுப்பதற்காகவே அவன் வடநாடு சென்றான் என்று பலவிடங்களில் பலமுறை கூறித் தெளிவுபடுத்துகிறார்.

> இமயமால் வரைக்கு எங்கோன் செல்வது
> கடவுள் எழுத ஓர் கற்கே ஆதலின் (சிலப். 25:168-169)

என்று செங்குட்டுவன் அமைச்சனான வில்லவன் கோதை கூறுவதையும்,

> வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது
> கடவுள் எழுத ஓர் கற்கே ஆயின் (சிலப். 26:150-151)

என்று நூற்றுவர் கன்னரின் தூதுவனான சஞ்சயன் கூறுவதையும் பார்த்தால் வடநாட்டின்மேல் படையெடுப்பது செங்குட்டுவன் நோக்கமன்று என்பதை உணரலாம்.

வடநாட்டுப் பயணம் தொடங்கிய செங்குட்டுவன். நூற்றுவர் கன்னர் உதவிய தோணிகள் மூலம் கங்கையாற்றைக் கடந்தான். இமயமலை நோக்கிச் செங்குட்டுவன் பரிவாரம் செல்லும்போது, அவர்களைத் தடுக்க முயன்ற கனக விசயர்களைச் செங்குட்டுவன் தோற்கடித்துச் சிறைபிடித்தான். கனக விசயர்கள் பேரரசர்கள் என்றோ, வலிமை மிக்க படை கொண்டவர்கள் என்றோ கருதுவதற்கில்லை. அவர்கள் கங்கையாற்றின் வடக்கிலிருந்த சிறு நிலப் பகுதியை ஆண்ட குறுநிலத் தலைவர்களாக இருக்கலாம். இமயமலை செல்லும் பயணிகளிடம் கப்பம் பெற்றும், வழிப்பறி செய்தும் வாழ்ந்தவர்களாக இருக்கலாம். செங்குட்டுவன் தாக்கியதும் புறமுதுகு காட்டி ஓடி, துறவிகள் வேடம் பூண்டு தப்பிக்க முயன்ற கனக விசயர்களைச் சிறைப்பிடித்து வந்தது வீரச் செயலன்று என்று சோழனும் பாண்டியனும் செங்குட்டுவனை இகழ்ந்ததாகச் சிலப்பதிகாரம் கூறுவதை நோக்கும்போது (சிலப்.28:80-107), செங்குட்டுவன் கனக விசயர்களோடு செய்தது போரன்று, சிறுபூசல் என்பது தெளிவாகிறது.

வடநாட்டுப் பயணம் செங்குட்டுவனுக்கோ அவனது முன்னோர்களுக்கோ புதியதன்று. பத்தினிக் கடவுளுக்குக் கல்லெடுக்கச் செல்வதற்கு முன்பு, தன் தாயைக் கங்கையில் நீராட்டச் செங்குட்டுவன் வடநாடு சென்றான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

> கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
> எங்கோ மகளை ஆட்டிய அந்நாள் (சிலப். 25:160-161)

செங்குட்டுவன் தந்தையான நெடுஞ்சேரலாதன் இமயமலை வரை சென்று அங்குத் தன் வில் அடையாளத்தைப் பொறித்து வந்தான். நெடுஞ்சேரலாதன் தனது முன்னோரைப்

போல இமயமலைக்குச் சென்று வில்லைப் பொறித்தான் என்று சங்கப் பாடல் கூறுகிறது.

வலம்படு முரசின் சேரலாதன்
..... ..... இமயத்து
முன்னோர் மருள வணங்குவில் பொறித்து (அகம்.127:3-5)

(முன்னோர் மருள - முன்னோரைப் போல. 'மருள' ஒப்புப் பொருளில் வரும் என்று தொல்காப்பியம் (உவம இயல், 15) கூறுகிறது)

எனவே இமயமலைக்கு யாத்திரை செல்வது சேர குடும்பத்தினர் வழக்கம் என்று தெரிகிறது.

**செங்குட்டுவனும் சதகர்ணியும்**

சதகர்ணி என்ற சொல் ஆந்திர சாதவாகன மன்னர்களைக் குறிப்பிடும். கி.மு.194-185இல் ஆட்சி புரிந்த ஸ்ரீசதகர்ணி எனப்படும் முதலாம் சதகர்ணி, மௌரியப் பேரரசிடமிருந்து மேற்கு மாளவத்தையும், நர்மதைப் பள்ளத்தாக்கிலுள்ள அனூபாவையும், விதர்ப்பத்தையும் கைப்பற்றினான். இரண்டு அசுவமேத யாகங்களையும், ஒரு இராசசூய யாகத்தையும் செய்து சாம்ராட் (பேரரசன்) என்று பெயர் சூடிக் கொண்டான். (சாதவாகனப் பேரரசு - கே. கோபாலாச்சாரி, Comprehensive History of India - Vol. II-PP. 298-302)

செங்குட்டுவன் காலநிலையைக் கி.மு.225-200 என்று தோராயமாகக் கொண்டோம் என்றபோதிலும், செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குச் சிலை செய்யும் கல்லெடுக்க வடநாடு சென்றபோது, அவன் ஐம்பதாண்டுகளைக் கடந்திருந்தான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.[77] எனவே, செங்குட்டுவன் காலநிலையைக் கி.மு.225-175 என்று கொள்வதில் தவறில்லை. செங்குட்டுவன் கங்கையாற்றைக் கடந்தபோது, முதலாம் சதகர்ணி ஆண்டு கொண்டிருந்தான் என்று கருதலாம்.

'சதகர்ணி' என்ற சொல் நூறு காதுகளை உடையவன் என்று பொருள்படும். (சதம் - நூறு. கர்ணம் - காது). நாட்டில்

77. வையம் காவல் பூண்ட நின் நல்யாண்டு
ஐயைந்து இரட்டி சென்றதன் பின்னும் *(சிலப். 28:129-130)*
ஐயைந்து இரட்டி - $(5 \times 5)2 = 25 \times 2 = 50$

நிகழ்பவற்றை இரண்டு காதுகளால் அல்ல, நூறு காதுகளால் கேட்டு அறிபவன் என்று அரசனைப் புகழும் தொடர் சதகர்ணியாகும். சதகர்ணி என்ற பெயரையே 'நூற்றுவர் கன்னர்' என்று சிலப்பதிகாரம் மொழிபெயர்த்துக் கூறுகிறது. நூற்றுவர் கன்னர் செங்குட்டுவனின் நண்பர் என்றும், கங்கையாற்றைக் கடக்க உதவி செய்தார் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது:

வேற்றுமையின்றி நின்னொடு கலந்த
நூற்றுவர் கன்னர் (சிலப். 26:148-149)

கங்கைப் பேரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங்கு எய்தி (சிலப். 26:176-177)

## செங்குட்டுவனும் கஜபாகுவும்

கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் முதலாம் கஜபாகு என்பவன் இலங்கையை ஆண்டு வந்தான். இவன் ஆட்சிக் காலம் கி.பி.171-193 என்று கெய்கர் என்பவரும், கி.பி.114-136 என்று மெண்டிஸ் என்பவரும் கூறுகிறார்கள். இவனைப் பற்றி மெண்டிஸ் கூறுவதாவது:

''வங்கநாசிக திஸ்ஸாவுக்குப் பின் கஜபாகுகா காமினி (கி.பி.114-136) அரியணை ஏறினான். தன் தந்தையின் ஆட்சிக் காலத்தில் இலங்கைக் குடிமக்கள் சிலர் சிறை எடுக்கப்பட்டு, காவிரிக்குக் கரை அமைக்கும் வேலையில் ஈடுபடுத்தப் பட்டார்கள் என்பதை அறிந்த கஜபாகு, சோழநாட்டின் மேல் படையெடுத்து, இலங்கையிலிருந்து கொண்டு செல்லப் பட்டவர்களின் எண்ணிக்கையைப் போல இருமடங்கு தமிழர்களைச் சிறை செய்துகொண்டு வந்தான் என்று 'பூஜாவளி' என்ற நூல் கூறுகிறது. இக்கூற்றுக்கு வேறு ஆதாரமில்லை... அவ்வாறே பத்தினி வழிபாடு கி.பி.14ஆம் நூற்றாண்டுக்கு முன் இலங்கையில் இருந்ததற்கு ஆதாரமில்லை.''[78]

செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் கட்டி வழிபட்டபோது குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும், கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் பத்தினிச்

78. G.C. Mendis - Ceylon - in Comprehensive History of India - Vol. II - PP.585 - 586.

சிலையைப் பார்த்து, "இந்த நன்னாளில் இமயவரம்பன் (செங்குட்டுவன்) செய்த வேள்வியில் நீ எழுந்தருளியதுபோல, எங்கள் நாட்டிலும் வந்தருள வேண்டும்" என்று வேண்டினார்கள். அப்போது "தந்தேன் வரம்" என்று ஒரு குரல் எழுந்தது என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

> குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும்
> கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்.
> "எம் நாட்டு ஆங்கண் இமயவரம்பனின்
> நன்னாள் செய்த நாளணி வேள்வியின்
> வந்து ஈக!" என்றே வணங்கினர் வேண்டத்
> "தந்தேன்வரம்!" என்று எழுந்தது ஒரு குரல்.
>
> (சிலப். 30: 159-164)

இதன் அடிப்படையில், முதலாம் கயவாகுவும் செங்குட்டுவனும் சமகாலத்தவர் என்றும், செங்குட்டுவன் காலமும், அவன் வாழ்ந்த சங்ககாலமும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்றும் கருதப்பட்டன. ஆனால் முதலாம் கஜபாகு செங்குட்டுவனோடு இருந்தான் என்பதற்குச் சங்கப் பாடல்களிலோ, பதிற்றுப்பத்தின் பதிகத்திலோ, இலங்கை வரலாறு கூறும் தீப வம்சம், மகாவம்சம் என்ற நூல்களிலோ, கஜவாகுவின் வீரச் செயல்களைக் கூறும் கல்வெட்டுகளிலோ எவ்வித ஆதாரமும் இல்லை. இந்நிலையில், செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் கட்டி வழிபட்டபோது 'கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்' உடன் இருந்தான் என்று கூறும் சிலப்பதிகாரத்தின் இறுதி அடிகள் பிற்சேர்க்கையாக இருக்க வேண்டும்; இளங்கோவடிகளால் எழுதப்பட்டவை யல்ல.

பத்தினிக் கடவுள் வழிபாட்டை இலங்கையில் புகுத்தியவன் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இரண்டாம் கஜபாகு ஆவான்.[79] சிலப்பதிகாரத்தின் முன்பு வைக்கப்பட்டுள்ள 'பிற்காலத்து உரைபெறு கட்டுரை'யில், "பாண்டியனும் கோசரும் பத்தினிக் கடவுளுக்கு விழா எடுத்து நலம் பெற்றதைக் கேள்விப்பட்ட 'கடல் சூழ் இலங்கைக் கயவாகு என்பான்' தன் நாட்டில் பத்தினிக்குக் கோயில் கட்டி, ஆடி மாதம் விழா எடுத்து, பத்தினிச் சிலையை நகர்வலம்

79. Gajabahu II (A.D. 1137 - 53) introduced the worship of Kannagi into Sri Lanka - South India and Sri Lanka - K.K. Pillai (1975), p. 174.

செய்வித்தான்''- என்று கூறப்படுகிறது. உரைபெறு கட்டுரையில் கூறப்படும் கயவாகு, இரண்டாம் கயவாகு ஆவான். உரைபெறு கட்டுரையில் 'கயவாகு' என்ற பெயரைக் கண்ட பிற்காலத்தில் வாழ்ந்த ஒருவர், செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் கட்டி வழிபாடு செய்தபோது கயவாகுவும் உடன் இருந்தான் என்றொரு கதையைக் கட்டிவிட்டார். இளங்கோவடிகள் செங்குட்டுவனின் தம்பி என்ற கதையைக் கட்டிவிட்டவரும் இவரே. சிலப்பதிகாரத்தில் இறுதி 47 அடிகள் (சிலப்.30: 156-202) இவரால் எழுதப்பட்டவையே. இளங்கோவடிகள் எழுதிய சிலப்பதி காரத்தின் முப்பதாவது காதையான வரந்தரு காதை 155 அடிகளோடு முடிந்துவிட்டது. 156-202 அடிகள் பிற்சேர்க்கையாகும்.

**செங்குட்டுவனும் இளங்கோவடிகளும்:**

ஏறத்தாழ ஐயாயிரம் அடிகள் கொண்ட சிலப்பதிகாரக் காப்பியப் பகுதியில் இளங்கோவடிகள் தம்மைப் பற்றி எதுவும் கூறிக் கொள்ளவில்லை. ஆனால் சிலப்பதிகாரத்தின் இறுதி 47 அடிகளில் (சிலப். 30: 156-202), இளங்கோவடிகள் (?) தம் வரலாற்றைக் கூறிக்கொள்கிறார்; வாசகர்களை அழைத்து நீண்டதொரு உபதேசம் செய்கிறார். 'நிலையில்லா உலகில் நல்ல செயல்களைச் செய்து, செல்லும் தேசத்துக்கு உறுதுணை தேடுங்கள். இவ்வுலகிலே நெடுநாள் வாழ்வீர்களாக!' என்று கூறி நூலை முடிக்கிறார்.

இளங்கோவடிகள் (?) தம் சுய சரிதையைப் பின்வருமாறு கூறிக்கொள்கிறார்:

''செங்குட்டுவனும் மற்ற அரசர்களும் அவர்களுடைய பரிவாரங்களும் பத்தினிக்கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பிறகு செங்குட்டுவன் மாடல மறையோனோடு வேள்விச் சாலைக்குச் சென்றுவிட்டான். நானும் சென்றேன். பத்தினிக் கடவுள் தேவந்திகைமேல் தோன்றி என் எதிரில் என் வரலாற்றைக் கூறலானாள்.

'வஞ்சி நகரில் மணிமண்டபத்தில் உன் தந்தையோடு நீ இருந்த போது, ஒரு சோதிடன் உன்னைப் பார்த்து, அரசனாகும் இலக்கணம் உனக்கு இருப்பதாகச் சொன்னான். நீ

சோதிடனைக் கோபித்துப் பார்த்தாய். செங்குட்டுவன் மனத்துயரம் நீங்க, குணவாயில் கோட்டத்துத் துறவிகள் முன்சென்று, அரச பாரத்தைத் துறந்து துறவி ஆனாய். சிந்தைக்கு எட்டாமல் நெடுந்தூரத்திலுள்ள முடிவில்லாத பேரின்பம் தரும் நாட்டை அரசாளும் வேந்தனே!'

இவ்வாறு என் வரலாற்றைக் கூறிய இமையோர் இளங்கொடி தன் வரலாற்றைத் தெரிந்து கேட்ட திருவுடை நல்லோரே!''

- என்று இளங்கோவடிகள் (?) தன் சுயசரிதையைக் கூறிய பிறகு, உபதேசத்தைத் தொடங்குகிறார்.

இளங்கோவடிகள் செங்குட்டுவன் தம்பி என்பதற்குச் சங்கப்பாடல்களில் ஆதாரம் இல்லை. நெடுஞ்சேரலாதனுக்கு இரு மனைவியர் இருந்தனர். ஒருத்தி ஆவியர் குடியைச் சேர்ந்தவள். அவளுக்குப் பிறந்தவர்கள் களங்காய்க் கண்ணிநார் முடிச்சேரலும், ஆடு கோட்பாட்டுச் சேரலாதனும் ஆவர். மற்றொருத்தி, சோழனின் மகள். அவளுக்குப் பிறந்தவன் செங்குட்டுவன். இவ்வாறு பதிற்றுப்பத்தின் 4, 5, 6 பதிகங்கள் கூறுகின்றன. சோழன் மகளுக்கு மற்றொரு மகன் இருந்ததாகப் பதிகங்கள் கூறவில்லை. எனவே, செங்குட்டுவனின் தம்பி இளங்கோவடிகள் என்று கட்டுக்கதை கூறும் சிலப்பதிகாரத்தின் இறுதி 47 அடிகள் (சிலப் 30. 156-202) பிற்சேர்க்கை என்று தள்ள வேண்டும்.

செங்குட்டுவன் வாழ்ந்தது கி.மு. மூன்றாம் நூற்றாண்டு, சிலப்பதிகாரம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. ஆறு நூற்றாண்டு இடைவெளியில் வாழ்ந்த இருவர் அண்ணன் தம்பியாக இருக்க முடியாது.

**ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் (கி.மு. 200 - 175):**

நெடுஞ்சேரலாதனுக்கும் ஆவியர்குடி மகளுக்கும் பிறந்தவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதிற். பதிகம் 6), களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கும், செங்குட்டுவனுக்கும் இவன் இளையவன். நார் முடிச்சேரல் பதிற்றுப்பத்தின் நான்காம் பத்திலும், செங்குட்டுவன் ஐந்தாம் பத்திலும், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் ஆறாம் பத்திலும்

பாடப்படுவதால் இவ்வாறு கருத வேண்டியுள்ளது. ஆடுகோட்பாட்டுச்சேரலாதனைச் செங்குட்டுவனுக்கு அடுத்த தலைமுறையில் வைக்கலாம்.

ஆடுவதை ஒரு கொள்கையாக மேற்கொண்ட சேரலாதன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்று அழைக்கப்பட்டான். இவன் போர்க்களத்தில் வாளை உயர்த்தி ஆடினான் என்றும் (பதிற். 56), மகளிரோடு துணைங்கைக் கூத்து ஆடினான் என்றும் (பதிற். 52), ஆடல் பாடல் விநோதங்களில் காலத்தைக் கழித்தான் என்றும் (பதிற். 51,60) பதிற்றுப்பத்துப் பாடல்கள் கூறுகின்றன. ஆட்டக்கலையிலே நாட்டங்கொண்டதால் இவன் இயற்பெயர் மறைந்து போய் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற பெயர் நிலைத்துவிட்டது. தண்ட காரண்யத்திலிருந்து இவன் ஆடுகளைக் கொண்டு வந்து தொண்டியில் தந்தான் என்று பதிற்றுப்பத்தின் ஆறாம் பதிகம் கூறுவதைக் கொண்டு, ஆடுகளைக் கொண்டு வந்த சேரன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்று அழைக்கப்பட்டான் என்று சிலர் கூறுவார்கள். இது தவறு.

இவன் நறவு என்ற இடத்தில் இருந்து கொண்டு ஆடல் பாடல் விநோதங்களில் காலம் கழித்தான் (பதிற். 60). மகளிர்பால் இவனுக்கு மயக்கம் அதிகம். அவர்களோடு மகிழ்ந்து துணங்கைக் கூத்து ஆடி வருவதைக் கேள்விப்பட்ட இவன் மனைவி இவனைக் கோபித்தாள் (பதிற். 52). கலைஞர்கள் இவனைக் காணாவண்ணம் தடை செய்தாள். மனைவியின் கோபத்தைவிட இரவலரின் துன்பத்திற்கு அஞ்சிய இவன், வாராத இரவலரையும் தேரில் கொண்டு வந்து ஆடல் பாடல் மையல்களில் திளைத்தான் (பதிற். 57, 60). அதனால், 'இவன் மெல்லியன்!' (வலிமையற்றவன்) என்று மக்கள் பேசிக் கொண்டார்கள் (பதிற். 51).

கலைகளிலும் கன்னியரிடமும் ஈடுபாடு மிகுந்து காலங்கழித்த ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் பகைவரை வென்றான், திறைபெற்றான் என்று பதிற்றுப் பத்துப் பாடல்கள் கூறுவது உண்மையா உபசார வழக்கா என்று தெரியவில்லை (பதிற். 51, 53).

இவன் தண்டகாரண்யத்திலிருந்து ஆடுகளைத் தொண்டிக்குக் கொண்டு வந்தான். மழவரைப் போரில் சுருக்கினான். மன்னரை ஓட்டினான். குழந்தை வளர்ப்பவரைப் போலக் குடிமக்களைப் பாதுகாத்தான் என்று பதிற்றுப் பத்து ஆறாம் பதிகம் கூறுகிறது.

பெண்களிடம் ஈடுபாடு மிகுந்த இவனைப் பாடியவரும் ஒரு பெண்மணியே. காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்ற அந்தப் பெண்புலவர்க்கு ஆபரணமும் பொற்காசும் தந்து தன் பக்கத்திலேயே வைத்துக் கொண்டான்.

**சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறை (எனப்பட்ட) இளஞ்சேரல் இரும்பொறை (கி.மு. 200 - 175):**

இளஞ்சேரல் இரும்பொறை சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் மகனாவான் (பதிற். பதிகம்.9).

இளஞ்சேரல் சென்னியர் பெருமானை (சோழன்) வென்றான் என்று பதிற்றுப் பத்துப் பாடல் (85) கூறுகிறது. அந்தச் சென்னியர் பெருமான் கோப்பெருஞ்சோழன் என்பதைப் பதிகம் (9) தெளிவாக்குகிறது. இளஞ்சேரல் விச்சிக்கோனை வென்று அவனது ஐந்து கோட்டை மதில்களை அழித்தான். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் படைத்தலைவனாகப் பிற்காலத்தில் பணியாற்றிய பழையன் மாறன் இளைஞனாக இருந்தபோது, இளஞ்சேரலால் வெல்லப்பட்டான்.

இளஞ்சேரல் இரும்பொறையால் வெல்லப்பட்ட மூவருள், கோப்பெருஞ்சோழனும் விச்சிக்கோனும் இளஞ்சேரல் தலைமுறைக்கு முன் தலைமுறையிலும் (கி.மு.225-200) வாழ்ந்தவர்கள். இளஞ்சேரல் இளைஞனாக இருந்தபோது இவர்களோடு போர் செய்து வெற்றி பெற்றான்.

இளஞ்சேரலால் வெல்லப்பட்ட 'இளம் பழையன் மாறன்' இளஞ்சேரலுக்கு அடுத்த தலைமுறையிலும் (கி.மு.175-200) வாழ்ந்து, நெடுஞ்செழியன் படைத்தலைவ னாகப் பணியாற்றினான். பழையன் மாறனோடு போர் செய்த போது, இளஞ்சேரல் முதியவனாக இருந்திருக்க வேண்டும்.

சேர நாட்டின் பெருவழிகளில் நாற்சந்திகளில் இருந்த பூதகணங்களின் உருவங்களை வஞ்சி நகரில் அமைத்து இளஞ்சேரல் சாந்தி செய்தான். போரில் வென்ற பொருட்களை வஞ்சி நகருக்குக் கொண்டு வந்தான் (பதிற். பதிகம் 9).

இளஞ்சேரல் தன்னைப் புகழ்ந்து பாடிய பெருங்குன்றூர் கிழார்க்குப் பரிசு தராமல் ஏமாற்றி வந்தான். ஆனால் புலவர்க்குத் தெரியாமல் அவர் ஊரில் அவருக்காகப் பெரிய மாளிகை கட்டி, அதில் பல செல்வங்களையும் நிரப்பி, அம்மாளிகையைப் பாதுகாக்கக் காவலாளிகளையும் ஏற்பாடு செய்தான் (பதிற். பதிகம் 9). இதை யறியாத பெருங்குன்றூர் கிழார் மனம் நொந்து இளஞ்சேரலை இகழ்ந்து பாடினார் (புறம். 210, 211). புலவர் தன்னைப் பாடப் பாட மனம் பூரித்துப் போன இளஞ்சேரல், அவர் தன்னை இகழ்ந்து பாடினால் எவ்வாறு இருக்கும் என்று அறிய வேண்டி இவ்வாறு ஒரு நாடகம் ஆடினான் என்று கருதலாம்.

வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை ஆட்சி செய்த இளஞ்சேரல் இரும்பொறை, மூன்று போர்களில் ஈடுபட்டு கோப்பெருஞ்சோழன், விச்சிக்கோன், இளம் பழையன் மாறன் ஆகிய மூவரை வென்றதைக் கண்டோம். இந்தத் தலைமுறை யில் உதியன் வழிவந்தோர் ஒருவரும் காணப்படவில்லை. (செங்குட்டுவன் மகன் குட்டுவஞ்சேரல் - பரணரோடு சென்றவன் - என்ன ஆனான் என்று தெரியவில்லை. ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் கலைகளிலும் கன்னியரிடமும் ஈடுபட்டுக் காலங்கழித்தான்) எனவே, சேரநாட்டு நிர்வாகத்தையும் கவனித்துக் கொண்டு, போர்களிலும் ஈடுபட வேண்டிய அவசியம் இளஞ்சேரலுக்கு ஏற்பட்டது.

**சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை (கி.மு. 175 - 150):**

யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறையின் மகனாவான். வஞ்சி நகரில் இருந்துகொண்டு வெறும் அரசியல் நிர்வாகம் செய்வதில் மாந்தரஞ்சேரலுக்கு விருப்பமில்லை. போர்களில் ஈடுபட்டு புகழ்பெற விரும்பினான். அப்போது உதியன் வழிவந்த சேரமான் கோக்கோதை மார்பன் தொண்டியில் வாழ்ந்து

வந்தான் (புறம். 48, 49). அவனை வஞ்சிக்கு வரவழைத்து, அவனிடம் சேரநாட்டின் நிர்வாகத்தை ஒப்படைத்துவிட்டு, மாந்தரஞ்சேரல் தொண்டியில் வாழத் தொடங்கினான் (புறம்.17, நற்.18). தொண்டியில் இருந்து கொண்டு பல போர்களில் ஈடுபட்டான்.

கடற்கரைப் பகுதியில் அமைந்த ஒரு நிலப்பரப்பை ஆண்டு வந்த மூவன் என்பவனை மாந்தரஞ்சேரல் போரில் தோற்கடித்துக்கொன்றான். அவனது பற்களைப் பிடுங்கி, தன் வெற்றிக்கு அடையாளமாகத் தொண்டி நகரில் வாயிற்கதவில் பதித்தான் (நற். 18).

அடுத்தபடியாக, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு மாந்தரஞ் சேரல் போர்புரிந்தான். சேரன் வெற்றி பெறப்போகும் தருணத்தில், தேர்வண் மலையன் பெரும்படை கொண்டு வந்து, சோழனுக்கு உதவி செய்து மாந்தரஞ் சேரலைத் தோற்கடித்தான். "மலையன் மட்டும் வாராமல் இருந்திருந்தால், நான் எளிதில் போரில் வென்றிருப்பேன்" என்று மாந்தரஞ்சேரல் வருந்தினான் (புறம்.125)

கடலன் என்பவன் ஆண்டு வந்த விளங்கில் (அகம். 81) என்ற நாட்டின் மேல் படையெடுத்து, மாந்தரஞ்சேரல் வெற்றி பெற்றான். தன் வெற்றியைத் தகுந்தபடி புகழ்ந்துபாடக் கபிலர் உயிரோடு இல்லையே என்று வருந்தினான் (புறம். 53).

கடலன் நெடுஞ்செழியனின் பணவன் (அதிகாரி) என்று மாங்குளம் கல்வெட்டுக் கூறுகிறது.

மாந்தரஞ்சேரல், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு செய்த போரில் சிறைப்பட்டான். இவ்வாறு சிறைப்பட்டது தலையாலங்கானப் போரில் என்று கருதலாம். மாந்தரஞ்சேரல் சிறையிலிருந்து தப்பி, மீண்டும் அரியணை ஏறினான் (புறம். 17).

மாந்தரஞ்சேரல் செங்கோல் ஆட்சி செலுத்தினான். பகைவர் பயமின்றிக் குடிமக்களைப் பாதுகாத்தான். இத்தகைய நல்ல அரசன் நோயின்றி வாழவேண்டும் என்று குடிமக்கள் பிரார்த்தித்தார்கள் (புறம். 20, 22).

மாந்தரஞ்சேரல் கூடலூர் கிழார் என்ற புலவரைக் கொண்டு ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தான்.

மாந்தரஞ்சேரல் நோய்வாய்ப்பட்டிருந்த போது, எரிநட்சத்திரம் விழக் கண்ட கூடலூர் கிழார் அவன் இறந்த விடுவானோ என்று அஞ்சினார். எரி நட்சத்திரம் விழுந்த ஏழாம் நாள் மாந்தரஞ்சேரல் இறந்தான்.

**சேரமான் கோக்கோதை மார்பன் (கி.மு. 175 - 150):**

சேரமான் கோக்கோதை மார்பன் உதியஞ்சேரல் வழியில் வந்தவன். முதலில் தொண்டியில் வாழ்ந்து வந்தான் (புறம்.48). மாந்தரஞ்சேரலின் வேண்டுகோளை ஏற்று, வஞ்சிக்கு வந்து முடிசூட்டிக் கொண்டான். இவன் முடிசூட்டிக்கொண்ட நாளைப் 'பெருநாள்' என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. அப்பெருநாளில் பெரியோர்கள் இவனை விரும்பி வாழ்த்தி ஆரவாரம் செய்தார்கள் (மதுரைக். 523 - 526). இவன் காலத்தில்தான் வஞ்சி, கருவூர் என்று பெயர் மாற்றம் பெற்றது (அகம். 93, 263).

கோதை மார்பன் ஆட்சிக்காலத்தில், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் கருவூரை முற்றுகை யிட்டான் (புறம். 36, 37, 39). கோதைமார்பன் கோட்டைக்குள் ஒளிந்திருந்தான். முற்றுகை நெடுநாள் நீடித்தது. இறுதியில் கிள்ளி வளவன் கருவூரின் அகழியையும், நீர்நிலைகளையும், மதிலையும் ஊரையும் அழித்தான் (புறம். 373). கருவூரை வென்ற களிப்போடு, கிள்ளி வளவன் கூடலின் மேல் படையெடுத்தான். நெடுஞ்செழியன் படைத்தலைவனான பழையன் மாறன் கிள்ளி வளவனைத் தோற்கடித்தான். அதைக் கேள்விப்பட்ட கோதை மார்பன் பெருமகிழ்ச்சி அடைந்தான் (அகம். 346).

**சேரமான் குட்டுவன் கோதை (கி.மு. 150 - 125):**

சேரமான் குட்டுவன் கோதை, கோதை மார்பனின் மகனாவான். பிட்டங் கொற்றன் இவன் படைத் தலைவனாவான் (புறம். 172). குட்டுவன் கோதை நாட்டுக்குள் இரவலர் எளிதில் புகலாம். பகைவரால் நுழையமுடியாது என்று ஒரு பாடல் கூறுகிறது (புறம். 54).

குட்டுவன் கோதை உருவம் கொண்ட வெள்ளி நாணயம் ஒன்று கிடைத்துள்ளது.[80]

**சேரமான் மாரிவெண்கோ (கி.மு. 150 - 125):**

சேரமான் மாரிவெண்கோ, யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் மகனாவான்.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி இராசசூய வேள்விசெய்தபோது சேரமான் மாரி வெண்கோவும் பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும் வேள்விக்கு வருகை தந்து சிறப்பித்தார்கள். ஔவையார் மூவேந்தர்களையும் வாழ்த்திப் பாடினார் (புறம். 367).

**சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை (கி.மு.125 - 100):**

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை குட்டுவன் கோதையின் மகனாவான். உதியஞ்சேரலாதன் குழுமூரில் சமையல் கூடம் ஒன்றை அமைத்துப் பெருஞ்சோறு கொடுத்ததை இவன் ஒரு பாடலில் குறிப்பிடுகிறான் (அகம்.168). இவன் மனைவி இறந்தபோது இவன் பாடிய இரங்கல் பாடல் உள்ளத்தை உருக்கவல்லது (புறம். 245).

மாக்கோதையின் உருவம் தாங்கிய ஐந்து வெள்ளி நாணயங்களை ஆர். கிருஷ்ண மூர்த்தி வெளியிட்டுள்ளார். உருவத்தின் தலைமேல் மாக்கோதை என்ற பெயர் தமிழ் - பிராமி எழுத்தில் எழுதப்பட்டுள்ளது.[81] மாக்கோதையின் தந்தையான குட்டுவன் கோதையின் உருவம் தாங்கிய வெள்ளி நாணயமும் கிடைத்துள்ளதை மேலே கண்டோம்.

**சேரமான் கணைக்கால் இரும்பொறை (கி.மு. 100 - 75):**

சேரமான் கணைக்கால் இரும்பொறை, சேரமான் மாரி வெண்கோவின் பேரனாவான்.

---

80. ஆர். கிருஷ்ணமூர்த்தி குட்டுவன் கோதையின் உருவம் தாங்கிய வெள்ளி நாணயம் ஒன்றை 1994இல் வெளியிட்டுள்ளார். குட்டுவன் கோதை என்ற பெயர் உருவத்தின் தலைமேல் தமிழ் - பிராமி எழுத்தில் எழுதப்பட்டுள்ளது - ஐராவதம் மகாதேவன், "Recent Trends in Early Tamil Epigraphy" - Journal of the Institute of Asian Studies - Vol. XIII No.1 (sept., 1995).

81. Ibid - குறிப்பு (89)

இவன் சோழன் செங்கணானோடு போர் செய்து தோற்றான். சோழன் இவனைக் குடவாயில் கோட்டத்தில் சிறைவைத்தான். சேரன் சிறைக்காவலரைக் குடிநீர் தருமாறு கேட்டான். சிறைக்காவலர் நெடுநேரம் கழித்து நீரைக்கொண்டு அலட்சியமாக நீட்டினர். சிறைக்காவலரின் அலட்சியத்தைப் பொறுக்க முடியாத சேரன் நீரை அருந்தாமல் உயிர்விட்டான் (புறம். 74).

பொய்கையார் என்ற புலவர் களவழி நாற்பது என்ற நூலைப் பாடிக் கணைக்கால் இரும்பொறையைச் சிறைமீட்டார் என்று அந்நூலின் அடிக்குறிப்பு கூறுகிறது. களவழிநாற்பது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூலாதலால், சங்க காலத்தில் வாழ்ந்த கணைக்கால் இரும்பொறைக்கும் அதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

**சேரமான் வஞ்சன் (கி.மு. 50 - 25):**

சேரமான் கணைக்கால் இரும்பொறைக்குப் பிறகு சேரநாடு சீரழிந்தது. அவனுக்கு இரு தலைமுறைகள் கழித்துச் சேரமான் வஞ்சன் என்பவன் சேரநாட்டின் ஒரு சிறு பகுதியான பாயல் நாட்டை ஆண்டான் (புறம். 398).

**சேரமான் எந்தை (?)**

குறுந்தொகை 22ஆம் பாடலைப் பாடிய சேரமான் எந்தையைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

**சேரமான் இளங்குட்டுவன் (?)**

அகநானூறு 153ஆம் பாடலின் ஆசிரியர் சேரமான் இளங்குட்டுவன்; இவரைப்பற்றி வேறு ஒன்றும் தெரியவில்லை.

# சங்ககாலச் சேரர்



கி.மு.
300-275
சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை
275-250
சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை
சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன்
250-225
சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன்
சேரமான் பாலைபாடிய பெருங் கடுங்கோ
மருதம் பாடிய இளங் கடுங்கோ
சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்
பல்யானைச் செல்கெழு குட்டுவன்
225-200
சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
செங் குட்டு வன்
200-175
சேரமான் இளஞ்சேரல் இரும்பொறை
குட்டுவன் சேரல்
ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்
175-150
சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை
சேரமான் கோக்கோதை மார்பன்
150-125
சேரமான் மாரிவெண்கோ
சேரமான் குட்டுவன் கோதை
125-100
?
சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை
100-75
சேரமான் கணைக்கால் இரும்பொறை
?
75-50
?
?
50-25
சேரமான் வஞ்சன்
?

# பொருட்குறிப்பு அகராதி

---

# துணைநூற் பட்டியல்

## I. சங்க இலக்கியம்


1. சங்க இலக்கியம் - 12 தொகுதிகள்
   எஸ்.ராஜம் வெளியீடு (1957)

2. சங்க இலக்கியம் - 2 பகுதிகள்
   எஸ். வையாபுரிபிள்ளை பதிப்பு
   பாரி நிலையம் (1967)

3. பத்துப்பாட்டு - உ.வே.சாமிநாதையர் மூன்றாம் பதிப்பு

4. நற்றிணை - பின்னத்தூர் அ. நாராயணசாமி
   அய்யர் உரை - கழகம் (1962)

5. குறுந்தொகை - உ.வே. சாமிநாதையர் உரை
   - இரண்டாம் பதிப்பு (1947)

6. ஐங்குறுநூறு - உ.வே. சாமிநாதையர்
   ஐந்தாம் பதிப்பு (1957)

7. பதிற்றுப்பத்து - உ.வே. சாமிநாதையர்
   ஆறாம் பதிப்பு (1957)

8. பரிபாடல் - உ.வே. சாமிநாதையர்
   நான்காம் பதிப்பு (1956)

9. கலித்தொகை - பாகனேரி தனவைசிய இளைஞர்
   தமிழ்ச்சங்க வெளியீடு (1949)

10. அகநானூறு - ந.மு. வேங்கடசாமி நாட்டார்,
    ரா. வேங்கடாசலம்பிள்ளை உரை - கழகம் (1965)

11. புறநானூறு - உ.வே. சாமிநாதையர்
    மூன்றாம் பதிப்பு (1963)

12. புறநானூறு - 2 பகுதிகள்
    ஔவை சு. துரைசாமி (கழகம்) (1962, 1964)

13. சிலப்பதிகாரம் - உ.வே.சாமிநாதையர்
    எட்டாம் பதிப்பு (1968)

14. மணிமேகலை - உ.வே.சாமிநாதையர்
    ஆறாம் பதிப்பு (1965)

## II. தமிழ் நூல்கள்

**15.** ஆளவந்தார், ஆர்.
இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்
*தொகுதி 1 (1984) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*

**16.** *இராமச்சந்திரன் சி.ஈ.*
சங்ககால வரலாறு
*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் (1981)*

**17.** *கிருஷ்ணமூர்த்தி, இ.ரா.*
பாண்டியர்
பெருவழுதி நாணயங்கள் *(1987)*

**18.** சுந்தரம் மெ. - சங்ககாலத் தமிழரின்
கடல் வாணிகம், பாரிநிலையம் *(1978)*

**19.** *சுப்ரமணிய அய்யர் வி.மு.*
*பி.பி. சேஷாத்ரி:*
பழந்தமிழ் நூற் சொல்லடைவு - *3* தொகுதிகள்
பிரெஞ்சு ,இண்டாலாஜிகள் ஆய்வு நிறுவனம்
பாண்டிச்சேரி *(1967-1970)*

**20.** பிள்ளை கே.கே.
தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் *(1981)*

**21.** புருஷோத்தம் வி.பி.
- சங்ககால மன்னர் காலநிலை வரலாறு *(1989)*

## III. ஆங்கில நூல்கள்

22. Iravatham Mahadevan:
Recent Trends in Early Tamil Epigraphy
Journal of Institute of Asian Studies
Vol.XIII No.1, (Sept.1995)

23. Iravatham Mahadevan:
Tamil-Brahmi Inscriptions of the Sangam Age -
Proceedings of the second Internatinal
Conference Seminar of Tamil Studies (1968)-Vol.I

24. Nilakanta Sastry, K.A:
History of South India, O.U.P. (1966)

25. Nilakanta Sastry, K.A:
History of Sri Vijaya, Madras University (1949)

26. Nilakanta Sastry, K.A:
Colas, Madras University (1955)

27. Nilakanta Sastry, K.A. (Edr.)
A Comprehensive History of
India - Vol.II. Orient Langman (1957)

28. Pillai K.K: South India and Sri Lanka
Madras University (1975)

29. Sesha Aiyer K.G. - Cera Kings of the
Sangam period -Luzac Co., London (1937)

30. Sircar D.C. - Inscriptions of Asoka
Publications Division, Govt. of India

31. Sivaraja Pillai K.N. - Chronology
of the Early Tamils Madras University (1932)

32. Vaiyapuri Pillai S. - History of Tamil
Language and Lilterature - NCBH (1956)

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1969 தொகுதி-1 | 70.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1969 தொகுதி-2 | 65.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1970 தொகுதி-1 | 75.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1970 தொகுதி-2 | 70.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1970 தொகுதி-3 | 50.00 |
| தாய்நாட்டிலும் மேலைநாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| லவகுச நாடகம் | 30.00 |
| திருக்குறள் பூரணலிங்கம் பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 100.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| காசி விசுவநாதர் சதகம் | 40.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - 2 | 65.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறு நூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை-1 | 110.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு | 19.00 |
| மன்னான் சின்னாண்டிக் கதைப்பாடல் | 18.00 |
| தனிநாயகம் அடிகளாரின் ஆய்வுகள் | 22.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10.00 |
| நன்னூல் மூலமும் விருத்தியுரையும் | 225.00 |
| பல்லவர் செப்பேடுகள் முப்பது | 250.00 |
| பாண்டியர் செப்பேடுகள் பத்து | 125.00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45.00 |
| Critical Studies in Kural | 30.00 |
| Tamil India | 40.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை-2 | 110.00 |
| செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி | 20.00 |

Pub.No. 361 சங்ககால மன்னர்களின் காலநிலை-1 Rs. 56.00